ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# நாச்சியாரது அழகுநடை

செல்வி. தா. லோகநாயகி, M.A.B.Ed.M.Phil.,

*வெளியீடு:*

13-8-99

பிரமாதி ஆண்டு திருவாடிப்பூரம்

ஸ்ரீராமாநுஜா பதிப்பகம்

7/31, குப்பனூர்,

பேரூர் வழி,

கோயம்புத்தூர் - 641 010.

விலை : ரூ. 80/- தபாற்செலவு தனி

Srimatha Ramanujaya Nama:

# "NACHIYARATHU AZAGU NADAI"

*By*

Selvi : **D. LOGANAYAGI.** M.A.B.Ed., M.Phil.,

Copy Right : Publisher

Copies : 1000

Price : Rs. 80/-

This book is published with the Financial Assistance of Tirumala Tirupati Devasthanams Under their Scheme "Aid to Publish Religious Books"

*Copies Available at :*

Thiru Varadha Ramanuja Dhasan
Sri Ramanuja Publications,
7/31 Kuppanur (Post),
Perur (via), Coimbatore - 641 010.

*Printed at:*

Sri Ranga Nachiyar Achagam
214, East Uthara Street,
Srirangam, Trichy - 620 006.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

"திருமால் நெறி நூற்காவலர்"

**SRI S. KRISHNASWAMY IYENGAR,** M.A., B.L., Advocate,

**(SUDARSANAR)**

**3-B, Puthur Agraharam, Trichy - 620 017.**

## *அணிந்துரை*

"நாச்சியாருடைய அழகுநடை" என்னும் இந்நூல் ஆண்டாள் அருளிய திருப்பாவை, நாச்சியார் திருமொழி ஆகிய இரண்டு திவ்யப்பிரபந்தங்களைப் பற்றிய ஆய்வு நூலாகும். "கோதை நாச்சியாரது வாழ்வும் வரலாறும், நாச்சியாரது பிரபந்தங்களில் பெரியாழ்வார் பாசுரங்களின் செல்வாக்கு, திருப்பாவையில் பொதிந்திருக்கும் அழகு, நாச்சியாரது திருமொழியில் திரண்டிருக்கும் அழகு, நாச்சியாரது பிரபந்தங் களில் முப்பொருள் உண்மை அழகு, நாச்சியாரது பாசுரங்களில் ஐம்பொருள் விளக்க அழகு" ஆகிய தலைப்புகளில் இந்நூல் அமைந்துள்ளது எளிய இனிய தமிழ் நடையில் ஆண்டாளுடைய திவ்யப்பிரபந்தங்களின் பெருமைகளை இந்நூல் இயற்றிய செல்வி. தா. லோகநாயகி, M.A.B.Ed., அவர்கள் விளக்கியுள்ளது மிகவும் பாராட்டத்தக்கது. ஆத்திகர்கள் அனைவருக்கும் குறிப்பாக வைணவர்கள் பெற்று படித்துப் பயன் பெற வேண்டிய நூல் இது.

S. Krishnaswamy Iyengar
ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்
ஆசிரியர்

23-11-98

# அணிந்துரை

## கலையிலங்கு மொழியாளர் பேராசிரியர் முனைவர்

## இரா. அரங்கராஜன், P.hd.,

செல்வி.தா.லோகநாயகி, ஆழ்வார் திருமகளாராய் இவ்வுல குய்ய வந்த ஆண்டாள் நாயகியின் அருமை பெருமைகளை எல்லாம் ஆய்வு செய்து அறிஞர் பெருமக்களுக்கு நல்விருந்தாக நூல் ஒன்றினைப் படைத்து வெளியிட்டிருக்கிறார்.

'நாச்சியாரது அழகு நடை' என்ற பொதுத் தலைப்பின் கீழ் நால்வகை நடையழகுகளைச் சொல்லோவியங்களாகத் தீட்டியிருக்கிறார். 'இத்தனையும் நம்பெருமாள் நடையழகிலே காணலாம்' என்ற லோகாசாரியரின் திருவாக்கும் 'சதுர்கதி:' என்ற வான்மீகி முனிவரின் திருவாக்கும் நினைவுக்கு வருகின்றன. பொதிந்த அழகு, திரண்ட அழகு, முப்பொருள் அழகு, ஐம்பொருள் அழகு - என்றவாறு நாச்சியாரின் நால்வகை நடைத்திறன்களையும் அவர்தம் இருவகைப் படைப்புகளிலிருந்து தொகுத்தும் வகுத்தும் காட்டியிருக்கிறார்.

நூலின் முன்னுரைக்கண் கோதையின் வாழ்வும் வரலாறும் நுண்ணிய முறையில் அரிய செய்திகள் புலப்படக் காட்டப் படுகிறது.

"ஆண்டாள் நிலமகளின் திரு அவதாரம். உலகினர் உய்யும் நெறி காட்டவந்தவர். உய்வுபெறும் வழியைக் காலத் தால் அழியாத நூல்களாக வெளியிட்டவர்".

"ஆண்டாளின் அவதாரத்தால் மல்லிநாட்டில் அமைந்த வில்லிபுத்தூர் திவ்விய தேசமாயிற்று."

"பெண்ணாகப் பிறந்ததே ஆண்டாளின் ஏற்றம் சத்துருக் கனன், மதுரகவிகள் இவர்களோடு சேர்த்து எண்ணத்தக்கவ ளாய் ஆண்டாள் அடியார்களின் நிறைவையே கருதியிருந்தாள்."

"ஆழ்வார்களுடைய ஞான பக்தி வைராக்யங்கள் ஆண் டாளி டத்தில் பதின்மடங்காகப் பெருகியது."

"அந்தணர் குலச்சிறுமியான நாச்சியார் ஆயர்குலச்சிறுமி யாக நடையுடை பேச்சுக்களில் முற்றிலும் மாறித் தாழ்ந்து நின்றாள்."

"இராமாநுசருக்கும் ஆண்டாளின் வழியே விழியாக அமைந்தது. மாற்றுச் சமயத்தைச் சேர்ந்த பிட்டிதேவனையும் தன்பால் ஈர்த்து விஷ்ணுூர்த்தனனாக்கித் தம்முடைய அருட்பாரி வையால் அரவணைத்தார்."

இத்தனை செய்திகளையும் செல்வி லோகநாயகி சிறப்பாகத் தொகுத்துப் படைத்திருக்கிறார்.

பெரியாழ்வாரையே ஞான ஆசிரியராகக் கொண்டு பயின் றவள் நாச்சியார். பெரியாழ்வாரின் திருமொழிகளை ஆண்டாள் பொன்னேபோல் போற்றித் தன் படைப்புகளில் தழுவிக் கொண் டதை செல்வி லோகநாயகி சான்றுகளோடு நிரூபித்திருக்கிறார். இப்பகுதி ஒப்பிலக்கிய நோக்கில் ஆய்வு செய்யப்பட்டிருப்பது மிகவும் பாராட்டத்தக்கது.

திருப்பாவையுட் பொதிந்துள்ள அழகுகளை ஆசிரியர் எடுத்து விளக்கியிருப்பது கற்று இன்புறுதற்குரியது.

திருப்பாவையின் தொன்மை;
திருப்பாவை சொற்றொடர் விளக்கம்;
திருப்பாவையில் இயற்கையின் எழில்நலம்;
திருப்பாவையில் சொற்களூடே பளிச்சிடும்
இணையழகு, முரணழகு;
திருப்பாவையில் கருத்தைக்கவரும் சொல்லோவியங்கள்
திருப்பாவையில் முத்தமிழ்ச் செல்வம்
நாச்சியாரின் திருமொழியில் பிள்ளைத்தமிழ்
திருப்பாவையில் ஒரு திருப்பள்ளியெழுச்சி
திருப்பாவையில் ஒரு திருப்பல்லாண்டு
திருப்பாவையில் பாதாதி கேசவருணனை

ஆகிய சிறுதலைப்புக்களில் பல்வகைச் செய்திகளைச் சேமித்துத் தருகிறார் ஆசிரியர். இவை ஒரோன்றே விரித்துப் பயிலத் தக்கவை என்பதை ஆசிரியர் காட்டும் நுட்பம் வியத்தற்குரியது.

நாச்சியாரின் திருமொழிகளில் கண்ணனின் பிள்ளைப் பருவச் செயல்களை உணர்த்தியிருக்கும் திறனைச் செல்வி. லோகநாயகி தக்க மேற்கோட் பாசுரங்களோடு காட்டியிருக்கிறார்.

அகப்பொருளின் ஆட்சி மேம்பாடுகளை நாச்சியார் திருமொழி கொண்டு ஆசிரியர் மெய்ப்பித்திருக்கும் முறை பாராட்டுக்குரியது. சங்கத்துச் சான்றோர்களின் கூற்றுக்களை அரணாகக் கொண்டு ஆசிரியர் தம் முடிவுகளை நிருபித்துள்ளார்.

நாச்சியார் திருமொழியில் மேகமும் குயிலும் முல்லை மலரும் களிநடம் புரியும் காட்சிகளை ஆசிரியர் அழகுபடக் கோவை செய்து காட்டியிருக்கிறார் - பல்வகை இலக்கியவகைகள் (Genre) ஆண்டாளின் கைத்திறத்தால் பளிச்சிடுகின்றன.

இறுதியாக, திருப்பாவை நாச்சியார் திருமொழி ஆகிய இரு நூல்களிலும் உள்ளுறையாகக் கிடக்கும் மெய்ப் பொருட்கருத்துக்களை ஆசிரியர் வெளிப்படுத்தியிருப்பது இவ் ஆய்வு நூலுக்கு அணியாகத் திகழ்கிறது.

சித்து அசித்து ஈசுவரன் என்ற முப்பொருள் உண்மைத் அவற்றுள் சித்தின் இயல்புகள்; அசித்தின் இயல்புகள்; ஈசுவரனின் இயல்புகள் என்று தனித்தனியாக விரித்துக் கூறியுள்ளார்.

நாராயணன், கேசவன், மூர்த்தி, மாயன், மாமாயன், மாதவன் - போன்றுவரும் சொற்களின் பொருளை விரித்துக் கூறியிருக்கிறார். மேலும் அர்த்தபஞ்சகத்தின் விளக்கங்களையும் அவை ஆண்டாள் நூலுள் உறையுமாற்றையும் ஆசிரியர் விளக்கமாகவே விளம்பியுள்ளார்.

செல்வி லோகநாயகியின் ஆய்வுப் படைப்பினால், நாச்சியாரின் இரு நூல்களும்.

1. இலக்கியத் திறன்
2. இலக்கணச் செம்மை
3. நாடகப் பாங்கு
4. தத்துவச்சிறப்பு

ஆகிய அழகுகள் பொதிற்து மிளிர்ந்து காலத்தைவென்று நிற்கும் அழியாப் படைப்புகள் என்பதைக் கற்போர் உணர்வார்கள்.

நீங்காத செல்வம் நிறைக!
எங்கும் திருவருள் பெறுக!!

மதுரை - 3 இங்ஙன்

7.4.99 **இரா. அரங்கராஜன்.**

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



'ஆரண நூல்காவலர்'

**ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ அ. கிருஷ்ணமசார்யர் ஸ்வாமி**

M.A., (Tamil), M.A., (Public Admn), M.A. (Sociology)

ஆசிரியர் வெண்சங்கம்.

இயக்குநர் ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ அஞ்சல்

வழிக் கல்வி முறை இயக்ககம்.

## *அணிந்துரை*

எமது நிறுவனத்தின் மூன்று நிலை ஸ்ரீவைஷ்ணவக் கல்வியில் மூன்றாம் நிலையான பிரபன்னா பட்டப்படிப்பினை முடித்து 1998ம் ஆண்டு "ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ" பட்டத்தினைப் பெற்றவர் செல்வி. லோகநாயகி அவர்கள்.

பிரபன்னா தேர்வில் வெற்றி பெறுவதற்குக் கட்டாயப் பாடமாக 30 தலைப்புகள் ஏதேனும் ஒரு தலைப்பில் 160 பக்கங்களுக்குக் குறையாமல் 'ஆய்வுக்கட்டுரை' ஒன்று எழுதப் படவேண்டும் என்ற விதிமுறைக்கு உட்பட்டு எழுதப்பட்ட ஆய்வு கட்டுரையே இந்நூலாகும். செல்வி லோகநாயகி அவர்கள் "நாச்சியாரது அழகுநடை" என்ற தலைப்பில் எழுதப்பட்ட அந்த ஆய்வுக் கட்டுரை அச்சு வடிவில் திருவேங் கடவனது இன்னருளால் இப்பொழுது வெளிவந்துள்ளது.

மூன்று நிலைத் தேர்வுகளிலும், மிகவும் பாராட்டத்தக்க முறையில் பயின்ற இந்த ஆய்வு நூலின் ஆசிரியர், தாம் பயின்ற

ஸ்ரீ வைஷ்ணவக் கோட்பாடுகளை எல்லோரும் அறிந்து கொள் ளும் வகையில் நாச்சியாருடைய பிரபந்தத்திங்களின் பெருமை களைப் பல்வேறு கோணங்களில் எடுத்துரைத்துள்ளார்.

பாடவல்ல நாச்சியாருக்கு, தாயாய், தந்தையாய், நல்லாசிரியனாய், அமைந்தவர் பெரியாழ்வார். "பல்லாண்டு பாடிய" பட்டர்பிரான் அருளிச்செய்த நூல்களான 'திருப்பல் லாண்டு','பெரியாழ்வார் திருமொழி' ஆகியவற்றிலிருந்து மேற்கோள்கள் பல எடுத்துக்காட்டி நாச்சியாரது நூல்களில் பெரியாழ்வரது பாடல்களின் தாக்கத்தினை, விளக்கியுள்ளார். செல்வியார் இரண்டாம் இயலில்,

நாச்சியார் தம் அக உணர்வுகளுக்கு போக்குவீடாகவும், அதேசமயம் நன்நெறியினை நாட்டுமக்களுக்கு எடுத்துரைக்கும் சீரிய பணியாகவும், தமது பாடல்களை அருளிச்செய்துள்ளார். அவ்வுணர்வினையும், நெறிகளையும் எடுத்துரைக்கும் பான்மையினை செல்வி. லோகநாயகி அவர்கள் "திருப்பாவை யில் பொதிந்திருக்கும் அழகு","நாச்சியார் திருமொழியில் திரண்டிருக்கும் அழகு" என்ற மேல் இரண்டு தலைப்புகளில் அழகுற எடுத்துரைத்துள்ளார்.

ஸ்ரீ வைஷ்ணவர்கள் அனைவரும் அறிந்து கொள்ள வேண்டிய மூன்று தத்துவங்களான சித், அசித், ஈச்வர தத்துவங்களையும் 'ஐம்பொருள்' எனப்படும் அர்த்தபஞ்சக ஞானமும் நாச்சியாரது பிரபந்தங்களில் பொதிந்துள்ளமை

யினை ஐந்து மற்றும் ஆறாம் இயல்களில் விளக்கக் குறிப்புக ளோடு எடுத்துரைத்துள்ளார்.

சங்க இலக்கியங்களிலிருந்தும் தஞ்சைவாணன் கோவை போன்ற பிற்கால இலக்கியங்களிலிருந்தும் பல மேற்கோள்களை இணைத்து நாச்சியாரது 'சங்கத் தமிழ் மாலை'யினை புதிய பொலிவுடன் கொடுத்துள்ளார் இந்நூலாசிரியர்.

ஸ்ரீ வைஷ்ணவக் கோட்பாட்டு விளக்கங்கள் மணிப்பிர வாள நடையில் அமைந்துள்ளதால் எல்லோரும் படித்து இன்புற இயலவில்லையே என்ற நிலைமையினைக் கருத்திற் கொண்டு இந்த ஆய்வுக் கட்டுரை எழுதப்பட்டுள்ளது என்பதை இந்நூலை முழுமையாகப் படிப்போர் உணரலாம்.

இது போன்ற புதிய அணுகுமுறையில் கட்டுரைகள் பல படைக்கப்படவேண்டும். நாடெங்கும் சமத்துவத்தினையும், அடியார்களுக்கு அன்பு பூண்டு ஒழுகுவதே முதன்மையான இறைப்பணி என்ற முழக்கத்தினை அன்றும், இன்றும் செய்து வரும் ஸ்ரீ வைஷ்ணவ குலம் தழைத்திட குழழகர், வாயழகர், கண்ணழகர் கொப்பூழில் எழுகமலப் பூவழகரான பெரியபெரு மாள் திருவடிகளில் வேண்டி நிற்கிறேன்.

*இங்ஙனம்,*

**அ. கிருஷ்ணமாசார்யர்,**
**ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ**

ஸ்ரீரங்கம், 13-07-1999

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

*ஆசாரியன் திருவடிகளே சரணம்*

## *நன்றியுரை*

“என்னைப் புவியில் ஒரு பொருளாக்கி, * மருள் சுரந்த
முன்னைப் பழவினை வேரறுத்து * ஊழி முதல்வனையே
பன்னப் பணித்த இராமாநுசன் பரன்பாதமும் என்
சென்னித் தரிக்க வைத்தான் * எனக்கு ஏதும் சிதைவில்லையே”

இராமாநுச நூற்றந்தாதி - 4

என்ற திருவரங்கத்தமுதனாரின் திருவாக்கிற்கேற்ப, பொருளல்லாத என்னைப் புவியில் ஒரு பொருளாக்கி, சீல மில்லாச் சிறியேனாகிய அடியேனும், “நாச்சியாரது அழகு நடை” என்ற இந்நூலைப் படைப்பதற்கானத் தகுதியை ஏற்படுத்தியவர், அடியேனது ஆசார்யப் பெருந்தகை, கீர்த்தி மூர்த்தியான ஸ்ரீ.உ.வே. வேதவியாச திருமலை பட்டர் ஸ்வாமி கள் ஆவார். ஸ்வாமிகளின் தேனே மலரும் திருவடித் தாமரை கட்குத் தலையல்லால் கைம்மாறிலேன்.

“ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்” என்ற பத்திரிகை மூலம், எம்பெருமானின் திருவாழி எனச் சுழன்று வைணவ சம்பிரதாயத் தைப் பாதுகாத்து வருபவர், வைணவச் சமய அரும்பெரும் பெட்டகங்களான பல நூல்களையும் வெளியிட்டு வருபவர்,

ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், (ஸுதர்சனர்) ஸ்வாமிகள், அன்னார் அடியேனது நூலிற்கு அணிந்துரை வழங்கியுள்ளமை அடியேன் பெற்ற பெரும்பேறாகும். ஸ்வாமிகள் திருவடிகட்குத் தலையல்லால் கைம்மாறிலேன்.

"ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ" என்ற இயக்கம் அஞ்சல் வழி வைணவக் கல்வியை, வைணவ ராஜதானியாம் திருவரங்கத் திருப்பதியை தலைமையிடமாகக் கொண்டு, திறம்பட நடத்தி வருகிறது. அக்கல்விமுறைப் பயிற்சியில், அடியேனையும் சேர்த்துக் கொண்டு வைணவத்தின் அடிநிலைகளை அறிந்து கொள்ள ஆவன செய்து ஆர்வமூட்டிய "ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ" திரு. அ. கிருஷ்ணமாசார்ய ஸ்வாமிகள் திருவடிகட்கு என்றும் நன்றிக் கடன்பட்டுள்ளேன்.

"நாச்சியாரது அழகு நடை" என்ற இந்நூலை அடியேன் எழுதுங் காலத்து, நூல் அமைப்பு, இலக்கிய நயம், ஒப்பு நோக்குக் கருத்துகள் அமைய வேண்டிய முறைகளை உணர்த்தி நெறி காட்டி உதவிய, "நம்பிள்ளை ஈட்டுத் திறன்" என்ற ஆய்வு நூலின் ஆசிரியர். மதுரைப் பேராசிரியர், "கலையி லங்கு மொழியாளர்" டாக்டர். இரா.அரங்கராசன், M.A. Ph.d., அவர்கள் சிறந்த முறையில் அணிந்துரையும் வழங்கியுள்ளார். அவர்தம் திருப்பாத கமலங்களுக்கு அடியேன் நன்றி கலந்த தீர்க்க தண்டத்தை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

"இளமையிற் கல்" என்ற ஔவையின் மொழிக்கேற்ப அடியேனது இளமைப் பருவம் தொட்டு வைணவ நூல்களை அறிமுகப்படுத்தி, ஆண்டாள் நாச்சியாரின் பாடல்களை மனனம்

செய்வதில் ஊக்கமளித்து, இன்று எழுத்துத்துறைக்கு அறிமுக மாகக் காரணமாக இருப்பவர், அடியேனது பாட்டனார், திரு. வரதராமானுஜதாசர். (தலைவர். ஸ்ரீஇராமாநுஜ மன்றம், கோவை) ஆவார். அவர் திறத்து அடியேனது உளம் நிறைந்த நன்றியையும், வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் எழுதுங்காலத்து அடியேனுக்கு ஏற்பட்ட ஐயங்களைத் தமது ஓய்விலா, ஸ்ரீ வைஷ்ணவப் பணிகள், கோவை ஸ்ரீ ராமாநுஜ மன்றச் செயல்பாடுகள் ஆகியவற்றிற்கும் இடையே அன்புள்ளத்தோடு, திருத்திச் செம்மைப் படுத்திப் பெரிதும் உதவி புரிந்தவர், "பரகாலன் பொன்னடி", திரு. இரா. பரகால இராமாநுஜம் M.A. (செயலர், ஸ்ரீ இராமாநுஜ மன்றம் கோவை) அவர்கட்கு அடியேனது பணிவான நன்றியை உரித்தாக்குகின்றேன்.

பள்ளிச் செயல்பாடுகளுக்கிடையேயும், இவ்வாறு ஒரு நூல் உருவாவதற்கு அனுமதித்தவர், மதிப்பிற்கும் மரியாதைக்கு முரிய பெரியவர் திரு. அ. சுப்பிரமணியம், Ex.M.L.A., (செயலர், தியாகி. என். ஜி. ஆர் நினைவு உயர்நிலைப்பள்ளி, கோவை) அவர்கட்கு எனது பணிவான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

"நாச்சியாரது அழகுநடை" என்ற இந்நூலினைப் பள்ளி அலுவல்களுக்கிடையேயும், உருவாக்க முடிந்தது என்றால் அதற்கு முழுக்க முழுக்கப் பெரிதும் துணை புரிந்தவர் என்ற பெருமை திரு. கோ. தாமோதரன், B.Sc., B.T. (முன்னாள் தலைமையாசிரியர், தியாகி. என்.ஜி.ஆர் நினைவு உயர்நிலைப் பள்ளி, கோவை) அவர்களைச் சாரும். அவர்கட்கு என் மனம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் வெளிவருவதில் மிகுந்த மகிழ்ச்சி அடைபவர் வைணவ சமய நூல்களைக் கற்பதில் மிகுந்த ஆர்வம் படைத்தவர். கவிஞர். அர.நித்தியானந்தன், M.A.M.Ed.M.Phil., (தலைமை ஆசிரியர், தியாகி. என்.ஜி.ஆர் நினைவு உயர்நிலைப் பள்ளி, கோவை) அவர்கட்கும் எனது பணிவான நன்றியைக் கூறிக் கொள்கிறேன்.

உற்றுழி உதவி ஊக்கமளித்து உயர்வடையச் செய்த உன்னதத் தந்தையார் திரு. தாமோதரசாமி அவர்கட்குப் பெரிதும் நன்றிக் கடன்பட்டுள்ளேன்.

பல்லாற்றானும் பாங்குற உதவிய அன்புத்தாய் இராசாமணி அவர்களுக்கும், பாட்டியார் திருமதி பெருந்தேவித் தாயார் அவர்களுக்கும், சகோதர, சகோதரிகளுக்கும் எனது மன மார்ந்த நன்றிகளை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

இந்நூல் அலர்மேல் மங்கையுறை மார்பனான திருவேங்கட முடையான் திருவருள் திறத்தாலும், திருமலை திருப்பதி தேவஸ்தான நிதியுதவியினாலும் வெளியிடப் பெற்றுள்ளது. தேவஸ்தானத்தாருக்கு அடியேனது நன்றி மலர்களைக் காணிக்கையாக்குகின்றேன். இந்நூல் அடியேனது முதல் முயற்சி, பெரியோர்கள் பிழை பொறுத்துத் திருத்திப் பணி கொள்ள வேண்டுமாய் விண்ணப்பித்துக் கொள்கிறேன்.

இந்நூல் சிறந்த முறையில் அச்சிட்டு வெளிவரப் பெரிதும் உதவி புரிந்த ஸ்ரீரங்கம், ஸ்ரீரங்க நாச்சியார் அச்சக உரிமை யாளர், மற்றும் அலுவலர்கள் அனைவருக்கும் எனது உளம் நிறைந்த நன்றியினை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

*இப்படிக்கு*

*அடியேன் இராமானுச தாஸ்யை*

13.07.99

**தா. லோகநாயகி**

# முன்னுரை

உலக மக்களை இன்றைய அறிவியல் வளர்ச்சியோடு இணைந்து பண்பாட்டு வளர்ச்சியும் ஏற்பட வழிவகுப்பது சமயம் ஆகும். இச்சமயங்களில் பரம வைதிக மதம் எனப்படும். இந்து மதத்தில் சைவம், வைணவம் என்ற இரு பெரும் பிரிவுகள் உள்ளன. வைணவக் கொள்கைகளை அழிக்க இயலா இலக்கிய வடிவமாக்கியவர்கள் ஆழ்வார்கள். அவர்களுள் கோதை நாச்சியார் ஒருவரே பெண்பாலராகத் திகழ்பவர். நாச்சியாரது நடை அழகு பற்றியும் அவரது அழகு நடை இன்றைய வைணவ உலகிற்கு வழிகாட்டும் வகை பற்றியும் "நாச்சியாரது அழகு நடை" என்ற நூல் அமைகின்றது.

## முதன்மை ஆதாரம்

பாடவல்ல நாச்சியாரின் பனுவல்களாகிய திருப்பாவை, நாச்சியார் திருமொழி மட்டுமே, இந்நூலிற்கு முதன்மை ஆதாரங்களாக அமைகின்றன.

## துணைமை ஆதாரம்

அருளிச்செயல்களாகிய கட்டிப் பொன்னைப் பணிப் பொன்னாக்கிக் காட்டும், ஆசார்யர்களால் உருவாக்கப் பெற்ற வியாக்கியானங்கள், அம்மையாரின் பிரபந்தங்களுக்கு அண்மைக் காலத்து எழுந்த உரைகள், அன்னையாரின் கருத்துக்களைச் சொல்லோவியமாக்கி வெளிவந்த கட்டுரைகள், சூடிக்கொடுத்த சுடர்க்கொடியின் ஈரச்சொற்களைப் பருகி, இன்னமுத மழைகளாக வெளிப்பட்ட அறிஞர் பெருமக்களின் சொற்பொழிவுகள் ஆகியவை இந்நூலிற்கு ஆதாரங்களாக அமைகின்றன.

இந்நூல்,

1. கோதை நாச்சியாரது வாழ்வும் வரலாறும்
2. நாச்சியாரது பிரபந்தங்களில் பெரியாழ்வார் பாசுரங்களின் செல்வாக்கு
3. திருப்பாவையில் பொதிந்திருக்கும் அழகு
4. நாச்சியாரது திருமொழியில் திரண்டிருக்கும் அழகு
5. நாச்சியாரது பிரபந்தங்களில் முப்பொருள் உண்மை அழகு
6. நாச்சியாரது பிரபந்தங்களில் ஐம்பொருள் விளக்க அழகு.

என்ற உட்பிரிவுகளைக் கொண்டுள்ளது.

முதற்பிரிவில் கோதை நாச்சியாரது அவதாரச் சிறப்பு, இளம் பருவச் செயல்கள், அவரது வாழ்வு நெறியான் தெரிவிக்கப்படும் தத்துவங்கள் ஆகியன பற்றிய செய்திகள் கூறப்படுகின்றன.

நாச்சியாரது பிரபந்தங்களில் பெரியாழ்வார்தம் பாசுரங்களின் செல்வாக்கு அமைந்துள்ள விதம் குறித்து இரண்டாவது பிரிவில் உரைக்கப்படுகின்றது.

பாவை பாடிய திருப்பாவையில் பொதிந்திருக்கும் அழகுகள் பற்றி மூன்றாம் பகுதியில் பேசப்படுகின்றன.

நான்காம் பகுதியில் பருந்தாட்களிற்றுக்கருள் செய்த பரமன் தன்னை பாரின் மேல் கண்டமையைக் காட்டும் நாச்சியாரின் திருமொழியில் திரண்டிருக்கும் அழகுகள் குறித்து உரைக்கப் படுகின்றன.

ஐந்தாம் இயலில் வைணவக் கோட்பாடுகளில் முப்பொருள் உண்மை எனப்படும் சித், அசித், ஈசுவரன் ஆகிய தத்துவங்கள் நாச்சியாரது பிரபந்தங்களில் அமைந்துள்ள அழகு ஆராயப் படுகின்றன.

ஆறாம் பகுதியில் பிரபந்நன் அறிய வேண்டிய ஐம்பொருள் களான இறைநிலை, உயிர்நிலை, தடை, தக்கநெறி, வாழ்வு ஆகியன அன்னையாரின் அருள் மொழிகளில் தெளிவுபடுத்தப் பெறும் விதம் பற்றிய கருத்துக்கள் உரைக்கப்படுகின்றன.

# பொருளடக்கம்

இயல்

# கோதை நாச்சியாரது வாழ்வும், வரலாறும்

## அவதாரச் சிறப்பு

உலகைக் காத்தலுக்கென்றே உரியவர் திருமாலாகிய நாராயணன். இவருக்குத் திருமகள், மண்மகள், நீளை என தேவிமார் மூவர், இவர்களுள் மண்மகளாம் பூமிதேவி தன்னிடம் மிகுந்த அன்பு கொண்டு ஒழுகும் அடியார்களாகிய குழந்தை களின் நலனையே பெரிதும் விரும்புபவர். அதனால், 'இருள் தருமா ஞாலமாகிய'[1], பிறவிப் பெருங்கடலில் வெறுப்படையா தவர். இதனால் இந்நிலவுலகில் தானும் ஒரு ஜீவனாக அவதரித் தவர். உலகில் மானுடப் பிறப்பாகப் பிறந்தாலும், எம்பெருமா னுக்கே என்றும் அடிமை கொண்டிருந்தவர். அதுமட்டுமின்றி ஒவ்வொரு ஜீவாத்மாவும் எம்பெருமானை அடைவதற்கான வழியைத் தான் பின்பற்றியதோடு நில்லாமல் அதனை உல கோரும் அறிந்து உய்யும் பொருட்டுத் தன் நிலையிலிருந்து தாழ வந்ததே கோதை நாச்சியாரது, அவதாரச் சிறப்பாகின்றது.

## அடியார் பெருமை.

எம்பெருமானிடத்து அடிமை பூண்ட அடியார்களின் குணமாகக் கூறப்படும்.

> நரகும் சுவர்க்கமும் நாண்மலராள் கோனைப்
> பிரிவும் பிரியாமையு மாய்த் *— துரிசற்றுச்
> சாதகம்போல் நாதன் தனதருளே பார்த்திருத்தல்
> கோதிலடியார் குணம்[2]

1. நம்மாழ்வார், திருமொழி (10-6-1)
2. அருளாளப்பெருமாள் எம்பெருமானார், ஞான சாரம், பா.2

என்ற கருத்திற்கேற்ப அமைந்துள்ளது கோதை நாச்சியாரது பிரபந்தங்கள். அடியார்கள் நிலையை ஓவியம் போல் தமது வாழ்வின் மூலம் படம்பிடித்துக் காட்டியதோடு மட்டுமல்லாமல், அதனைப் பின்புள்ளாரும் அறிந்து போற்றத்தக்க வகையில், தமது நூல்கள் மூலமாக வெளியிட்டருளினார்.

## புத்தூர் - திவ்ய தேசமாகுகை

கோதை நாச்சியாரும், அவரது தகப்பனாரும், பிறந்து வளர்ந்த பெருமையினாலேயே திருவில்லிபுத்தூர் தெய்விகத் தன்மை பெற்று விளங்குகின்றது எனலாம்.

> மென்னடையன்னம் பரந்து விளையாடும்
> வில்லிபுத்தூருறைவான் தன்[3]

> மின்னனைய நுண்ணிடையார் விரிகுழல்மேல் நுழைந்த வண்டு
> இன்னிசைக்கும் வில்லிபுத்தூர் இனிதமர்ந்தாய்![4]

என்று கூறுவதனால் பாண்டிய நாட்டுப்புத்தூர், "ஸ்ரீவில்லிபுத்தூர்" என்ற திவ்யதேசமாக விளங்கும் பான்மையை உணர இயலுகின்றது

## ஆழ்வார்கள் - ஆண்டாள் பகவதநுபவ வேறுபாடு

வைணவ சமயத்தைப் போற்றிப் புகழடையச் செய்தவர்கள் ஆழ்வார்கள். பக்தி நிலையில் ஆழங்காற்பட்டு நிலை நின்றவர்கள் ஆழ்வார்கள் பன்னிருவர் ஆவர். அவர்களுள் பெண்ணாகத் திகழ்பவர் கோதை நாச்சியார் ஒருவரேயாவார்.

முதலாழ்வார்கள் தொடங்கி திருமங்கை மன்னன் ஈறாக (பெரியாழ்வார், மதுரகவிகள் தவிர்த்து) ஆழ்வார்கள் அனைவரும் பகவதநுபவத்திற்கு (இறைவனை அநுபவிக்க வேண்டும் என்பதற்கு) ஆசைப்பட்டவர்கள்.

3. ஆண்டாள், நாச்சியார் திருமொழி (5-5)
4. பெரியாழ்வார். பெரியாழ்வார் திருமொழி (2-2-6)

## இலக்குவன் - ஆழ்வார்கள் ஒப்பு நோக்கு

வன்தாளினிணை வணங்கி வளநகரம்
தொழுதேத்த மன்னனாவான்
நின்றாயை அரியணை மேலிருந்தாயை
நெடுங்கானம் படரப் போகு வென்றாள்[5]

என்கிறபடி, அயோத்தியைவிட்டு ஆரண்யம் புகுந்த, இராம பிரான் பால் கொண்ட நலனைத் தவிர வேறொன்றில் கண்வை யாத இலக்குவனின் நிலைக்கு ஒப்பான நிலையாகும் ஆழ்வார் கள் நிலை.

இவர்கள் பகவதநுபவம் உண்டபோது ஒரு வார்த்தையும், உண்ணாத போது ஒரு வார்த்தையும் பேசுபவர்கள்,

காற்றினைப் புனலைச் சென்று நாடிக்
கண்ணமங்கையுள் கண்டு கொண்டேனே[6]

என்று பகவதநுபவம் உண்டபோது ஒரு வார்த்தையும்,

*கடியன் கொடியன் நெடியமால் உலகம் கொண்ட அடியன்*[7]

என்றும்,

ஆசை வழுவாதேத்தும் எமக்கிங்கிழுக்காய்த்து * அடியோர்க்குத்
தேசமறிய உமக்கே யாளாய்த் திரிகின்றோமுக்கு *
காசினொளியில் திகழும் வண்ணம், காட்டீர் எம்பெருமான்! *
வாசிவல்லீர்! இந்தளூரீர்! வாழ்ந்தேபோம் நீரே![8]

என்று உண்ணாத போது ஒருவார்த்தையும் பேசுவதைக் காணலாம்.

5. குலசேகராழ்வார், பெருமாள் திருமொழி (9-1)
6. திருமங்கையாழ்வார், பெரியதிருமொழி (7-10-5)
7. நம்மாழ்வார், திருவாய்மொழி (5-3-5)
8. திருமங்கையாழ்வார், பெரியதிருமொழி (4-9-4)

## பரதாழ்வான் - பெரியாழ்வார் ஒப்புநோக்கு

சக்கரவர்த்தி திருமகனாகிய இராமன் நலனிலே பெரிதும் அக்கறை கொண்டு அவருக்கு அடிமை செய்வதையே தம் வாழ்வாகக் கொண்டு 'ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை'[9] செய்தவர் இலக்குவன்.

இராமனுக்கே தொடர்ந்து அடிமைச் செய்திருந்தாலும், என்னுடன் காட்டுக்கு வரவேண்டாம் என்று இராமன் கூறியதற்கு மறுப்புக் கூறி, இராமனுக்கு என் வருமோ என்றஞ்சி அவரை விட்டுப் பிரியாது அடிமை செய்தார் என்பதை நோக்கும்போது இராமனது சொல்லை மீறிய சிறு தொய்வினை இலக்குவனிடம் காணலாம்.

ஆயின் நம்மாழ்வாரால் கோதிலடியார் என்று உருவகிக்கப் பட்ட பரதனிடம் இராமனது சொல்லையும் நலனையும் தம் வாழ் வாகக் கொண்ட பெற்றிமை பெரிதும் காணப்படுகிறது. இரா மனை விட்டுப் பிரிந்த நிலையிலும், இராமன் சொல்லை மீறாத அடிமை நிலையை பரதனிடம் காணலாம். இராமனது நலனே தம் வாழ்வாகக் கொண்ட பரதனது நிலை பெரியாழ்வாரது நிலையாகும்.

இந்நிலையில் எம்பெருமானின் திவ்ய மங்கள விக்ரகத்திற்குத் தீங்கு நேர்ந்து விடுமோ? என்று அஞ்சிக் காப்பிட்டுப் பல்லாண்டு பாடியவர் பெரியாழ்வார்.

பொங்கும் பரிவாலே வில்லிபுத்தூர்ப்பட்டர்பிரான்
பெற்றான் பெரியாழ்வாரென்னும் பெயர்[10]

என்பதனாலும் இக்கருத்தை உறுதிப்படுத்த இயலும்.

9. நம்மாழ்வார், திருவாய்மொழி (3-3-1)
10. மணவாளமாமுனிகள், உபதேச ரத்தினமாலை (18)

**சத்ருக்கனன் - கோதாதேவி - மதுரகவியார் ஒப்புநோக்கு**

இராமனது நலனே தம் வாழ்வாகக் கொண்ட பரதனை யல்லது வேறு சரணறியாதவர் சத்ருக்கனன். அதேபோல் எம்பெருமானின் நலனிற்கு ஆசைப்பட்ட பெரியாழ்வாரைக் காட்டிலும், எம்பெருமான் அடியார்களிடத்தில் அன்பு கொண்டவர்கள் கோதா தேவியும் மதுரகவியாழ்வாரும் ஆவர். எனவே சத்ருக்கனது நிலையே இவர்களது நிலையும் ஆகும்.

> பகவதநுபவத்தை ஆசைப்பட்ட ஆழ்வார்களுக்கும், பகவத் ஸம்ருத்தியை (நிறைவில்) ஆசைப்பட்ட பெரியாழ்வாருக்கும் நெடுவாசியுண்டு. பகவத் ஸம்ருத்தியை ஆசைப்பட்ட பெரியாழ்வாருக்கும் பாகவத ஸம்ருத்தியை ஆசைப்பட்ட ஆண்டாளுக்கும் அம்மாதிரியே நெடுவாசி யுண்டு. ஆழ்வார்கள் இளைய பெருமாளைப் போன்றவர்கள். பெரியாழ்வார் பரதாழ்வானுக்கு ஒப்பானவர். ஆண்டாளும் மதுரகவிகளும் ஸ்ரீசத்ருக்கனாழ்வானை ஒப்பர்கள்[11].

**கோதை நாச்சியார் தாமுணர்ந்து இறைவனை உணர்த்தியமை**

ஆழ்வார்கள் அனைவரும் எம்பெருமானாலே மயர்வற மதிநல மருளப் பெற்றவர்கள். ஆனால் கோதை நாச்சியாரோ எம்பெருமானையே பள்ளியுணர்த்தியவர்.

எம்பெருமானுக்குத் திருப்பள்ளியெழுச்சி பாடிய விப்ர நாராயணரும், எம்பெருமானாலே உணர்த்தப்பட்ட பின்பே, 'கதிரவன் குணதிசை' என்று தொடங்கி திருப்பள்ளியெழுச்சி அருளிச்செய்தார். ஆனால் கோதை நாச்சியாரோ,

11. பெரியவாச்சான்பிள்ளை, நாச்சியார் திருமொழி வியாக்யானம், அவதாரிகை

அவரைப் பிராயம் தொடங்கி என்றும்
ஆதரித்தெழுந்த என் தடமுலைகள்
துவரைப் பிரானுக்கே சங்கற்பித்துத்
தொழுது வைத்தேன்[12].

என்கிறபடி, தாம் பிறந்தது முதல் கேசவனையே காமுற்றவராக இருந்து, இறைவனைத் திருப்பாவைப் பாடல்களில் பள்ளி எழுப்பினார்.

## ஆழ்வார்கள் நாயகி பாவனையும் - ஆண்டாளும்

ஆண் ஆணைக் கண்டு (பெண் வேடமாக ஏற்றும்) காதல் கொள்வது மேட்டு நிலத்து மடை. ஆனால் பெண் ஆணைக் கண்டு காதல்கொள்வது பள்ளமடை ஆகும். எனவே ஆழ்வார் களுடைய பக்தியைக் காட்டிலும் பதின்மடங்கு அதிகமான அன்பையுடையவர் கோதை நாச்சியார்.

பதின்மருடைய ஜந்மமும் ஸ்திரீ தனமாக இவள் பக்கலிறே குடி கொண்டது. பத்துப் பேர்க்கு ஒரு பெண் பிள்ளையிறே[13]

## எம்பெருமான் தாழவந்தமை

திருமகள், மண்மகள், ஆய்மகளுடன் கொலு வீற்றிருந்து அரசு செலுத்துமிடம் மேல் உலகமாகிய பரமபதம்.

தேவர் கூப்பீடு கேட்டு அவர்கள் குறை முடித்து வைக்கும் பொருட்டு அலைகடலில் அரவமளியில், அறிதுயில் கொள்ளும் இடம் திருப்பாற்கடல்.

உயிர்கள் தன்னை அடைந்து உய்வடைய வேண்டும் என்பதனால், விண்ணுலகிற்கும் மண்ணுலகிற்கும் நாயகன்

12. ஆண்டாள், நாச்சியார் திருமொழி (1-4)

13. பெரியவாச்சான் பிள்ளை, நாச்சியார் திருமொழி வியாக்யானம்

துவாபரயுகத்தில் இடைக்குலத்தில் கண்ணனாகத் தாழ வந்து பிறந்தான். அப்போது இடைக் குலப்பெண்கள் கண்ணனை அடைய வேண்டுமென்பதற்காக நோன்பு நோற்றனர்.

## கோதை நாச்சியார் தாழவந்தமை

உபயவிபூதிக்கும் நாயகன் இடைக்குலத்தில் பிறந்து எளிமைக் குணமே நிரம்பப் பெற்று இச்சையுடையோர்க்கு வீட்டின்பத்தை அளித்தான். அதேபோன்று கோதை நாச்சியாரும், தாம் அந்தணகுலத்தில் வளர்ந்தாலும், இறைவனை அடைவதற்கு உபாயமாக, துவாபரயுகத்தில் கோபியர்கள் மேற்கொண்ட நோன்பினை வழியாகப் பின்பற்றுகிறார்.

இடைநடையும் இடைமுடியும், இடையர்பேச்சும் கொண்ட இடைப்பெண்ணாக பாவநாப்ரகர்ஷத்தாலே (நினைவின் முதிர்ச்சியாலே) வடிவெடுத்து இடைக்குலச் சிறுமியரோடு இணைந்து, ஸ்ரீவில்லிபுத்தூரே திருவாய்ப்பாடியாகவும், வடபெருங்கோயிலுடையான் திருக்கோயிலே நந்தகோபர் திருமாளிகையாகவும், வடபெருங்கோயிலுடையானையே கண்ணனாகவும் பாவித்து, நோன்பினைக் கைக்கொள்ளுகிறார்.

## கோதையார் அடி தொடர்ந்த இராமாநுசர்

கண்ணனும், கோதை நாச்சியாரும், இழிந்த குலமென்ற தாழ்ச்சி எதுவும் இன்றி இச்சையொன்றே தாம் உகந்தருளும் இடம் என்று காட்டியதை அடியொற்றி இராமாநுசர் பிட்டிதேவன் என்ற அரசனை விஷ்ணுவர்த்தனன் என்ற பெயரில் திருத்திப் பணி கொண்டார். வில்லி என்ற வேட்டுவனை அரங்கனின் கண்ணழகைக்காட்டி, உய்வித்தார், ஊனமுற்ற ஊமைக்கும் உய்யும் வழி அருளிச் செய்தார். இதனால் '**இந்து சமூக சீர்திருத்த வாதி**'[14] என்றழைக்கப்பட்டார்.

14. தமிழ்நாடு அரசு பாடநூல் நிறுவனம் பாடத்தொகுப்பு.

முத்தியோ சிலரது சொத்தென்றிருக்கையில்
தமிழ்நாடு தம் இருந்தவப் பயனாய்
நம் இராமாநுசனைத் தந்தது அன்றோ[15]

என்றும் பாடப்படுகிறார்.

## கோதை நாச்சியாரது இளமைப் பருவச் செயல்கள்-இளமை விளையாட்டில் எம்பெருமான் தொடர்பு

இளமைப் பருவத்தில் கோதையார் ஆடிய விளையாடல் களிலும் எம்பெருமானும் எம்பெருமான் தொடர்பு பெற்ற பொருட் களுமே இடம் பெருகின்றன.

பொங்கு வெண் மணல்கொண்டு சிற்றிலும் முற்றத் திழைக்கலுறில்
சங்கு சக்கரம் தண்டு வாள் வில்லுமல்லது இழைக்கலுறாள்[16]

என்பதனால் இதனை அறியலாம்.

## பெண்கொடிக்கேற்ற கொழுகொம்பு

கோதை நாச்சியாரை மகளாகப் பெற்ற பெரியாழ்வார் அவரது இயற்கை அழகை உணர்ந்து கொண்டு, இதற்கு முன்னே தாம் செய்யும் ஆடை, அணிகலன்கள் முதலிய, செயற்கை அழகுகள் தோற்றுப் போய்விடுகின்றனவே. இவ்வழகினை நோக்க, இவள் எம்பெருமானுக்கே உரியவள், இவள் அழகோடு எம்பெருமானின் சுந்தர வடிவையும் இணைத் துக் காணவேண்டும் என்று ஆசையுறுகின்றார். இதனை அவருக்குக் கிடைத்த பாக்கியமாகவும் எண்ணுகிறார். பெரியாழ் வாரது பெண் கொடியாகிய கோதை நாச்சியாருக்கு ஏற்ற கொழு கொம்பு எம்பெருமானே என்பதை அறிகிறார்.

15. பாரதிதாசன் கவிதைகள் ப. 197
16. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி (3-7-3)

அண்ணலார் தாளிணை மேல்
அணி தண்ணந்துழாயென்றே
மாலுமால் வல்வினையேன் மடவல்லியே![17]

கோதைநாச்சியார் எந்நேரமும் எம்பெருமானின் வரவை எதிர்நோக்கிக் காத்திருப்பவர். அதனால் எப்போதும் அனிகலன் பூண்டு ஆடைகளைச் செவ்வனே உடுத்தி அழகு பார்த்திருப் பவர். இதனை

காறைபூணும் கண்ணாடி காணும் தன்
கையில் வளை குலுக்கும்
கூறையுடுக்கும் அயர்க்கும் தன்
கொவ்வைச் செவ்வாய் திருத்தும்[18]

என்பதால் உணர இயலும்.

**மணப்பருவம்**

கோதையார் மணப்பருவம் எய்தியதும், உரிய மணமகனை அறிந்து கொள்ளும் பொருட்டு, தந்தையார் வாயிலாக திவ்ய தேசத்து எம்பெருமான்களின் சரித்திரங்களையும் அறிந்து கொள்கிறார். இவர்களுள் மனம் கவர்ந்தவர்கள் திருவரங்க நாதனும், வேங்கடத்தப்பனும், திருமாலிருஞ்சோலை மலை அழகனும் ஆவார்கள் என்பது இவரது திருமொழிகளால் உணரப்படுகிறது. அதிலும் தாம் விரும்பியவர் திருவரங்கநாதரே என்பதைத் தமது திருமொழி வாயிலாக அறிவிக்கிறார் கோதை நாச்சியார்.

தீமுகத்து நாகணை மேல் சேரும் திருவரங்கர்
ஆ! முகத்தை நோக்காரால் அம்மனே! அம்மனே![19]

17. நம்மாழ்வார், திருவாய்மொழி (4-2-1)
18. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி (3-7-8)
19. ஆண்டாள், நாச்சியார் திருமொழி (11-1)

## நூல்கள் பிறந்தமை

எம்பெருமானிடத்துக் கொள்ளும் பக்தியானது பரபக்தி, பரஜ்ஞானம், பரமபக்தி என்று மூன்று நிலைகளாக அமையும். பரபக்தி நிலையில் அமைந்த நூல் திருப்பாவை. பரபக்தி, பரஜ்ஞானமாக வளர்ந்த நிலையில் உருவானதே நாச்சியார் திருமொழி. பரமபக்தி பிறந்த நிலையில் சீவான்மாவின் துடிப்பை உணர்ந்த எம்பெருமான் தான் தன் உருக்காட்டலானான். விருந்தாவனத்தில் கண்ணனைக் கண்டமையைத் தம் இறுதித் திருமொழியில் குறிப்பிடுகிறார் கோதை நாச்சியார். தமது திருமொழியில் குறிப்பிட்டவாறே எம்பெருமானை அடைவதற் காகப் பலவாறு முயன்ற அன்னையாரைப் பரமபக்தி நிலைக்கு ஆளாக்கினான் எம்பெருமான். திருவரங்கத்திற்கு ஆண்டாள் அன்னையாரை அழைத்து வருமாறு பெரியாழ்வாரைப் பணிக் கிறார் எம்பெருமான். திருவரங்கம் வருகைபுரிந்த அன்னையார் அரங்கனின் திருவடி வணங்கி அவனுள் கலந்து விடுகிறார். மகளைப் பிரிந்த நிலையில் பெரியாழ்வார் மனம் கலங்கி உரைப்பதை அவரது திருமொழி வாயிலாகக் காணலாம்.

ஒருமகள் தன்னை யுடையேன்
உலகம் நிறைந்த புகழால்
திருமகள் போல வளர்த்தேன்
செங்கண்மால் தான்கொண்டு போனான்[20]

## கோதை நாச்சியார் வாழ்வுச் சிறப்பு

கோதை நாச்சியார் தமிழ் மண்ணில் "மாயோன் மேய காடுறை உலகம்" என்று தமிழர் உகந்த தெய்வமாகிய திருமா லின் சிறப்பை மானுடர்க்கும் உணர்த்துவதற்காக அவதரித்தார்.

20. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி (3-8-4)

தமிழ் நூல்களில் கூறப்படும் நோன்பு நோற்று, தமிழ் இலக்கியங்களில் உரைக்கப்படும் மலர்களைச் சூடி, தமிழ்ப்பாக்களாலேயே திருமாலினை வழுத்தியவர். ஒத்தவயதும் ஒத்த பருவமும் ஒத்த பண்புமுடையார் கொடுப்பாரும் அடுப்பாருமின்றிக் கொள்ளும் களவு மணத்தை மேற்கொண்டு அரங்கனிடத்து ஈடுபட்டு, அவனாலேயே ஆட்கொள்ளப்பட்டமையாலே கோதையாரது வாழ்வு நெறி தமிழரது வாழ்க்கை நெறியாகிறது.

> பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
> இறைவனடி சேரா தார்[21]

என்கிறபடி இறைவன் அடிகளைப் பெறுவதற்கான வழிமுறைகளை உலகோருக்கு உணர்த்தி வழிகாட்டும் வாழ்வாகக் கோதை நாச்சியாரது பிறப்பும், வாழ்வியல் வெளிப்பாடுகளும் அமைந்துள்ளன.

## திருவில்லிபுத்தூர் அர்ச்சாவதாரச் சிறப்பு

உயிர்த் தொகுதிகளாகிய ஜீவாத்மா, உயிரற்ற ஜடப் பொருள்களாகிய அசேதனம் இரண்டையும் எம்பெருமான் உடலாகக் கொண்டிருக்கிறான். இவற்றுள் உயிராக நின்று இயக்குபவன் எம்பெருமான்.

இதையே திருவில்லிப்புத்தூர் கோயிலிலே கோதை நாச்சியாரும், ரங்கமன்னாரும், கருடனும் ஏக ஆசனத்தில் அமைந்திருப்பதைக் காணும்போது இத்தத்துவத்தை எளிதின் உணரமுடிகின்றது. அந்த உத்தம நெறியை சீரிய முறையில் விளக்குவதே கோதையாரின் வாழ்வு நெறி ஆகும்.



21. திருவள்ளுவர், திருக்குறள் (10)

# நாச்சியாரது பிரபந்தங்களில் பெரியாழ்வார் பாசுரங்களின் செல்வாக்கு

## பெரியாழ்வாரது சிறப்பு

பரந்தாமனுக்குப் பாமாலையும் பூமாலையும் சூட்டிக் கைங்கரியம் செய்து தம் வாழ்வை எம்பெருமானுக்கே அர்ப் பணித்தவர் விஷ்ணுசித்தர் என்னும் பெரியாழ்வார். அவர்தம் திருமகளாராக வளர்ந்தவர் கோதை நாச்சியார். இவரது வாழ்விலும் வாக்கிலும் பெரியாழ்வாரது பாவம் செல்வாக்குப் பெற்றுள்ளது என்பதை இப்பகுதி வாயிலாக அறிவோம்.

## பிரபந்த அமைப்பு

பெரியாழ்வாரது நூல்கள் திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி என இரண்டாக அமைகின்றன.

கோதை நாச்சியாரது படைப்புகளும் திருப்பாவை, நாச்சியார் திருமொழி என்பதாக அமைகின்றன.

## பிள்ளைத் தமிழ் இலக்கியத்திற்கு வித்திட்டமை

பெரியாழ்வார் இறைவனின் நலனையே பெரிதும் விரும்பி, கண்ணனைக் குழந்தையாகப் பாவித்து, தாலாட்டி, சீராட்டி, நீராட்டி உணவூட்டி, தளர்நடை நடப்பித்து, பாடல்கள் பாடுகின் றார். இதுவே பெரியாழ்வார் திருமொழி என வழங்கப்படுகிறது. இந்நூலே பிள்ளைத்தமிழ் என்ற சிற்றிலக்கிய வகை தோன்றுவதற்குக் காரணமாக இருந்தது. எனவே பிள்ளைத் தமிழ் இலக்கியத்திற்கு வித்திட்ட பெருமையும் இவரையே சாரும்.

## கோதையாரது பிள்ளைத்தமிழ்

பெரியாழ்வாரைப் போன்றே கோதை நாச்சியாரும், பிள்ளைத் தமிழுக்குரிய பருவங்களில் ஒன்றான சிற்றில் சிதைத்தல் என்பதாக ஒரு திருமொழியை அருளிச் செய்கிறார்.

## அநுகாரம் (பாவனை)

பெரியாழ்வார் தம்மை இடைப்பெண்ணான யசோதையாகப் பாவித்து, கண்ணனின் லீலைகளைக் கவிதைகளாக வடிவமைக் கிறார்.

பெரியாழ்வார் திருமகளாரும் இடைக்குலநங்கையாக இடைநடையும், இடை முடியும், இடை உடையும், முடை நாற்ற மும், அமையப்பெற்று, பாவை நோன்பு நோற்பதன் மூலமாக, திருப்பாவைப் பாடல்களை அருளிச் செய்கின்றார்.

## பெரியாழ்வார் திருமொழி-நாச்சியார் திருமொழி : பாடுபொருள் அமைப்பு

பெரியாழ்வார் தம்மைத் தாயாகப் பாவனை செய்து கொண்டு கண்ணனின் குறும்புகளையும், வீரச்செயல்களையும் அநுபவித்துப் பாடுவதான பாடல்கள் இடம் பெற்றது பெரியாழ் வார் திருமொழி.

ஆண்டாள் (கோதை நாச்சியார்) தாமும் இடைப்பெண் பாவனை பெற்று இடைக்குல நாயகனாகிய கண்ணனிடம் காதல் கொள்கிறார். அதனால் ஆற்றாமை உண்டாகிறது. ஆற்றாமை கரைபுரண்டு பொங்கி வந்த கடல் வெள்ளமெனப் பெருகியதே நாச்சியார் திருமொழி ஆகும்.

## திருமாலுக்குத் திருமாலை சூட்டிய அழகு

பெரியாழ்வார் எம்பெருமானின் அழகிற்குப் பரிபக்குவமான நறுமணம் மிக்க மலர்களைக் கொண்டு புனையப் பெற்ற பலவிதமான திருமாலைகளைத் திருமாலுக்கு அணிவித்து அதனால் அவனிடத்து அமையப் பெற்ற அழகினை முழுமையாக அனுபவிக்கிறார்.

கோதை நாச்சியாரோ, தந்தையார் இறைவனுக்காகத் தொடுத்து வைத்திருந்த மலர்மாலையைத் தாம் அணிந்து அழகுபார்க்கிறார். எம்பெருமானுக்குரிய பொருளை தனதாக்கிக் கொண்டார் என்ற குற்றத்தின் பாற்படும் என்பதால் கோதை நாச்சியார் தனது திருமேனியின் அழகைக் காண வேண்டும் என்பதற்காக மாலையை அணிந்து பார்க்கவில்லை. அனைத்து சீவான்மாக்களுக்கும் உரியவன் எம்பெருமான். சீவான் மாவுக்குரிய அழகும், அழகின்மையும் அதனை உடையவனாகிய எம்பெருமானையே சாரும். எனவே தன் உகப்பிற்காக வன்றி, எம்பெருமான் உகந்து, அவனுக்கு அழகு சேர்க்குமா என்று அறியும் பொருட்டே தான் மாலையைச் சூட்டிக்கொண்டு அழகு பார்த்தாள். தந்தையார் நேரடியாக அணிவித்த மாலையைக் காட்டிலும், கோதை நாச்சியார் சூடிக்கொடுத்த மாலையையே விரும்பி ஏற்றுக் கொண்டான் என்பது இவரது வாழ்க்கை வரலாறு மூலமாக அறிந்து கொள்ள முடிகிறது.

தொடை சூடிக் கொடுத்தவள் தொழுந்தமப்பன் வாழியே[1]

என்று நாச்சியாராலேயே பெரியாழ்வாருக்கும் ஏற்றம் உண்டானது எனலாம்.

இன்றும் திருவில்லிப்புத்தூரிலே கோதை நாச்சியார் சூடிக் கொடுத்த மாலை, திருவேங்கடவன் திருத்தேர் திருவிழாவின் போது, பாண்டி நாட்டிலிருந்து கொண்டு சென்று, வடவேங்கமுடையானுக்குச் சூட்டப்படுகின்றது. இத்தகைய பெருமை வாய்ந்தது கோதையார் திருமாலுக்குத் திருமாலை சூட்டிய அழகு.

1. ஆழ்வார்கள் வாழி திருநாமம் (பெரியாழ்வார்)

## பொங்கும் பரிவு

பாண்டியன் சபையிலே பரதத்துவ நிர்ணயம் செய்த பின் பட்டத்து யானையின் மீது பெரியாழ்வாரை நகர்வலம் வரச் செய்கின்றான் பாண்டியன்.

அப்போது கருடாரூடனாய் உடனமர் தேவிகளுடன் திருமுகம் காட்டுகிறார் எம்பெருமான். அந்த அழகைக் கண்டு வியந்து பெரியாழ்வார் இந்த அழகிற்கு மானுடக் கண்களால் திருஷ்டிதோஷம் பட்டுவிடக் கூடாதே என்று பயந்து காப்பாகப் பல்லாண்டு பாடுகிறார். எம்பெருமான் மீது பெரியாழ்வாருக்கு அவ்வளவு பரிவு தோன்றியது. இதனை,

மங்களா சாசனத்தில் மற்றுள்ள ஆழ்வார்கள் *
தங்களார்வத்தளவு தானன்றி * – பொங்கும்
பரிவாலே வில்லிபுத்தூர் பட்டர்பிரான் பெற்றான் *
பெரியாழ்வாரென்னும் பெயர்[2]

என்பதால் அறிய முடிகின்றது.

## அடியாரிடத்துப் பரிவினாலே பிஞ்சிலே பழுத்தது

கோதை நாச்சியார் இவ்வுலகில் உடம்பொடு பிறந்த உயிரனைத்தும், பரமான்மாவாகிய இறைவனை அடைந்தே தீர வேண்டும் என்ற உறுதிப்பாடு கொண்டவர். இந்நெறியை உலகோர்களனைத்தும் அறிந்து கண்ணனை அடைய வேண்டும் என்று அவர்களிடத்துக் கொண்ட பரிவின் காரணமாக, தமக்கும் பருவம் அமையாக் காலத்தேயே, மங்கைப் பருவ அனுபவங்கள் அமைந்து, நோன்பு நோற்று, எம்பெருமானை

2. மணவாளமாமுனிகள், உபதேச ரத்தினமாலை, பா(18)

அடைவதற்குரிய வழியைக் காட்டிக் கொடுக்கிறார். அடியார்கள் உய்வடைய வேண்டும் என்ற பரிவினாலே தாம் பிஞ்சிலே பழுத்தவராகிறார் கோதையார். இக்கருத்தை

அஞ்சு குடிக்கொரு சந்ததியாய் * ஆழ்வார்கள்
தஞ்செயலை விஞ்சி நிற்கும் தன்மையளாய்ப் * பிஞ்சாய்ப்
பழுத்தாளையாண்டாளைப் பத்தியுடன் நாளும் *
வழுத்தாய் மனமே மகிழ்ந்து[3]

என்ற கூற்றினால் உணர முடிகிறது.

**கோதையார், பெரியாழ்வார் - ஒத்த தன்மை உண்டான விதம்**

நல்ல மணமுள்ள தொன்றை நண்ணியிருப்பதற்கு *
நல்ல மணமுண்டாம் நயமதுபோல * – நல்ல
குணமுடையோர் தங்களுடன் கூடியிருப்போர்க்கு *
குணமதுவே யாம் சேர்த்தி கொண்டு[4]

என்ற வாக்குப் போலவும், 'பூவோடு சேர்ந்த நாரும் மணம் பெறும்' என்ற உலகியல் வழக்குப் போலவும், கோதை நாச்சியார் தம் திருத்தகப்பனார் பெரியாழ்வாரது வளர்ப்பு, கல்வி, பழக்கங்கள் ஆகிய தொடர்பினால், பெரியாழ்வாரது குணங்கள் அனைத்தும் அமைப்பெற்ற கோலப் பாவையாகத் திகழ்கின்றார் எனலாம்.

இவ்வாறு கோதை நாச்சியார் தமது பாவனை, பூமாலை சூட்டல், அடியார்க்காக இரங்கும் தன்மை இவற்றில் பெரியாழ் வாரது பாவம் பொருந்தப் பெற்றாற் போல இவரது பாடல்களிலும், பெரியாழ்வாரது, சொல், பொருள் ஆட்சிகள் அமையப் பெறுகின்றன என்பதை மேற்காண்போம்.

3. மேலது பா (24)
4. மேலது பா (69)

## சொல்லாட்சி அமையும் இடங்கள்

மாணிக்கக் கிண்கிணி யாரவாரிப்ப மருங்கின் மேல்[5]
கிங்கிணி வாய்ச் செய்த தாமரைப் பூப்போலே[6]

கிங்கிணி எம்பெருமான் திருக்கண்களுக்கு உவமையாகக் கூறப்படுகிறது.

வித்தகன் வேங்கடவாணன் உன்னை விளிக்கின்ற[7]

வித்தகன் வேங்கடவாணன் என்னும்
விளக்கினில் புக என்னை விதிக்கிற்றியே[8]

மைத்தடங்கண்ணி யசோதை தன் மகனுக்கு[9]
மைத்தடங்கண்ணி – யசோதைக்கு அடைமொழி

மைத்தடங்கண்ணினாய் நீ உன் மணாளனை[10]

மைத்தடங்கண்ணி – நப்பின்னைப் பிராட்டிக்கு அடையாகின்றது.

கஞ்சன் புணர்ப்பினில் வந்த கடிய சகடம் உதைத்து[11]

கள்ளச் சகடம் கலக்கழியக காலோச்சி[12]

பேயின் முலையுண்ட பிள்ளை இவன் முன்னம்[13]

பேய்முலை நஞ்சுண்டு[14]

5. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி (1-7-1)
6. ஆண்டாள் திருப்பாவை பா(6)
7. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி (1-4-3)
8. ஆண்டாள், நாச்சியார் திருமொழி (1-3)
9. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி (1-4-10)
10. ஆண்டாள், திருப்பாவை பா(19)
11. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி (2-4-4)
12. ஆண்டாள், திருப்பாவை பா(6)
13. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி (2-5-2)
14. ஆண்டாள், திருப்பாவை பா (6)

பொறுத்திட்டு எதிர்வந்த புள்ளின் வாய்கீண்டான்[15]

புள்ளின் வாய் கீண்டானை[16]

புண்ணில் புளிப்பெய்தாலொக்கும் தீமை[17]

புண்ணில் புளிப்பெய்தாய் போலப் புறம் நின்று அழகு பேசாதே[18]

வங்கம் விட்டுலவும் கடற்பள்ளி மாயனை[19]

வங்கக் கடல்கடைந்த மாதவனை[20]

## மானுடத் தன்மையைக் கூறுமிடம்

மானிட சாதியில் தோன்றிற்று ஓர் மானிட சாதியை
மானிட சாதியின் பேரிட்டால் மறுமைக்கில்லை[21]

மானிடவர்க்கென்று பேச்சுப் படில் வாழகில்லேன்[22]

பெரியாழ்வாரது ஒரு சொற்றொடர் கோதையாரால் ஒரு பதிகமாகப் பாடப் பெறுதல்.

செப்போது மென்முலையார்கள் சிறுசோறும் இல்லும்
சிதைத்திட்டு[23]

'சிற்றில் சிதைத்திட்டு' என்று பெரியாழ்வார் கூறிய ஒரு வார்த்தையை வைத்துக்கொண்டு கோதை நாச்சியார்

15. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி (2-6-3)
16. ஆண்டாள், திருப்பாவை பா(13)
17. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி (2-9-1)
18. ஆண்டாள், நாச்சியார் திருமொழி (13-1)
19. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி (4-5-6)
20. ஆண்டாள், திருப்பாவை பா(30)
21. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி (4-6-4)
22. ஆண்டாள், நாச்சியார் திருமொழி (1-5)
23. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி (2-8-3)

நாமமாயிரமேத்த நின்ற நாராயணா! நரனே[24]

என்று கண்ணனைத் தாங்கள் இழைத்த சிற்றிலைச் சிதைக்க வேண்டாம் என்று கேட்டுக் கொள்வதாக ஒரு பதிகத்தையே அமைத்துள்ளார்.

ஆற்றிலிருந்து விளையாடுவோங்களை
சேற்றாலெறிந்து வளை துகில் கைக்கொண்டு[25]

என்று பெரியாழ்வார் உரைத்தவற்றிலிருந்து கோதை நாச்சியார்,

கோழியழைப்பதன் முன்னம் குடைந்து நீராடுவான்
போந்தோம்
அழியஞ்செல்வன் எழுந்தான் அரவணைமேல்
பள்ளிகொண்டாய்!
ஏழையமையாற்றவும் பட்டோம் இனியென்றும்
பொய்கைக்கு வாரோம்
தோழியும் நானும் தொழுதோம் துகிலைப்
பணித்தருளாயே![26]

என்று கண்ணன் கவர்ந்து கொண்ட கூறைகளைக் கன்னியர் கேட்பதாக ஒரு பதிகம் பாடியுள்ளார்.

**எம்பெருமானின் ஆயுதங்களான சங்கு சக்கரங்களைப் பாடுவதில் ஒன்றுபடுதல்**

வடிவார்சோதி வலத்துறையுஞ் சுடராழியும்
பல்லாண்டு
படைபோர் புக்கு முழங்கும் அப்பாஞ்ச சன்னியமும்
பல்லாண்டே[27]

24. ஆண்டாள், நாச்சியார் திருமொழி (2-1)
25. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி (2-10-1)
26. ஆண்டாள், நாச்சியார் திருமொழி (3-1)

பூங்கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்கொலியும்
சார்ங்கவில் நாணொலியும் தலைப்பெய்வது
எஞ்ஞான்று கொலோ[28]

என்று பெரியாழ்வார் பாசுரங்கள் கோதை நாச்சியாரது, திருப்பாவை மற்றும் திருமொழிகளில் செல்வாக்குப் பெற்று விளங்குகின்றன.

## பெரியாழ்வாரது தொடர்பால் தமக்குப் பேறுகிட்டும் எனக் கோதையாரே கூறுமிடம்

நல்ல என் தோழி! நாகணைமிசை நம்பரர் *
செல்வர் பெரியர் சிறுமானிடவர் நாம் செய்வதென்? *
வில்லிபுதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை *
வல்லபரிசு வருவிப்பரேல் அது காண்டுமே.[29]

என்று கோதையாரே குறிப்பிடுவதனாலும் பெரியாழ்வாரது பாசுரங்கள் கோதை வாய்த்தமிழில் செல்வாக்குப் பெற்று விளங்குகின்றன என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.



27. பெரியாழ்வார், திருப்பல்லாண்டு (1)
28. ஆண்டாள், நாச்சியார் திருமொழி (9-9)
29.. மேலது (10-10)

# திருப்பாவையில் பொதிந்திருக்கும் அழகு

## திருப்பாவையின் தொன்மை

"வேதமனைத்து வித்தாகும் கோதை தமிழ்"[1]

"தொல்பாவை பாடியருளவல்ல பல்வளையாய்"[2]

என்ற இச்சொற்றொடர்களால், திருப்பாவை மிகவும் தொன்மை வாய்ந்தது என்பது புலனாகின்றது. இத்தகு பழமையும், பெருமையும் பெற்ற திருப்பாவையில் நாச்சியார் காட்டியுள்ள நடையழகினைக் குறித்து இப்பகுதியில் காண்போம்.

## பெயர்பெறும் அழகு

திருப்பாவை = திரு + பாவை. எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் திவ்யதேசத்திற்கும், அவரது பெருமையைப் பகரும் பாசுரங்கள் அமைந்த பிரபந்தத்திற்கும் 'திரு' என்று அடைமொழி இடுவது வழக்கு. இங்கு அவ்வாறின்றி திரு என்பதற்கு இலக்குமி, அழகு, செல்வம், தெய்வீகத் தன்மை எனப் பல பொருள்கள் அமைகின்றன. எனவே புருஷகார பூதையான திருமகளுடைய வழிபாடு, பாகவத சேஷத்துவமாகிய ஆன்ம ஆழகு, இறைவனுக்கே அற்றுத் தீர்ந்த, அடிமை பூண்டொழுகுதலாகிய கைங்கர்யச் செல்வம், சீரிய பயனைத் தருவதற்கேற்ற தெய்வத் தன்மை, எனப்பலவும் இந்நூலுள் அடங்கியுள்ளமையின், இந்நூலுக்கு 'திரு' என்பது அடைமொழி ஆயிற்று.

முதல் நூல், கருத்தன், அளவு, மிகுதி, பொருள். செய்வித்தோன், தன்மை, இடுகுறி இவற்றுள் ஏதேனும் ஒன்று நூலிற்குப்

1. ஆண்டாள், வாழித் திருநாமம்.
2. திருப்பாவை - உய்யக்கொண்டார் அருளிச்செய்த தனியன்.

பெயராதல் மரபு. இங்கு நூலில் அமைந்துள்ள உட்பொருளே இந்நூலுக்குப் பெயராக அமைகின்றது.

"நாமும் நம் பாவைக்குச் சாற்றி நீராடினால்"
"பிள்ளைகள் எல்லாரும் பாவைக் களம் புக்கார்"[2]

"எம்பாவாய்" என்ற தொடர்கள் இக்கருத்தை வலியுறுத்துவதாக அமைகின்றன.

## இயற்கையை இசைக்கும் அழகு

இயற்கை என்பது அனைத்துயிருக்கும் இன்பத்தை அளிக்கும் செல்வம். மக்கள் மனத்தை ஈர்க்கவல்ல காந்தம். புதுப்புது அழகுகளைத் தோற்றுவிக்கும் ஊற்று. புலவரது புலமைத் திறன் அனைத்தையும் வெளிப்படுத்தும் கலை அறிஞர். களது உள்ளத் தாமரையை அலரச் செய்யும் உதய ஞாயிறு மண், புனல், மலை, மரம், மலர், மேகம் இவையனைத்தும் இயற்கைப் பொருள்களே. இறையன்பர்கள் யாவரும் இயற்கைப் பொருள்களைக் காணுந்தோறும், இயற்கையை உடலாக உடைய இறைவனையே காணுகின்றனர். எனவே எம்பெரு மானை எங்கு, எவ்வழிக் காண்போம்? என்று நோன்பியற்றுகின்ற நாச்சியாருக்கு, இதழ் விரித்து மணம் பரப்பும் மலர்களும், அவற்றின் அழகிய நிறமும், தேன் துளிகளும் மனத்தைக் கவர்கின்றன. இத்தகைய இயற்கை இன்பத்தில் தோய்ந்து, தோய்ந்து நிற்கிறார். இன்றைய அதிசய அவசர, அறிவியல் யுகத்தில் இத்தகைய இயற்கை இன்பத்தைக் காண்பதற்கும், களிப்பதற்கும் வாய்ப்புகள்? அருகி வருகின்றன. இன்றைய நகர வாழ்வில் இயற்கை வாழ்விற்கு இடமுமில்லை. அழகிய பறவைகள் தான் காணப்படுகின்றனவா? பறவைகளுக்கு உணவும், இருப்பிடமும் தரக்கூடிய இலை, காய், கனி நிறைந்த

2. திருப்பாவை, பா(3) / (13) .

மரங்கள் தான் காணப்படுகின்றதா? இத்தகைய நிலையில், அவற்றின் பாடலையோ, ஓசையையோ, மிழற்றலையோ, பேச்சையோ கேட்பது எவ்வாறு? ஆனால் நம் அன்னையாருக்கோ, பறவைகள் கலந்து பேசிக் கொள்கின்றன. புட்கள் சிலம்புகின்றன, கோழிகள் அழைக்கின்றன, குயிலினங்கள் கூவுகின்றன.

"கீசுகீசென்றெங்கும் ஆனைச் சாத்தன் கலந்து
பேசின பேச்சரவம் கேட்டிலையோ?"[3]

"புள்ளும் சிலம்பின காண்"[4]

"வந்தெங்கும் கோழி அழைத்தனகாண், மாதவிப்
பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்"[5]

இச்சொற்றொடர்கள் மேற்கூறிய கருத்துக்கு அரணாக அமைகின்றன.

## இணையழகு

"நெய்யுண்ணோம் பாலுண்ணோம்"[6] என்று பாலையும், பால் படுபொருள்களையும் இணைக்கிறார்.

"ஐயமும் பிச்சையும்" என்று பிறருக்குக் கொடுப்பதற்கான அறம் பற்றிக் கூறும்போது இணையழகு புலனாகின்றது.

"ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து"[7]

என்று மழைக்கண்ணனின் செயல்களைக் கூறும்போது மின்னலையும், இடியையும் இணைக்கிறார்.

"தூயோமாய்வந்து நாம் தூமலர் தூவித் தொழுது
வாயினாற்பாடி, மனத்தினாற் சிந்திக்க"[8]

3. திருப்பாவை 7
4. மேலது பா 6
5. மேலது பா 18
6. மேலது பா 2
7. மேலது பா 4
8. மேலது பா 5

என்று எம்பெருமானைச் சென்றுசேவிக்க, தூயோமாய் வருதல், தூமலர் தூவித் தொழுதல் வாயினாற்பாடுதல், மனத்தினாற் சிந்தித்தல் என்ற செயல்களைச் செய்ய வேண்டும், என்பதனை இணைத்துப் பாடுகின்றார்.

## முரணழகு

நாச்சியாரது பிரபந்தங்களில், இணையழகைப் போன்றே முரணான சொற்களையும் ஒருங்கிணைத்துப் பொருட்செறிவு மிக்கதாக அமைந்துள்ள இடங்கள் பலப்பல.

"*கார்மேனிச் செங்கண்*"[9] கறுமை, செம்மை என்ற இரு வேறு பண்புகள் ஒரு சொற்றொடரில் அமைகின்றன.

"*கதிர் மதியம்*"[10] என்று தீமை போக்கி, நன்மை ஏற்படச் செய்யும் சூரியனையும், தண்மைமிக்க சந்திரனையும் ஒருங் கிணைக்கிறார்.

"செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல்வாய் கூம்பினகாண்"[11]

விடியற்காலை வேளையில், செங்கழுநீர் மலர்கள் விரிவதும், இரவில் அலர்ந்திருந்த கருநெய்தல் மலர்கள் ஆதவனின் வெப்பத்தால் சுருங்குவதும் இயல்பு. இம்முரணான செயல்களை இணைத்து அமைக்கின்றார் நாச்சியார்.

## வீரத்தை வெளிக்காட்டும் அழகு

ஓர் ஒப்பற்ற வீரன் கையில் வாளை ஏந்திக் கொண்டு ஆண் சிங்கம் போன்று போர்க்களம் புகுகின்றான். திரண்டு நின்ற பகைவர் சேனையைத் தன் வீரக்கண்களால் காணுகின்றான். போர் வீரர்களின் வன்மை, படைத்திறன் முதலியன அவனுக்குப் புலனாகின்றன.

9. மேலது பா 1
10. மேலது பா 1
11. .மேலது பா 14

தான் ஒருவனாக நின்று நான்புறமும் சுழன்று வாளை வீசி, பல யானைகளையும், வீரர்களையும், வாகைசூடி, நிற்கிறான். அவனையே உலகம் 'சுத்த வீரன்' என வழங்குகிறது. இச்செய லையே வீரமெனப் போற்றுகிறது. இத்தகைய சுத்த வீரரைப் பற்றியே போர்க்களத்துப் பரணிகள் பல எழுந்துள்ளன.

"மானிடவர்க் கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்
கண்டாய் மன்மதனே"[12]

என்ற வீரம் செறிந்தவரே நாச்சியார். வீர மங்கையர் சிறந்த வீரரையே தமக்குத் தலைவராகத் தேர்ந்தெடுப்பது தமிழ் மரபு.

அம்மரபினையொட்டியே அன்னையாருக்கு முன்னோராகிய ஆயர் மங்கையரும், பாவை நோன்பியற்றினர். ஆண்டாள் நாச்சி யார் தாமும், "மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டி யேல்"[13] என்னும்படி "முன்னோர் மொழிந்த முறை தப்பாமல்"[14] மார்கழி, நோன்பு இயற்றுகிறார். அந்நோன்பின் மூலம், தாம் பற்றிப் படரும் கொழு கொம்பை அடைய விரும்புகிறார். இந்நோன்பின்போது ஏற்படும் அக, புற உணர்வுகள் அழகிய முப்பது பாசுர ஊற்றுக்களாக, நாச்சியாரது அமுத வாயினின்று வெளிப்படுகின்றன.

இம்முப்பது பாசுரங்களையும் முப்பது இரத்தினக்கற்கள் என மதிப்பிடலாம். இந்த இரத்தினங்களிலும் வீரம் என்ற ஒளியே வீசுகின்றன.

ஆதியஞ்சோதியுருவை அங்கு வைத்து இங்குப் பிறந்த அமரர் பெருமானின் வீரத்தைப் பாடுபொருள் ஆக்குகின்றார்.

"முப்பத்து மூவர் அமரர்க்கு முன் சென்று
கப்பம் தவிர்க்கும் கலியே"[15]

12. ஆண்டாள், நாச்சியார் திருமொழி (1-5)
13. ஆண்டாள், திருப்பாவை. பா. 26
14. மணவாள மாமுனிகள், உபதேசரத்தினமாலை பா.71
15. ஆண்டாள், திருப்பாவை. பா. 20

வீரத் திருவுடையவராகப் பிறந்து, வீரத்தோன்றலையே மணக்கக் கருதி அதனில், வெற்றியும் பெற்ற நம் ஆண்டாள் நாச்சியாருக்கு காணும் யாவரும் வீரராகவே தோன்றுகின்றனர்.

நாச்சியார் கண்ணனின் தந்தையார் நந்தகோபரை நோக்குகிறார். இவரது கண்ணில் படுபவை, நந்தகோபரது கையில் உள்ள கூர்வேல் பகைவரை ஒரே வீச்சில் அழிக்கும்வீரம், மதங் கொண்டகளிற்றையும், எதிர்த்து நிற்கும் தோள் வன்மை, இவையேயாகும். இவற்றை

"கூர்வேல் கொடுந்தொழிலான் நந்தகோபன்"[16]
"உந்து மதகளிற்றன் ஓடாத தோள்வலியன்"[17]

என்று அழகுற அமைக்கிறார்.

இவரது நோன்பிற்குத் துணைநிற்கும் மங்கையரும், வீரக்குடியிற் பிறந்த மகளிராகவே இவருக்குப் புலப்படுகின்றனர்

"செற்றார் திறலழியச் சென்றுசெருச்செய்யும்
குற்றமொன்றில்லாத கோவலர்தம் பொற்கொடியே"[18]

என்று இவர்களை அழைக்கின்றார்.

கண்ணன் - நப்பின்னைப் பிராட்டி இருவரின் சேர்த்தியழகை அனுபவிக்கும் காலத்தும், இருவரிடமும் இணைந்துள்ள வீரமே இவருக்குக் காட்சியளிக்கிறது.

"குத்து விளக்கெரியக் கோட்டுக்கால் கட்டில்மேல்
மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறிக்
கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக் கிடந்த மலர்மார்பா"[19]

என்று உரைப்பதனால் இதனை நாம் உணர முடிகிறது.

16. மேலது பா. 1
17. மேலது பா. 18
18. மேலது பா. 11
19. மேலது பா. 19

## காவியத்தில் ஓவியத்தைத் தீட்டும் அழகு

திருப்பாவை செல்வியாரது பாசுரங்களில் ஆங்காங்கே உவமையணிகள் மிளிர்கின்றன. இவ்வுவமையணிகள் பொது வாக இயற்கைப் பொருட்களைக் குறித்தாலும், உள்ளுறையாக நோக்குமிடத்து ஆன்மாவைக் குறித்ததாக அமைகின்றன. ஆன்மாவுக்குரிய பாரதந்தர்ய நிலையையும், அதற்கு இறைவ னது அருள்நோக்குத் துணை செய்கின்ற விதத்தையும் நாச்சியார் தம் காவியத்தில் ஓவியமாகத் தீட்டுவதை உணரமுடிகின்றது.

காவிய ஓவியத்திற்கு எடுத்துகாட்டு

"அங்கண் மாஞாலத் தரச ரபிமான
பங்கமாய் வந்துநின் பள்ளிக் கட்டிற்கீழே
சங்கமிருப்பார் போல் வந்து தலைப்பெய்தோம்
கிங்கிணி வாய்ச்செய்த தாமரைப் பூப்போலே
செங்கண் சிறுச்சிறிதே யெம்மேல் விழியாவோ
திங்களு மாதித்தியனு மெழுந்தாற் போல்
அங்கணிரண்டுங் கொண்டெங்கள்மேல் நோக்குதியேல்
எங்கள்மேற் சாப மிழிந்தேலோ ரெம்பாவாய்"[20]

## ஓவியத்தில் பெண்மையைச் சித்தரிக்கும் அழகு

இறைவனைச் சென்று பற்றுமிடத்துப் பிராட்டி புருஷகாரம் அவசியம் என்பதைக் காட்டுகிறார்.

"நந்தகோபாலன் மருமகளே நப்பின்னாய்!"[21]
"நப்பின்னை நங்காய்! திருவே! துயிலெழாய்!"[22]

20. மேலது பா. 22
21. மேலது பா. 18
22. மேலது பா. 20

**தமிழின் சிறப்பு அமையும் அழகு**

அன்னை தமிழ் மொழிக்கேயுரிய சிறப்பு எழுத்தாக அமைவது 'ழ' கரமாகும். இந்த 'ழ' கரத்தை ஒரே பாசுரத்தில் பதினொரு முறை பயன்படுத்தியுள்ள பான்மை பாடவல்ல நாச்சியார் ஒருவருக்கே பொருந்தும். "ஆழி மழைக்கண்ணா ஒன்று நீகைகரவேல்"[23]

**முத்தமிழும் விரவ அமைந்தது**

"எல்லே யிளங்கிளியே"[24] இப்பாசுரம், உரையாடலாக, வினா விடை அமைப்பில், அமைவதால், இங்கு இயற்றமிழும், நாடகத் தமிழும் நடமிடுகின்றன.

"ஓங்கியுலகளந்த உத்தமன் பேர் பாடி"[25]
"வாயினாற் பாடி"[26] "கேசவனைப் பாடவும்"[27]
"பாடிப் பறைகொண்டு"[28] "கீர்த்தமை பாடி"[29]
"பங்கயக் கண்ணானைப் பாடேலோர் எம்பாவாய்"[30]
"தூயோமாய் வந்தோம் துயிலெழப் பாடுவான்"[31]

என்று இந்த இடங்களை நோக்குமிடத்து, இசைத்தமிழ் இனிய பண்ணாக அமைவதைக் காணமுடிகின்றது. எனவே நாச்சி யாரது திருப்பாவைப் பனுவல்கள் முத்தமிழ் அழகும் மிளிர அமைந்தவை என்பது புலனாகின்றது.

செய்த குற்றத்தையே ஒப்புக் கொள்ள அஞ்சும் இக்காலத்து, செய்யாத குற்றத்தையும் தானே ஏறிட்டுக் கொள்கை என்ற பொருள் அமைந்த "நானே தானாயிடுக" என்ற சொற்றொடரைப் பாடலில் அமைத்த அன்னையாரின் அருள் மனத்தின் பெருமையை என்னென்னபது!

23. மேலது பா.4
24. மேலது பா. 15
25. மேலது பா.3
26. மேலது பா. 5
27. மேலது பா. 7
28. மேலது, பா.8
29. மேலது, பா.13
30. மேலது, பா.14
31. மேலது, பா.16.

## ஏகாரச் செல்வி

"நாராயணனே நமக்கே பறைதருவான்"[32]

"உற்றோமே யாவோம் உனக்கே நாமாட் செய்வோம்"[33]

என்ற இவ்விடங்களைக் காணும்போது, அன்னையார் ஏகாரத் தைப் பயன்படுத்தி தாம் கூறும் கருத்துக்களை ஒப்புயர்வற்ற தாகக் காட்டுவது அவருக்கே சொந்தமான ஒருகலையாகும். எனவே அவருக்கு ஏகாரச் செல்வி என்றும் பெயர் அமைகின்றது.

## சான்றாண்மையை உணர்த்தும் அழகு

நாச்சியாரது திருப்பாவைப் பாடல்களில், முன்னோர் கூறிய வழியினின்று மாறாதிருக்கும் தன்மை பெரிதும் உணர்த்தப் படுகிறது.

கண்ணனைக் காணும் முன்னர், வாயிற்காவலனை விளித்தல், அன்னை, தந்தையரை எழுப்புதல், உடன் பிறந் தானைப் பாடுதல், கண்ணனையும் தனித்துக் காணாது, பிராட்டி யுடன் சேர்த்துப் பாடுவது என்று முறையாக, சான்றோர் உரைத்த நெறிப்படி அமைக்கின்றார் நாச்சியார்.

"நாயகனாய் நின்ற நந்தகோபனுடைய"[34]
"அம்பரமே தண்ணீரே சோறே அறஞ்செய்யும்"[35]
"உந்துமத களிற்றன் ஓடாத தோள்வலியன்"

ஸ்ரீவைஷ்ணவக் கோட்பாடுகளில் தலையாயது, பயன் கருதாது பக்தி செய்யும் பண்பேயாகும்,

32. மேலது, பா.1 .
33. மேலது, பா.29
34. மேலது பா. 16
35. மேலது பா. 17

புகலொன்றில்லா அடியேன் உன்னடிக் கீழமர்ந்து புகுந்தேனே![36]

இதனை நாச்சியார்,

"தூயோமாய் வந்து நாம் தூமலர் தூவித்தொழுது"

என்று நாங்கள் எந்தப் பலனையும் கருதி உன்னை அடைய வில்லை. அடைவது ஒன்றையே, அதுவும் உன் விருப்பப்படி அமைய வேண்டும் என்பதை மட்டுமே பலனாகக் கொண் டுள்ளோம் என அருளிச் செய்கிறார்.

## பிள்ளைத்தமிழ் அழகு

சிற்றிலக்கிய வகைகளில் ஒன்றான பிள்ளைத் தமிழ் எவற்றை அங்கமாகக் கொண்டுள்ளது? என்றால் குழந்தைப் பருவ இன்பச் செயல்களையேயாகும். தம் இளங்குழவி, மண்ணில் அளைந்து விளையாடுகிறது. மேனி முழுவதும் புழுதி. கை விரல்களெல்லாம் தூசி படிந்துள்ளன. இந்நிலையிலுள்ள அப்பிஞ்சுக்கைத் தம் பெற்றோர் உண்ணும் உணவில் கையை வைத்து அளாவுகிறது. வேறொருவரது கைபட்டாலும், உண்ண விரும்பாத அவ்வில்லத் தலைவன் தாமே, அவ்வுணவை அமுதென எண்ணி இன்முகத்துடன் உண்பதைப் காணலாம்.

இளம் பிஞ்சுக் குழந்தைத் தன் தளிர் விரல்களினால் தாய் தந்தையரைத் தீண்டுங்கால் பெறும் இன்பத்தினை, வேறு எந்தச் செயலாலும் விளைவித்தல் இயலாது.

பெற்ற குழந்தைப் பேசும் விதம் அறியாது தத்தித்தத்திப் பேசும் கிளிமொழியாம் மழலை மொழி, குழலோசையையும், யாழோசையையும் விஞ்சியதாக, இனிமை நிரம்பியதாக, பெற் றோருக்கு அமைகின்றது.

---

36. நம்மாழ்வார் திருவாய்மொழி (6-10-10)

மேற்கூறிய இனிமையைப் பற்றிப் பேசுபவர் யாவரென்பதை நோக்குவோமேயானால், மனத்துறவு பூண்டவராகிய தெய்வப் புலவர் திருவள்ளுவரே இத்தகு இனிமையைப் பேசுகின்றவர் என்பது தெரிகின்றது.

அமிழ்தினும் ஆற்ற இனிதே தம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ் [திருக்குறள் - 64]

மக்கள்மெய் தீண்டலுடற் கின்பம் மற்றவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு [திருக்குறள் - 65]

குழலினிது யாழினிது என்பதம் மக்கள்
மழலைச் சொல் கேளாதவர் [திருக்குறள் - 66]

இத்தகைய பிள்ளைப் பருவ இன்பத்தை ஒவ்வொரு பருவத்திலும் அமைத்துப் பாடப்படும் தமிழ் இலக்கிய மரபு பிள்ளைத் தமிழ் எனப் பெயர் பெறுகின்றது. இது சிற்றிலக்கிய வகைகளில் ஒன்றாக அமைகின்றது.

## பிள்ளைத் தமிழின் வகைகள்

பிள்ளைத் தமிழ் ஆண்பாற்பிள்ளைத் தமிழ், பெண்பாற் பிள்ளைத் தமிழ் என இருவகைப்படும்.

### ஆண்பாற் பிள்ளைத் தமிழுக்குரிய பருவங்கள்

காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிற்றில் சிதைத்தல், சிறு பறை கொட்டல், சிறு தேருருட்டல் என்னும் பத்தும் ஆண்பாற் பிள்ளைத் தமிழுக்குரிய பருவங்களாகும்.

### பெண்பாற் பிள்ளைத் தமிழுக்குரிய பருவங்கள்

மேற்கூறிய பருவங்களில் சிற்றில் சிதைத்தல், சிறுபறை கொட்டல், சிறு தேருருட்டல் என்ற மூன்றினைத் தவிர்த்து, சிற்றில்

செய்தல், கழங்காடல் (அம்மானை), ஊசலாடல் என்ற மூன்றும் அமையப் பெறுவது பெண்பாற் பிள்ளைத் தமிழாகும்.

**பிள்ளைத் தமிழ் மரபு**

பெரும்பாலும் ஒரு பிள்ளையின் பருவத்தைப் பற்றிப் பிறர் சொல்வதாகப் பாடப்படுவதுதான் வழக்கு.

ஆழ்வார்களுள் குலசேகராழ்வார் சக்கரவர்த்தித் திருமகனைத் தொட்டிலிலிட்டுத் தாலாட்டி, சீராட்டும் விதமாக, இராமபிரானின் பெருமையைப் பகர்கின்றார்.

மன்னு புகழ் கௌசலைதன் மணிவயிறு வாய்த்தவனே! *
தென்னிலங்கைக் கோன்முடிகள் சிந்துவித்தாய்! * செம்பொன்சேர்
கன்னிநன் மாமதிள் புடைசூழ் கணபுரத்து என்கருமணியே! *
என்னுடைய இன்னமுதே ! இராகவனே! தாலேலோ. (பெரு.தி. 8-1)

இது ஒருவகை பிள்ளைத் தமிழென்றால், வில்லிபுத்தூர் பட்டர்பிரானாகிய பெரியாழ்வார், பாருண்ட பரந்தாமனாம் கண்ணனின் கோலச் செயல்களை, இருபத்தைந்து திருமொழிகளாக அமைத்துக் கற்பவர்தம் கண்முன்னே, கருத்தோவியமாக்கிக் காட்டுகின்றார்.

உய்யஉலகு படைத்துண்ட மணிவயிறா !
ஊழிதோறூழிபல ஆலினிலையதன் மேல்
பைய உயோகுதுயில் கொண்ட பரம்பரனே !
பங்கய நீள் நயனத்து அஞ்சன மேனியனே!
செய்யவள் நின்னகலம் சேமமெனக் கருதிச்
செல்வுபொலி மகரக்காது திகழ்ந்திலக
ஐய! எனக்கு ஒருகால் ஆடுக செங்கீரை
ஆயர்கள் போரேறே! ஆடுக ஆடுகவே ! (பெரியாழ். தி. 1-5)

இது மற்றொரு வகை பிள்ளைத்தமிழாக அமைகின்றது.

## கோதையார் காட்டும் பிள்ளைத் தமிழ் அழகு

பெரிய பிராட்டியாருக்கு ஒப்பானவரும், செல்வம் விளையும் நிலமங்கையாகத் திகழ்பவரும், நல்லாரையும், தீயாரையும், வேறு படுத்திக் காணாது, தாங்குபவரும் ஆன பூமிப்பிராட்டியார் அம்சமான கோதை நாச்சியார் தமது இளமைப் பருவ நிகழ்ச்சிகளைத் தாமே வெளியிடுகின்றார்.

சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள் !
மேய்வான் பரந்தனகாண் மிக்குள்ள பிள்ளைகளும்
பிள்ளைகளெல்லாரும் பாவைக் களம் புக்கார்
ஆயர் சிறுமியரோமுக்கு
அறியாத பிள்ளைகளோம் அன்பினால் உன்றன்னை

இது பிறிதொரு வகைப் பிள்ளைத் தமிழாக விளங்குகின்றது.

## சீர்திருத்த அழகு

மறங்கள் மலிந்து, அறம் நலிவடையுங் காலத்து, அறத்தை நன்கு நிலை நாட்டுவதற்காகவும், மறத்தை அழியச் செய்வதற் காகவும், யுகங்கள் தோறும் நான் அவதாரம் செய்கிறேன் என்று பார்த்தன் தெளிந்துணர, பைந்துழாயான்.

பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம் |
தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே || (கீதை-4-8)

என்று உரைத்தவாறு, உலகில் குற்றங்கள் மலிந்தவிடத் திலே, இறைவனும் உடல்தாங்கி உலவ வருகின்றான். இறை வனருள் பெற்றுச் சீரிய நான்மறைச் செம்பொருளை உலகுக்கு அளிக்க வல்லவர்களாகிய சிறந்த ஆன்மாக்களும் உலகிற்கு வருகின்றனர். அத்தகைய ஆன்மாக்களால் உலகில் ஒழுங்கு

முறை நிலைநாட் டப்படுகிறது. இவ்வொழுங்கு முறை, சான்றோரால் போற்றத் தக்கதாக, அழிவற்றதாக, உண்மை வாய்ந்ததாக அமைகின்றது. எத்தகையோரது மனத்தையும் திருத்த வல்லதாகவும் விளங்கு கிறது. இதுவே இக்காலத்துச் சீர்திருத்தம் என வழங்கப் பெறுகின்றது.

செந்தமிழ் நாடெனும் போதினிலே இன்பத்
தேன் வந்து பாயுது காதினிலே [பாரதியார் கவிதைகள்]

என்ற செந்தமிழ் கொஞ்சும் தமிழ்நாட்டிலே தலைவிரித்தாடும் பிரச்சினை என்ன! ஒற்றுமையைக் குலைக்கும் சக்தி எது? பல பிரிவுகளை உண்டாக்குவது எது? பிணக்குகள் அனைத்திற்கும் தலைமையானதாக, தாய்மை இடம் பெற்று விளங்குவது எது? எனில் இன வேற்றுமையே யாகும்.

இக்கருத்தை யாரும் மறுக்க இயலாது. இக்கருத்து அடிப்படையாக, இறையன்பில் மூழ்கித் திளைத்தோராகிய நம் ஆழ்வார்கள் என்ன கருதுகிறார்கள்? என்றால், ஆழ்வார்கள் பரமன் பக்தியைத் தவிர, வேறொரு செல்வத்தையோ, பதவியையோ, குலத்தையோ, உயர்வாகக் கொண்டவர்களன்று. அப்படிப்பட்ட பரமனிடத்து பக்தி கொண்ட அடியவர்களின் பெருமையை, மயர்வற மதிநலம் அருளப் பெற்றவர்களுள் மூத்தோராகிய நம்மாழ்வார் “நெடுமாற்கடிமை”, “பயிலுஞ் சுடரொளி” என்ற திருவாய்மொழிகளில் பரக்கப் பேசுகின்றார். அவரது குலத்தோன்றலாகிய தெய்வப்பாவையார், திருப்பாவைச் செல்வியார், அந்தணர் குல முதலாகிய பெரியாழ்வரால் வளர்க்கப்பட்டவர், வேதியர் குழுவில் பயின்றவர், இம்முறையி லுள்ளாரிடம் வேறு கலப்பு தோன்ற வழி இல்லை என்றாலும், அன்னையார், குலத்திலும், ஞானத்திலும் குறைந்தவர்களாகிய ஒரு குழுவினரிடம் தொடர்பு கொள்கிறார். அவர்களோடு கூடிக் குலாவுகிறார். அவர்களைப் போன்ற உடையும், நடையும்,

பேச்சும் உடையவராகப் பெறுகின்றார். இக்குழு எது என்றால் இடக்கை, வலக்கை அறியா, ஆயர் மகளிர் கூட்டம், அவர்கள் ஒவ்வொருவரையும் தாமே சென்று துயிலுணர்த்துகிறார். இவரது நாவானது இம்மங்கையரின் சீர்மைகளை இவ்வாறு வெளி யிடுகின்றது.

நாயகப் பெண் பிள்ளாய்!
கோதுகலமுடைய பாவாய்!
நற்செல்வன் தங்காய்!
நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்!

இவ்வாறு அன்னையாரின் மனத்திற்கு இலக்காகியது ஆயர் மகளிர் கொண்டிருந்த பக்தியும், பயன் கருதாத் தொண்டுமே யாகும். இவ்வாறு பக்தி ஒன்றினையே நோக்கிக் கலப்புச் செய்யும் இப்பண்பே உயரிய சீர்திருத்தமாக அமைகின்றது.

## சால்புரைக்கும் அழகு

சால்பு என்பதன் பொருள் எல்லாக் குணங்களும் நிறைந்த தன்மை என்பதாகும். சால்பு அமைந்தவர் எவரோ அவரே சான்றோர் என அழைக்கப்படுகின்றார். சான்றோரது செயலும், சொல்லும், மனமும் வஞ்சனை அற்றதாக அமைகின்றன. தன்னலம் நோக்காது பிறர் நலம் பேணுதலே அவர் உயிர் வாழ்க்கையாகும். தமக்கு இன்பம் தருவன எவையோ அவையே கொண்டு பிறருக்கும் இன்பமூட்ட முயல்வர். தமக்கு ஒருவர் புரிந்த தினையளவு நன்றியையும், பனையளவாகக் கருதும் பெருந்தகைமையை உடையவர். அவர்தம் விரிந்த உள்ளம் யாவரையும் தம் உடன் பிறந்தவராகவும், சுற்றத்தாராகவுமே கருதும் தன்மை வாய்ந்தது. தாம் துய்க்கும் எவ்வித நலனையும், பிறருக்கும் பகிர்ந்தளிப்பதே சான்றோர் தம் இயல்பாகும். இத்த கைய சால்பு இலக்கணங்களை முதலில் நம் மனத்தே இருத்திக்

கொண்டு, அருள் நங்கை ஆண்டாள் நாச்சியார் தம் சால்பினையும், சால்புரைக்கும் அழகினையும் நோக்குவோம்.

அஞ்சுகுடிக்கொரு சந்ததியாய் அவதரித்த ஆண்டாள் நாச்சியார் மற்ற ஆழ்வார்களினின்றும் வேறுபட்டவர், நிலமங்கையார் தாமே கோதையாராக அவதாரம் செய்தவர், அத்தகைய செல்வம் மிக்க நாயகியார், இவ்வுலகில் பிறந்துழலக் காரணம் என்ன? எனில், நம் போன்ற நித்ய பாபிகளையும் உய்வித்தல் காரணமாகவேயாம். அதனினும், பேதை மனம் கொண்ட மங்கையர் மாட்டு அன்னயார் காட்டும் கருணைத் திறத்தை என்னென்பது!.

கண்ணபெருமான் கன்னியரின் உண்மை உயர்வினை உணர்ந்து ஒழுகினாற் போலவே ஆண்டாள் தாமும், அவர்களை உத்தம உறவினராகக் கொண்டார்.

ஆண்டாள், ஆயர் மங்கையர் கண்ணனை அடைவதற்காக நோற்ற மார்கழி நோன்பைத் தாமும் இயற்றி அவனைச் சேர விழைகின்றார். ஆயர் பெண்களுக்குச் செயலில் நடைபெற்ற அந்நோன்பு, இவர்க்குப் பாவனையாகத் தான் அமைகின்றது. அத்தகைய பாவனை நிலையிலும், தாம் ஒருவரே இன்பத்தைத் துய்க்க எண்ணினாரில்லை நாச்சியார். இவருடைய அருள் ததும்பும் நெஞ்சமானது, தம்மையொத்த மங்கையர் பலரையும், உடன்கூட்டிக் கொள்கிறது. இறையின்பத்தைப் பலருடன் இணைந்து அநுபவிக்க நினைந்த இவர், அன்பு மொழிகளால், அச்சத்துடன் கூடிய சொற்களால் ஆயர் மகளிரை அஞ்ஞானத் துயிலிலிருந்து ஞான விழிப்புக்குக் கொண்டு வருகிறார். இவ்வாறு ஆயர் மகளிரை மட்டுமின்றி, ஆயரேற்றை, அமரர் கோவை, அனந்த சயனனையுமன்றோ துயிலுணர்த்துகிறார்.

> கூவுவான் வந்து நின்றோம் கோதுகலமுடைய
> பாவாய்! எழுந்திராய்!

அம்பர மூடறுத்து ஓங்கி உலகளந்த
உம்பர் கோமானே! உறங்காது எழுந்திராய்!

கண்ணனை விளிக்கும் இடங்களிலும், அவரை அன்புடன் ஆதரித்த தாய் தந்தையரை மறந்தாரில்லை. யசோதையைக் கூறுங்கால் அவரது அழகினையும், மேன்மையையும் உணர்த்து கிறார். நந்தகோபரைப் பற்றிக் கூறும் சொற்களில் அவர்தம் அறமும் மறமும் வெளிப்படுகின்றன.

ஒ)ரா ார்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்

கொம்பலைாா்க் கெல்லாம் கொழுந்தே! குலவிளக்கே!
எம்பெருமாட்டி யசோதாய்! அறிவுறாய்!

கூர்வேல் கொடுந் தொழிலன் நந்தகோபன் குமரன்

அம்பரமே தண்ணீரே சோறே அறஞ் செய்யும்
எப்பெருமான் நந்த கோபாலா! எழுந்திராய்

இங்கு நந்தகோபரையும், யசோதைப் பிராட்டியையும், எம்பெரு மான், எம்பெருமாட்டி என்று அழைப்பதில் அன்னையாரின் பெருமிதத்தைக் காணமுடிகின்றது.

## நோன்பைப் பற்றிச் செப்பும் அழகு

தெய்வத்தின் அருள் பெறுதற் பொருட்டு மேற்கொள்ளும் செயல் என்பதே நோன்பின் இலக்கணம் ஆகும். நோன்பு மேற்கொள் வோருக்கு இன்றியமையாத ஒன்று ஒற்றுமையாகும். ஒற்றுமை தவிர, பொருமை, அறிவுடைமை, சினங்கொள்ளாமை, கொண்ட கோட்பாடுகளிலிருந்து தவறாமை, அற்ப இன்பத்தை நாடாமை, மனந்தளராமை என்ற இவையும் வேண்டத் தக்கனவாகும்.

**ஔவையார்**

நோன்பெனப் படுவது கொன்று தின்னாமை

என்று உரைக்கிறார். உலக இன்பங்களுக்கு ஈடுபட்டு, உழன்று திரிபவர்கள், நோன்பு எனப்படும் விரத நாட்களிலாவது பலவற்றையும் கொன்று தின்னுதலை ஒழித்தல் வேண்டும் என்பதே ஔவையாரது கருத்தாக அமைகின்றது.

சீர்திருத்தக் கருத்து நிரம்பியவராகிய திருப்பாவைச் செல்வியார், இந்நிலையோடு நின்றாரா என்றால் இல்லை. அதற்கும் மேற்பட்டுச் செல்கின்றார். நோன்பின் நுட்பத்தை உணர்ந்து, ஒரு சீர்திருத்தத்தையும் அமைக்கின்றார்.

வையத்து வாழ்வீர்காள்! நாமும் நம் பாவைக்குச்
செய்யும் கிரிசைகள் கேளீரோ! பாற்கடலுள்
பையத் துயின்ற பரமன் அடிபாடி,
நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலே நீராடி
மையிட்டெழுதோம் மலரிட்டு நாம் முடியோம்
செய்யாதன செய்யோம் தீக்குறளை சென்றோதோம்
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி
உய்யுமாறெண்ணி உகந்தேலோ ரெம்பாவாய்

நோன்பு நோற்போர் இறைவனுக்கு உகந்ததையே செய்ய வேண்டும். தமக்கு சுகம் தருபவையான பால், நெய் முதலிய அறுசுவைப் பொருள்களை உண்ணுதல், மை கொண்டும், மலர் கொண்டும் தம்மை அலங்கரித்துக் கொள்ளுதல், கோளுரைத்தல் முதலியவற்றுக்குள் நுழைதலும் கூடாது. விடியற்காலையில் துயில் நீங்கி, பரமனின் பக்த நாமங்களை நாவார வாழ்த்துதல், பெரியோருக்கும், ஏழையருக்கும் தம்மால் இயன்றதை ஈதல் முதலியவற்றை மேற்கொள்ள வேண்டும் என்று இப்பாசுரத்தின் மூலமாக நோன்பு நோற்கும் அழகினை விவரித்து, மக்கள்

தூய்மை அடைதற்கொரு சீரிய சீர்திருத்தமாகவும் இதனை அமைக்கின்றார்.

## தகுதியைக் கூறும் அழகு

வைணவ நெறியில் ஈடுபட, வைணவ அடியாராவதற்கு இறைவனை அடைய வேண்டும் என்ற விருப்பமே வேண்டுவதாகும். வேறு எந்தக் கைப்பொருளும் வேண்டுவதில்லை என்பதைப் போதுவீர் போதுமினோ என்று அருளிச் செயகிறார் கோதை நாச்சியார். மேலும்,

நாராயணனே நமக்கே பறை தருவான்

என்பதால் உலகப் பொருள்கள் அனைத்திற்கும் உடையவன் நாராயணன். எனவே உடையவனன்றோ உடைமையைப் பற்றிக் கவலை கொள்ள வேண்டும். ஆகவே சிறுமியர்களாகிய நாங்கள், நான், எனது என்ற செருக்கு நீங்கப் பெற்றவர்களாக, எங்கள் கைம்முதல் ஒன்றுமில்லை. அவனே பறை தருவான் என்று அவனையே புகலிடமாகக் கருதி வேண்டுகிறோம் என்பதைப் பகர்கின்றார்.

## உலக நலனையும் வேண்டும் அழகு

*உவந்த உள்ளத் தனாய்*
*உலகமளந்து அண்டமுற நிவந்த நீள்முடியன்*

என்று இவ்வுலகில் பிறந்த அனைத்துயிர்களும் உய்வு பெற வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்தாலேயே அனைத்துயிர்கள் மீதும், தனது திருவடி படவேண்டும் என்ற எண்ணத்தினாலேயே திருவிக்ரம அவதாரம் மேற்கொண்டான். அவனைப் போலவே அவனது அடியவர்களாகிய, இச்சிறுமியரும் தாங்கள் வாழும் ஊரும் நாடும் வளம் பெற வேண்டும், நீங்காத செல்வம் நிரம்பப் பெற வேண்டும் என்று உலக நலத்திற்காக வேண்டுகின்றார்.

ஓங்கி யுலகளந்த உத்தமன் பேர்பாடி
நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீராடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து
ஓங்கு பெருஞ் செந்நெ லூடுகயலுகள
பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்ப
தேங்காதே புக்கிருந்து சீர்த்தமுலை பற்றி
வாங்க குடம் நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய்

## வைணவரின் கற்புநெறியைக் காட்டும் அழகு

கண்ணன் எம்பெருமானின் கமல மலரடித் தொடர்பு பெற்றவர்களுக்கு, அனைத்து தேவதைகளும், கௌரவத்துடன் சேவை செய்யக் கடவன என்பது வைணவ ஆசார்யர்கள் கருத்து. எனவே இறைவன் கண்ணன் ஒருவனையேப் பற்றுகை (அநந்யார்ஹ சேஷத்வம்) என்ற கருத்தை, வைணவரின் கற்பு நெறியை "ஆழிமழைக்கண்ணா" பாசுரத்தில் காட்டுகிறார் கோதை நாச்சியார்.

ஆழி மழைக் கண்ணா ஒன்று நீ கை கரவேல்
ஆழியுள் புக்கு முகந்து கொடு ஆர்த்தேறி
ஊழிமுதல்வனுருவம் போல் மெய் கறுத்து
பாழியந் தோளுடைப் பற்பநாபன் கையில்
ஆழிபோல் மின்னி வலம்புரி போல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்க முதைத்த சரமழை போல்
வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்
மார்கழி நீராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்

## தூய்மையைத் துலங்குவிக்கும் அழகு

அரக்கர் குலத்தோன் என்றெண்ணி அகலாமல் விருப்புற்று வந்து சரணம் புகுந்த விபீடணனைப் போலவும், போர்களத்தில்

தனித்தொரு தூய்மையைத் தேடாது, கர்ம, ஞான, பக்தி யோகங்களைக் கேட்டறிந்த விசயனைப் போலவும், பத்துடை அடியவர்க் கெளியனான அரங்கனை வந்தடைய தன்னதீனமாக, தன்னாலாவது ஒன்றும் இல்லை. யான், எனது என்பது நீங்கப் பெற்ற தூய்மையுடனே சரணம் அடைய வேண்டும் என்று இறை வனைச் சரணம் புகவர, வேண்டிய தூய்மைத் துலங்குவிக்கிறார் நாச்சியார்.

## திருப்பணியின் பயன் கூறும் அழகு

சரணம் புகுந்தபின் செய்ய வேண்டியதாக "வாயினாற்பாடி மனத்தினாற் சிந்திக்க" என்பதை அருளிச் செய்கின்றார். தொழுது என்று கூறி கை படைத்த பயனைப் பெற்றதோடு 'வாயினாற் பாடி' என்று வாய் படைத்த பயனையும் பெற வேண்டுகிறார்கள். இறைவனது திருநாமங்களையும், அவனது கல்யாண குணங்களையும், வாயாரப் பாடி, பாடுவதோடு மட்டு மின்றி, மனத்தினாலும் சிந்தித்துப் போருவோம் என்று கூறுவதால், மனம், வாக்கு, காயம் என்ற இம்மூன்று கரணங் களாலும், இறைவனுக்கு ஆற்ற வேண்டிய திருப்பணிகளைக் கூறுகின்றார் ஆண்டாள் நாச்சியார். இத்தகைய திருப் பணியினால்

போயபிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய்

என்று கோதையார் கூறுகின்றபடியே, சரணமடைவதற்கு முன் உள்ள பாபங்களும், சரணம் அடைந்த பின்பும் தனது சரீர வாசனையாலே நிகழப் போகும் பாபங்களும், நெருப்பிலிட்ட பஞ்சுபோல் தூசாகிவிடும் என்று சரணம் அடைந்தவர்களுக்கு நிகழும் பயனை அருளிச் செய்கின்றார்.

**ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணமுரைக்கும் அழகு**

"புள்ளும் சிலம்பினகாண்" என்ற பாடலில் 'சிலம்பின' என்று இரவு முழுவதும் ஒன்று கூடியிருந்த பறவைகள் விடியற்காலையில் ஆண்பறவை இரை தேடுவதற்காகப் பெண்பறவையை விட்டுப் பிரிந்து செல்ல நேருகிறது. பிரிய மனம் இல்லாத ஆண் பறவையும், பெண் பறவையும் திரும்பி வரும் வரை ஆறியிருத்தற்காக, அன்பு மொழிகளைப் பேசிக் கொள்ளுகின்றன என்பது ஒரு பொருளாயினும், நல்லொ முக்கத்தாலும், அரிய பொருள்களைப் பிறருக்கு எடுத்துரைக் கும், திறன்மிக்கோரான ஸ்ரீவைஷ்ணவரை அறிந்து, யாவரும் அவரைக் கண்டு அன்பு கொண்டு உறவாடுவர். அவரைப் பிரிந்து செல்ல நேரும் போது 'இனி எப்போது இவரைக் காண்போம்' என்று நினைத்து வருந்தி, இரு திறத்தினரும் கூறிக் கொள்ளும் பேரன்பு வாய்ந்த சொற்கள் பல அவ்விடத்து எழும் என்ற ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணமும் இங்கு நினைந்தின்புறத் தக்கது.

இவ்வுண்மையைத் திருக்குறளாரும்

> "உவப்பத் தலைக் கூடி யுள்ளப் பிரிதல்
> அனைத்தே புலவர் தொழில்"

என்று கூறுகிறார்.

**தகாத குலங்களையும் நயமாக உரைக்கும் அழகு**

பேய்முலை நஞ்சுமுண்டு

> "கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி
> வெள்ளத் தரவில் துயிலமர்ந்த வித்தினை
> உள்ளத்துக் கொண்டு முனிவர்களும் யோகிகளும்"

என்ற தொடர்களால் மாயையால் ஏற்படுவன அஹங்கார மமகாரங்கள் என்பதையும், அவற்றின் நச்சுத் தன்மையைப் போக்குவதோடு, காமக் குரோதங்களை நீக்க வல்லவன் எம்பெருமான் என்று கோதையார் நயமாக உரைக்கின்றார். இதன் மூலமாக, ஸ்ரீவைஷ்ணவரிடத்து இருக்கத் தகாதவை அஹங்கார மமகாரம், காமக்குரோதங்கள் ஆகிய குணங்கள் என்பது தெளிவாக்கப்படுகின்றது.

**ஆசாரியனைப் பற்ற வேண்டியதன் அவசியத்தைக் கூறும் அழகு**

கீசுகீசென்றெங்கும் ஆனைச் சாத்தன் கலந்து [திருப். 7]

பாசுரத்தில் காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து என்ற தொடரில் காசும் - என்பதற்கு அச்சுத் தாலியும், (வட்டத் தாலியும்) பிறப்பும் என்பதற்கு முளைத்தாலியும்? (நீண்டதாலி யும்) என்று பொருள் கொள்ளப்படுகிறது. தாலி எனப் பெயர் அமைந்தமையின் மங்கல நாண் என்றே கொள்ளலாம். இங்கு மங்கல நாண் என்பது என்ன?

எட்டிழையாய் மூன்று சரடாயிருப்பதொரு மங்கள ஸூத்ரம் போலே திருமந்திரம்

என்று பிள்ளை லோகாசார்யர் திருமந்திரத்தை மங்கல நாண் போலே என்று கூறுகிறபடியே ஆசார்யன் மூலமாக அணிவிக்கப் பெறும் மங்கள ஸூத்ரம் திருமந்திரம். உலக விஷயங்களில் ஒரு பெண்ணுக்கு மங்கள நாணினாலே அனைத்து நலங்களும் உண்டாகப் பெறுகிறாற் போல், சீவான்மாவாகிய பெண்ணுக் கும், திருமந்திரம் என்ற மங்கள நாணினாலே அமைத்து ஆன்ம நலங்களும் உண்டாகப் பெறும் என்ற கருத்து இவ்விடத்து அறிவுறுத்தப்படுகிறது.

**உள்ளத்தூய்மையைக் கூறும் அழகு**

கீழ்வானம் வெள்ளென்று - பாசுரத்தில் கீழ் வானம் என்று குறிப்பிடுவதால் மேல்வானம் என்ற ஒன்று இருக்க வேண்டும் என்றும் எண்ணத் தோன்றுகிறது.

கீழ்வானம் நம்முடைய இருதய கமலத்தையும், மேல் வானம் என்பது வாத்ஸல்யம் முதலிய குணங்களோடுங்கூடி அதில் எழுந்தருளியிருக்கும் பகவானையும் குறிப்பனவாகும். கீழ்வானமாகிய நமது இருதயமானது தாமசம், இராசசம், சாத்துவிகம் ஆகிய முக்குணங்களும் வாய்ந்தது. ஆதலால் இக்குணங்களின் வாசனையாலே, சில போது சிவந்தும், சிலபோது கறுத்தும், சிலபோது வெளுத்தும் இருக்கும். தூய வெளுத்த இருதயத்திலே எம்பெருமான் இன்பத்தோடு வீற்றிருப்பான். ஆகையாலே, இங்கு கீழ்வானம் வெள்ளென்று - பரமபாகவதர்கள் தமது கீழ்வானம் ஆகிய இருதயத்திலே ஸத்துவகுணம் நிரம்பப் பெற்று வெண்ணிறமுடையதாய் எம்பெருமான் எழுந்தருளத் தக்க ஞான ஒளி பெற்றுத் திகழ் கின்றனர் என்பதை உணர்த்துகின்றார். எனவே பாகவதர்களிடம் அமைய வேண்டியது தாமச ராஜஸ மொழிந்த ஸத்துவ குணமே என்பது புலனாகின்றது.

'எருமை சிறுவீடு மேய்வான் பரந்தன காண்' என்று உரைக்குமிடத்து எருமை - கறுத்த நிறத்தைக் குறிக்கும். பொதுவாக உலகில் வெண்மை ஞானத்தையும், கறுமை அஞ்ஞானத்தையும் குறிக்கும். அறியாமைகள் குறித்தும், அவை நீங்கி எம்பெருமானை வந்தமைந்ததையும் குறித்து இங்கு பேசப்படுகின்றது.

### உபாயத்தைக் கூறும் அழகு

"நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்" - இப்பாடலில் இறைவனையே உபாயமென்று நினைத்து அவனாலேயே பகவதநுபவம் கிடைக்கப் பெற்று உறங்குமவள் என்ற எழுப்பப் படும் பெண் பேசப்படுகின்றாள். இதனால் கீதாசார்யனாலே அருளிச் செய்யப்பட்ட "எல்லாத் தருமங்களையும் விட்டு என்னை

ஒருவனையே உபாயமாகப் பற்று'' என்ற அறத்திலே ஊன்றி நின்று, நம்முடைய ஆன்மா உய்வடைய நம்மால் ஆவது ஒன்றும் இல்லை. நம்முடைய உய்வும் அவனைச் சார்ந்ததாகும்.

''களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்'' [திருவாய்-5-8-8]

என்று அனைத்துப் பொறுப்புக்களையும் ஒப்படைத்துவிட்டு தம்முடைய நலத்தையும் அவனிடமே எதிர்பார்த்திருக்கும் பிரபன்னனின் உபாயத்தை விவரிக்கிறார்.

''உன் கடைத்தலை இருந்து வாழும் சோம்பரை யுகத்திபோலும்'' [திருமாலை-38]

என்று தொண்டரடிப்பொடியாழ்வாரும் இக்கருத்தை உறுதி செய்கின்றார்.

## சீவான்மாவிற்கு ஆதாரத்தைக் கூறும் அழகு

''கற்றுக் கறவைக் கணங்கள் பல கறந்து''- இப்பாடலின் மூலம் கொடியானது பற்றிப் படருவதற்கேற்ற ஒரு கொம்பைப் பற்றியே ஆதாரமாக நிற்கிறது. அதேபோல் நிலவுலகில் உடம்பொடு பிறந்த ஒவ்வொரு ஜீவான்மாவாகிய கொடியும், பரமான்மாவாகிய கொம்பைப் பற்றியே உய்வடைய இயலும் என்பதை உலகோருக்கு உணர்த்துகின்றார். இதற்கு

''கோல்தேடி யோடுங் கொழுந்ததே போன்றதே
மால் தேடியோடும் மனம்'' [இரண்டாம் திருவந்தாதி. 27]

என்ற பாசுரம் சான்றாக அமைகின்றது

## வைத்த இடத்து இருத்தல்

''புள்ளின் வாய் கீண்டானை'' [திருப்பாவை-13] என்ற இப்பாடலினால் ''பாவாய் எழுந்திராய்'' என்று உள்ளே உறங்கும் பெண்ணை விளிக்கின்றனர். பாவாய் என்பதற்குப் பாவை

போன்று வைத்த இடத்திலேயே இருந்து பகவானாலும், ஆசாரியனாலும் விதிக்கப்பட்ட வழிமுறைகளை அநுஷ்டித்து இட்ட வழக்காக இருக்கும் ஆன்ம அழகு பேசப்படுகிறது. ஆன்மாவைப் பற்றி அறியாத அஞ்ஞானிகளே தமது சுதந்திரத்தில் ஆசையுற்றிருப் பார்கள். ஆன்மாவின் ஸ்வரூபத்தை அறிந்த ஞானிகள் எச்செயலுக்கும் தாயின் ஆதரவு நோக்கிக் காத்திருக்கும் சிறு குழந்தை போன்று எம்பெருமானின் ஆதரவை எண்ணியே உணர்ந்திருப்பர் என்று உயர்ந்த ஞானியரின் லக்ஷணம் உரைக்கப்படுகிறது.

"தருதுயரம் தடாயேல் உன் சரணல்லால் சரணில்லை *
விரைகுழுவும் மலர்ப்பொழில் சூழ் விற்றுவக் கோட்டம்மானே *
அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்றவள்தன் *
அருள் நினைந்தே யழும் குழவி அதுவே போன்றிருந்தேனே"

[பெருமாள் திருமொழி 5]

என்று குலசேகராழ்வாரும் இக்கருத்தை அறுதியிட்டு உரைக்கின்றார்.

## மற்றொன்றும் வேண்டாமையைக் கூறும் அழகு

"உங்கள் புழக்கடைத் தோட்டத்து வாவியுள்" - இப்பாடலில் தானே முன்னெழுந்து வந்து யாவரையும் எழுப்புவேன் என்று வாக்களித்து, அதன்படி செய்யாத ஒருத்தியை, ஞான, பக்தி, வைராக்கியங்களாலே பூர்ணரான வரை துயிலுணர்த்துகின்றனர்.

"எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும்
நங்காய்! எழுந்திராய் நாணாதாய்!" [திருப்பாவை. 14]

நாணாதாய் என்ற சொல்லிற்கு, சொல்லியவாறு செய்ய வில்லை என்ற நாணம் சிறிதும் கொள்ளாதவளே என்று பொருள் கொண்டாலும், பாகவத தர்மத்தைக் கொண்டு நோக்கும் போது, கண்ணனோடு கலந்திருத்தல், அவனையே எண்ணியிருத்தல்,

அவனது கல்யாண குணங்களையே பேசிக்கொண்டிருத்தல் என்ற செயல்களைத் தவிர மற்றொன்றில் மனம் வையாதவளாக இருக்கின்றாள். உலகப் போக்கிற்கு மாறுபட்டிருக்கிற தன்னைப் பற்றி யார் என்ன வசவு மொழிகளைப் பேசினாலும், அதனைப் பற்றி செவியேலாதவளாகவும் இருக்கிறாள். இவளுக்கு யான், எனது என்ற நினைவு இல்லை. இந்த அஹங்கார மமகாரமற்ற நிலையையே "நாணாதாய்" என்று உரைக்கப்படுகின்றது.

"பெயரும்கருங்கடலே நோக்கும்ஆறு * ஒண்பூ
உயரும்கதிரவனே நோக்கும் * – உயிரும்
தருமனையேநோக்கும் ஒண்டாமரையாள்கேள்வன் *
ஒருவனையேநோக்கும்உணர்வு" [முதல் திருவந்தாதி. 67]

என்று பொய்கையாழ்வாரும் இச்செய்தியைப் புலப்படுத்து கின்றார்.

## அடியவர் பெருமையைக் கூறும் அழகு

"எல்லாரும் போந்தாரோ போந்தார் போந்தெண்ணிக் கொள்"- என்று எல்லாப் பெண்களுடைய கூட்டத்தையும் காண ஆசைப் பட்டிருக்கும் ஒரு பெண் எழுப்பப்படுகிறாள்.

மெய்யடியார்கள் தம் ஈட்டங்கண்டிடக் கூடுமேல்
அதுகாணும் கண் பயனாவதே [பெருமாள் திருமொழி 2–1]

என்று குலசேகராழ்வார் குறிப்பிடும் அடியார்கள் விருப்பம் உரைக்கப்படுகின்றது. எழுப்புகின்ற பெண்கள் கேட்கும் கேள்வி களுக்கு விடையாக, பாகவதர்களுடன் விவாதம் செய்வது, ஸ்வரூபத்திற்கு விரோதமானது என்றெண்ணி 'நானே தானாயிடுக' என்று பதிலுரைக்கின்றாள் 'நானே தானாயிடுக' - இல்லாத குற்றத்தையும் சிலர் உண்டென்றாலும், அதை இல்லை என்று சொல்லாது ஏறிட்டுக் கொள்கையே ஸ்ரீ வைஷ்ணவ-

லக்ஷணம் என்பதும், பிறர் குற்றத்தையும் தனது பாபம் என்று எண்ணிக் கொள்ளும் பாகவத விஷயமும், பாகவதர்களுடன் கூடி இருக் கையே பரமபோக்யம் என்று கொள்வதும் பகவத் விஷயத்தில் ஈடுபட்டிருப்பவர்கள் அனைவரின் திருமுகங்களை யும் ஒருங்கே காண ஆசைப்படுவதும் கூறப்படுகின்றது.

எல்லே! இளங்கிளியே! என்பதால் பாகவதர்களைக் காணுதல், அவர்கள் வார்த்தைகளைக் கேட்பதே உத்தேச்ய மாகக் கொள்ளுதல், அவர்களிடத்து கௌரவவார்த்தைகள் சொல்லுதல், பிறர் குற்றத்தையும் தம் குற்றமாகக் கொள்ளுகை, கணப் பொழுதேனும் இறைவனடியார்களைப் பிரிந்திருக்க இயலாமை, இறைவனது அநுபவமும், இறைவனடி யார்கள் நலனுக்கு உறுப்பாக அமைவதையும், பாகவதர்கள் பெருமை யாக உரைக்கின்றார் கோதையார்.

பகவதநுபவத்தைப் பாடி, பாகவதர்களை உகுப்பிக்கையே பாகவத வைணவ தர்மம் என்று கூறுகிறார் கோதை.

"வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான்
திருப்பாதம் பணிந்து" என்று நம்மாழ்வாரும் [திருவாய்- 4-6-8]

"வில்லிபுதுவை விட்டு சித்தர் தங்கள் தேவரை
வல்ல பரிசு விருவிப்பரேல் அது காண்டுமே" [நா. தி - 10-10]

என்று கோதையாரும் அருளிச் செய்துள்ளபடியே, இறைவன் அடிகளைப் பற்றுவதற்குத் தனித்து வருவது உகப்பன்று. அவனடியார்களை முன்னிட்டுக் கொண்டு வருவதே முறை என்பதே கோபியர் அறிந்தனர் என்பதன் மூலமாகவும் அடியவர் பெருமையைப் பகர்கின்றார்.

## திருப்பள்ளியெழுச்சி பாரும் அழகு

"கொடியார்மாடக் கோளூரகத்தும் புளிங்குடியும் *
மடியாதின்னே நீதுயில்மேவிமகிழ்ந்ததுதான் *

அடியாரல்லல்தவிர்த்த அசைவோ? அன்றேல் * இப்
படிதான் நீண்டுதாவிய அசைவோ? பணியாயே."

என்று நம்மாழ்வார் திருப்பள்ளியெழுச்சி பாடினாற்போல நாங்களும் திருப்பள்ளியெழுச்சி பாட வந்தோம் என்று கோதையார் கூறுகின்றார்.

இதனால் இறைவனை அடைந்து, அவனது குணநலன்களைக் கூறி, அவனுக்குத் திருப்பள்ளியெழுச்சி பாடுதலே அடியார்களுக்குரிய செயல் என்று திருப்பள்ளியெழுச்சி பாடுதலின் அழகை விவரிக்கின்றார்.

## அடியார் உகந்தவற்றைக் கூறும் அழகு

"அம்பரமே தண்ணீரே சோறே அறஞ்செய்யும்" - பாசுரத்தின் மூலமாக, இறைவன் அடியார்களுக்கு தாரக, போஷக, போக்யங்களாக அமைவன, இறைவனது திருவடிகளும், அவன் சம்பந்தப்பட்ட பொருட்களும், அவனது அடிபாடும் பாகவத அபிமானமும் ஆகும்.

"உண்ணும்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலை
எல்லாம் கண்ணன்" [திருவாய்மொழி -6-7-1]

என்று நம்மாழ்வாரும் அதே கருத்தை அறுதியிடுகின்றார்.

## சரணாகதியைச் செப்பும் அழகு

'உந்து மதகளிற்றன்' - இப்பாசுரத்தால் பிராட்டியுடன் கூடிய சேர்த்தியே உறுதியைத் தரவல்லது. அடியார்கள் குற்றங்களைப் போக்கி, நற்றத்தை அளிக்கவல்லவள் நீளாதேவி என்று நீளாதேவியின் பெருமையையும், சரணாகதியின் சிறப்பையும் செப்புகின்றார்.

## திருமகளின் பெருமையைப் பேசும் அழகு

குத்து விளக்கெரிய பாசுரத்தால், திருமகளின் பெருமை பேசப்படுகிறது. திருமகள் புருஷகாரம் செய்தாலொழிய ஈச்வரன் காரியம் செய்யான். ஈச்வரனது சுதந்திரத்தைப் போக்கி, சேதனர் களின் குற்றத்தையும், பொறுப்பிக்கும் புருஷகார பூதையாக நின்று காப்பவள் என்று திருமகள் நிலை பேசப்படுகிறது.

## அற்புதன் கண்ணன் அடியாரைக் காக்கும் அழகு

'ஏற்ற கலங்கள் எதிர் பொங்கி மீதளிப்ப' - இப்பாசுரத்தில் 'ஊற்ற முடையாய்' என்று அடியாரைக் காப்பதில் அசைக்க வொண்ணாத உறுதிபடைத்தவன் எம்பெருமான் என்பது தெளி வாகப்படுகின்றது. அரக்கர் குலத்தோனாகிலும், பகைவனா னாலும் சரணம் எய்தியவன் காக்கப்படவேண்டியவன் என்று விபீடணனுக்கு இராமபிரான் அபயம் அளிக்கிறார். மேலும் பெரியாழ்வாரும்,

"தன்னடியார் திறத்தகத்துத்
தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல் *
என்னடியார் அது செய்யார் செய்தாரேல்
நன்று செய்தார் என்பர் போலும் * "

(பெரியாழ்வார்திருமொழி. 4-9-2)

என்று அடியார்கள் நலனில் எம்பெருமானின் விருப்பத்தை அருளிச் செய்கின்றார்.

## பிரபந்நனது நிலையைக் கூறும் அழகு

"கறவைகள் பின்சென்று" - பாசுரத்தின் மூலமாக, பிரபந்நன் கர்மயோகத்திலும் நிலை நின்றவனல்லவன். ஞானயோகத்தை அநுஷ்டிக்கத் தக்கவனுமல்லன். திருவடித் தாமரைகளில் பக்தியுடையவனுமல்லன்.

"நலந்தான் ஒன்றுமிலேன் நல்லதோரறம்
செய்துமிலேன்"

ஒரு கைம்முதலுமற்றவனாய், வேறுகதியற்றவனான நான் சரண்யனான உன் திருவடிவாரத்தை உபாயமாகப் பற்றுகிறேன் என்று ஆளவந்தார் அருளிச் செய்த கருத்திற்கேற்ப பிரபந்நனின் நிலையை விவரிக்கிறார்.

## இறைவனுக்கான இறைப்பணியை உரைக்கும் அழகு

சிற்றஞ்சிறுகாலே பாசுரத்தாலே - தாங்கள் வேண்டிய பறை கண்ணன் திருவடிகளில் செய்யும் கைங்கர்யமே என்று அறுதியிட்டு, அக்கைங்கர்யமும் அவனுகப்புக்காகச் செய்யு மதேயொழிய, தங்களது மகிழ்ச்சிக்காக அன்று என்று பகவத் கைங்கர்ய நிலையை உணர்த்துகின்றார். மேலும் இப்பாசுரத் திலே கோவிந்தா! உனக்கு என்பதால், அகார வாச்யனான எம்பெருமானையும், உனக்கே நாமாட் செய்வோம் - உனக்கே - என்பதால் உகார வாச்யையான பிராட்டியையும், நாம் - மகார மாகிய ஜீவஸ்வரூபத்தையும் குறிக்கிறது.

உன்றன்னோடு உற்றோமே யாவோம் என்பதால் நாராயண பதத்தையும் எற்றைக்கும் - ஆட் செய்வோம் என்ற பதங்களால் ஆய பதத்தையும் மற்றை நங்காமங்கள் மாற்று - நம சப்தத் தையும் குறிக்கிறது. இவ்வாறு சிற்றஞ்சிறுகாலே - பாசுரம் மூல மாக வைணவ சமயத்திற்கே உரித்தான உயர்மந்திரங்களுள் ஒன்றான திருமந்திரப் பொருள் உரைப்பதன் மூலம் இறைவனுக் கான இறைபணியின் அழகை உணர்த்துகின்றார்.

**பாதாதி கேசம் பாடி முடிக்கும் அழகு**

திருப்பாவை இரண்டாம் பாசுரத்தில்,

"பாற்கடலுள் பையத்துயின்ற பரமனடிபாடி"[37]

என்று தொடங்குகிறார்.

"வங்கக் கடல் கடைந்த மாதவனைக் கேசவனை"[38]

என்று முடிபாடுகின்றார்.

இவ்வாறு அடிபாடுதலில் தொடங்கி, முடிபாடுதலில் முடிக்கின்றார். எம்பெருமானைப் பாதாதிகேசம் பாடி முடித்தல் என்ற ஆழ்வார்கள் குடியில் (அஞ்சு குடி) பறிந்தவராதலாலே இவரும் அம்மரபைப் பின்பற்றியே தமது பிரபந்தத்தையும் அருளிச் செய்கின்றார்.

நாச்சியாரது திருப்பாவையில் நடை அழகு மேற்கூறியவாறு அமைந்துள்ளது.

**திருப்பாவையின் நடையழகினால் உணர்த்தப் பெறும் உண்மை**

"உற்றோமேயாவோம் உனக்கே நாமாட்
செய்வோம்"
"எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர்
எம்பாவாய்"[39]

மனித வாழ்வின் நடையில், கண்ணன் எம்பெருமான் இடத்திலேயே உற்றவர்களாக நடந்து, அவனுக்கே ஒழிவில் காலமெல்லாம் உடனாய்மன்னி வழுவிலா அடிமை செய்தே இருப்பவர்கள் எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர் என்பதே கோதை நாச்சியார் தம் திருப்பாவையில் மனிதர்கள் மேற்கொள்ள வேண்டிய நடையழகாகக் காட்டுவதாகும்.

37. ஆண்டாள், திருப்பாவை பா. 12
38. மேலது பா. 30
39. மேலது பா 30

# நாச்சியார் திருமொழியில் திரண்டிருக்கும் அழகு

## பெயர் அமைப்பில் அழகு

நாச்சியார் திருமொழி, திருப்பாவைக்கு அடுத்து அன்னை யாரால் திருவாய் மலர்ந்தருளப் பெற்ற திவ்வியப் பிரபந்தமாகும். இப்பிரபந்தத்தில் திரண்டிருக்கும் அழகினை இப்பகுதியில் நோக்குவோம்.

## பெயர் அமைப்பு

நாச்சியார் + திருமொழி = நாச்சியார் திருமொழி. ஆண்டாளுடைய சிறந்த வார்த்தை என்றும், திருமொழி மேன்மையான சொற்களாலமைந்த நூல் என்றும் பொருள் தருகின்றது (அடையடுத்த கருவியாகுபெயர்). ஆறாம் வேற்று மைத் தொகையாகக் கருதும்போது நாச்சியாரது திருமொழி எனப் பொருள்படும். திருமொழி - பண்புத் தொகையாகவும், மேன்மை யையுடைய சொல் எனப்படும்போது இரண்டாம் வேற்றுமை யுருபும் பயனும் தொக்க தொகையாகவும் அமைகின்றது. நாச்சி யார் திருமொழி புணர்ச்சியின்போது, நிலைமொழி உயர்திணை யாக அமைவதால், உயர்திணை முன் வருமொழி முதல்வலி இயல்பாயிற்று என்பதற்கேற்ப, இயல்புப் புணர்ச்சியாகப் புணர்ந் துள்ள அழகினை நாம் காணமுடிகின்றது.

## திருமொழியில் பிள்ளைத் தமிழ் அழகு

திருப்பாவையில் பிள்ளைப் பருவச் செயல்களை, உரைத்த விடத்தை முன்னர்க் கண்டோம். திருமொழியிலும் அவ்வாறே சிற்றிலிழைப்பதில் தம் மனம் ஈடுபட்டதைக் காட்டுகிறார். தம் வயதுச் சிறுமியர் பலரையும் தன்னுடன் கூட்டிக் கொள்கிறார். மகிழ்ச்சியில் திளைக்கிறார் ஒவ்வொருவரும் ஓடி, ஓடி ஒரு

வேலையைச் செய்கின்றனர். மட்குடம் வருகின்றது ; நீர் நிரம்பு கின்றது ; வண்டலில் உள்ள சிறு மணல், சிறு சுளகு இவற்றைக் கொண்டு வந்து குவிக்கின்றனர். ஒருவரை ஒருவர்அழைத்துக் கொள்ளுவதாலும், பணிக்கு ஏவிக் கொள்ளுதலாலும் பேரொலி எழும்புகின்றது. இவர்களுக்கிருக்கும் இந்த ஊக்கத்தின் காரணமாக இவர்கள் மிகப் பெரிய ஓர் அரண்மனையைக் கூட அமைத்து விடுவார்கள் போலுள்ளது. இக்கூட்டம் அருள்நங்கை ஆண்டாள் நாச்சியாரின் அற்புதத் தலைமையில் தம் கடமையை ஆற்றுகின்றனர். மற்றைய பெண்டிரெலாம் இவர் ஏவிய மொழிக்கேற்பச் செயல் புரிகின்றனர். மணலைச் சிறு சுளகில் இட்டுக் கொழிக்கின்றார்கள். வண்டல் மண்ணை அதனோடு கலக்கின்றனர். நீர் விட்டு மிதித்து அழகான சிறு இல்லத்தை அமைக்கின்றார்கள். சிறு முற்றம், நீண்ட கூடங்கள், அழகிய அறைகள் யாவும் இந்த இல்லத்தில் அமைகின்றன. அழகுடன் இந்த இல்லத்தை அமைக்க விரும்பி, தங்கள் வளையணிந்த கரங்களால் நெடுநேரம் தாம் அமைத்த சிறு இல்லத்தை சீர் செய்கின்றனர். முதுகும் வலிக்கத் தொடங்கிவிட்டது என்பதை,

> "வட்ட வாய்ச் சிறு தூதையோடு
> சிறு சுளகும் மணலுங் கொண்டு" [நா.தி. 2-8]
>
> "வண்டல் நுண்மணல் தெள்ளியாம்
> வளைக்கைகளால் சிரமப்பட்டோம்" [நா.தி. 2-3]
>
> "இன்று முற்றும் முதுகு நோவ
> இருந்திழைத்த இச்சிற்றிலை" [நா.தி.2-2]

எனத் தெரிவிக்கின்றார்.

### கண்ட காட்சியைக் காட்டும் அழகு

மேற்காட்டியவாறு மங்கையர் மகிழ்ச்சியுடன் இழைத்த சிற்றலின் முடிவு யாது? ஆயர் குல மன்னன் கண்ணன் இவர்கள்

எதிர்நோக்காதவாறு அந்த இல்லத்தினுள் நுழைகிறான். அடிமேல் அடிவைத்து அவன் புகுவதனால் அவனது ஒளி நீல நிறம் இல்லமேங்கும் வியாபிக்கிறது. இதனால் இந்த இல்லம், மகளிரின் ஆடை, அணிகலன்கள் யாவும் இந்த மணி நீல நிறத்தைக் கொண்டே ஒளிர்கின்றன. இந்த அற்புதச் செயல் காரணமாக சிறுமிகள் செய்வதறியாது கலங்கி நிற்கின்றனர். அவர்கள் கைகள் தாங்கள் செய்து கொண்டிருந்த பணியைத் துறந்தன. கண்கள் அங்குமிங்கும் உலாவுகின்றன. இவ்வாறு அவர்கள் நோக்கத்தை வேறுபடுத்தவே கண்ணன் இம்மாற் றத்தை உண்டாக்கினான் என்பதை இந்த மங்கையர் எவ்வாறு அறிய இயலும்? இவர்களுடைய நோக்கம் அந்த இல்லத்தை விட்டு நீங்கியதோ, இல்லையோ, உடனே அந்த இல்லத்தை நெருங்கிச் சிதைத்துவிட்டு புன்முறுவல் காட்டி நிற்கிறான் கண்ணன். இது அவனுக்கு ஒரு விளையாட்டாக அமைகின்றது. பெண்களுக்கோ நீல நிறத்தைத் தவிர, அந்நிறத்திற்குரிய காரணப் பொருள் எதுவும் தோன்றவில்லை. ஆதலால் மீண்டும் தங்கள் இல்லத்தின் மீதே மீண்டும் பார்வையைச் செலுத்து கின்றனர்.

இப்போது நீலக்குன்றின் மீது ஒரு செந்தாமரை அலர்ந்தாற் போன்ற உருவம் காட்சி தருகின்றது. அதன் குறுநகை அவர்தம் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. இத்தகைய குறும்புகள் செய்தானாயினும் அவன்மீது இவர்கட்கு சினம் தோன்றவில்லை. மாறாத இவர்தம் உள்ளம் அவனை நினைந்து நினைந்து உருகுகிறது. இத்தத்துவத்தை இன்னதென உணர்ந்த ஆண் டாள் நாச்சியார் வியப்புறுகின்றார். கண்ணா! இச்சிறு இல்லத் தோடு எங்கள் சிந்தையையும் அழித்து விடுவாய் போலும்! உன் பொருட்டே பித்தேற்றி எங்களை மயக்குகிறாய். எங்களது நெஞ்சமும் உன்னை விட்டுப் பிரிந்து வரமாட்டேன் என்கிறது.

இவ்வாறு செய்வதற்கு உன் முகத்தில் என்ன மாயமந்திரங்களைத் தான் வைத்திருக்கிறாய்? அந்தோ! கண்ணா! நீ எங்கள் வருத்தத்தை அறியவில்லையா? உன்முகம் என்னவோ சிவந்த தாமரைதான். ஆனால் உன்னுடைய நோக்கம் என்னவோ தாமரையிற் போன்று குளிர்ந்ததாய்த் தோன்றவில்லை. நாங்கள் என்ன செய்வோம்! எங்குச் செல்வோம்! உன்னையன்றி நாங்கள் வேறு ஒரு கதியைக் கண்டறியாதவர்கள் என்று இறைஞ்சுகிறார் கோதை நாச்சியார். இந்தக் காட்சிகளெல்லாம் அன்னையாருக்குப் புறக்காட்சியாகயல்ல; உள்மனக்காட்சியேயாகும்; பல சொற்களைக் கொண்டு, இதனைச் சொல்லோவியமாக்குகின்றார். அவையே இப்போது நமக்கு ஆதரவு தருவனவாகும்.

தெள்ளி நாங்கள் இழைத்த கோலம்
அழித்தி யாகிலும் உன்றன் மேல்
உள்ளமோடி உருகலல்லால்
உரோட மொன்று மிலோம் ........... [நா.தி. 2-5]

எங்களை மையலேற்றி மயக்க உன்முகம்
மாய மந்திரந்தான் கொலோ!
செய்ய தாமரைக் கண்ணினாய்! எங்கள்
சிற்றில் வந்து சிதையேலே ........... [நா.தி. 2-4]

இவ்வாறாக ஆண்டாள் நாச்சியார் பிள்ளைத் தமிழாகிய சிற்றில் செய்தல் பதிகத்தில் தம்முடைய செயலை மட்டும் காண்பவரில்லை. அவ்வாறு காண்பவராயின் இவரை மற்றவரை விட மாண்புடையவர் என்று கூறுவதற்கு இடமில்லை. அதனால் இச்செயலைக் காணுங்கால் அன்னையாருக்கு, கண்ணனது பிள்ளைப் பருவச் செயலும் கூட காட்சியளிக்கிறது. பெண்பிள்ளை சிற்றில் செய்தலும், ஆண்மகன் சிற்றில் சிதைத்தலும் என்ற பிள்ளைத் தமிழ்ப் பருவ இலக்கணம் அன்னையாரின் கொஞ்சு தமிழில் விஞ்சுகின்ற நடையழகினைக் காண முடிகின்றது.

## பிள்ளைத் தமிழில் காட்டும் அற்புத அழகு

நாச்சியாரது திருமொழிப் பாசுரங்களில் சில தாங்கள் சின்னஞ் சிறுமிகள் என்பதைக் காட்டுகின்றன. சிலர் மங்கைப் பருவத்தினர் என்பதையும் குறிக்கின்றன. அதுமட்டுமின்றி கண்ணனது இருபருவச் செயல்களும் அமைந்துள்ளன.

## ஆண்டாளது பிள்ளைப் பருவத்தைக் காட்டுவன

இலங்கையழித்த வீரனே, கொங்கை கிளர்ந்தெழாத இளம் பிள்ளைகளாகிய எங்கள் சிற்றிலை நாள்தோறும் சிதைப்பதாகப் பாவித்து நீ செய்யும் செயல்களின் உட்பொருள்களை அறிந்து கொள்ளக் கூடிய திறம் எங்களுக்கில்லை. ஆதலால் நீ எங்களைத் துன்புறுத்த வேண்டாம்.

முற்றிலாத பிள்ளைகளோம் முலைபோந்திலாதோமை * நாள்தொறும்
சிற்றில்மேலிட்டுக்கொண்டு நீசிறிதுண்டுதிண்ணெணநாம்அது
கற்றிலோம் * கடலையடைத்துஅரக்கர்குலங்களை முற்றவும்
செற்று * இலங்கைப்பூசலாக்கியசேவகா! எம்மைவாதியேல். (நா.தி. 2-6)

கடலைப் போன்ற நிறமுடையவனே, உனது பேச்சின் பாவத்தை அறிந்து கொள்ளும் திறமுடையவரிடத்தில், இக்காதல் ததும்பும் பேச்சைப் பேசினால், மிகவும் சுவையைத் தரும். அவ்வாறின்றி இந்தப் பேச்சின் கருத்தறிய மாட்டாத சிறுமிகளாகிய எங்களிடத்தில் அவற்றைப் சிதைத்து வருத்துவதில் என்ன பயன்? உனது பிராட்டிமார்கள் பேரில் ஆணை! எங்கள் சிற்றிலைச் சிதைக்க வேண்டா.

பேதம் நன்கறிவார்களோடு இவைபேசினால் பெரிது இன்சுவை *
யாதுமொன்றறியாதபிள்ளைகளோமை நீநலிந்து என் பயன்? *
ஓதமாகடல்வண்ணா! உன்மணவாட்டிமாரொடு சூளுறும்
சேதுபந்தம்திருத்தினாய்! எங்கள் சிற்றில் வந்து சிதையேலே (நா.தி. 2-7)

ஒளி பொருந்திய சக்கரமேந்திய கண்ணபிரானே, சிறுகலம், முச்சில் மணல் இவற்றைப் பெற்றுப் பிரியத்திற்கேற்ப இல்லமைத்து விளையாடும் எங்கள் மணல்வீடுகளைப் பயன் படா வண்ணம் அழிப்பதனால் உனக்கென்ன நன்மை! நீ எங்களைக் கையால் தொட்டும் அணுகியும் துன்பப்படுத்த வேண்டா. நாவானது கசந்து போனால் கருப்பங்கட்டி கூட கசக்கும் என்பதை நீ அறிவாயல்லவா? என்று கோதை நாச்சியார் கண்ணனை நோக்கி வினவுகிறார்.

வட்டவாய்ச்சிறுதூதையோடு சிறுசுளகும்மணலும்கொண்டு *
இ[illegible]ாவிளையாடுவோங்களைச் சிற்றிலீடழித்துஎன்பயன்? *
தொட்டுதைத்துநலியேல்கண்டாய் சுடர்ச்சக்கரம்கையிலேந்தினாய்! *
க[illegible]ர்கைத்தால் இன்னாமையறிதியே கடல்வண்ணனே! [நா.தி. 2-8]

## ஆண்டாள் மங்கைப் பருவத்தைக் குறிக்கும் இடங்களாவன

தெளிந்த அலைகளையும் மிகுந்த ஆழத்தையுமுடைய திருப்பாற்கடலில் துயின்றவனும், கஜேந்திரன் துன்பத்தைத் தொலைத்தவனுமான கண்ணபிரானே, அடியார் துயரைத் தீர்க்க வல்ல உன்னிடத்து ஆர்வங்கொண்டிருக்கும் எங்களை உனது கடைக்கண் நோக்கினாலேத் துன்புறுத்த வேண்டா. நாங்களோ இந்த இல்லத்தை அமைப்பதற்காக வளையல்கள் அணிந்த கரங்களினால் சிறுமணலினைப் புடைத்துப் புடைத்து மிகுந்த களைப்படைந்துள்ளோம்.

குண்டுநீருறைகோளரீ! மதயானைகோள்விடுத்தாய்! * உன்னைக்
கண்டுமாலுறுவோங்களைக் கடைக்கண்களாலிட்டுவாதியேல் *
வண்டல்நுண்மணல்தெள்ளி யாம்வளைக்கைகளால்சிர[illegible]டோம் *
தெண்திரைக்கடற்பள்ளியாய்! எங்கள்சிற்றில்வந்துசிதையேலே
[நா.தி. 2-3]

காள மேகம் போன்ற நிறமுடைய புண்டரீகனே, உன்னு டைய நயமான வார்த்தைகளும், தாழ்ந்த செயல்களும் எங்களை

மயக்கி அறிவு கெடுக்கைக்கு உனது முகமானது சொக்குப் பொடியோ?

[illegible]முகில்போல்வண்ணா! உன்தன்பேச்சும்செய்கையும் * எங்களை
மையலேற்றிமயக்கஉன்முகம் மாயமந்திரந்தான்கொலோ? *
நொய்யர்பிள்ளைகளென்பதற்கு உன்னைநோவநாங்களுரைக்கிலோம் *
செய்யதாமரைக்கண்ணினாய்! எங்கள்சிற்றில்வந்துசிதையேலே

[நா.தி. 2-4]

வஞ்சனை வாய்ந்த கண்ணனே, வெளுத்துச் சிறுத்த மணல்களைக் கொண்டுக் காண்போர் வியக்கத் தக்கவகையில், அழகுற அமைக்கப்பட்ட சிற்றிலாகிய கோலத்தை நீ அழித்தாலும் கூட , எங்கள் நெஞ்சமானது உன்னிடம் பாய்ந்து உருகுகின்றதே யொழிய, உன்பால் சிறிதும் சினங்கொள்ளவில்லை. அவ்வாறி ருக்க, உனக்கு எங்களிடம் அன்பும், உன் முகத்தில் கருணை ததும்பும் கண்களும் இருப்பின், இந்தச் சிற்றிலைச் சிதைக்க முற்படுவாயோ? என்று வினாத் தொடுக்கிறார்.

வெள்ளைநுண்மணற்கொண்டு சிற்றில்விசித்திரப்பட * வீதிவாய்த்
தெள்ளிநாங்களிழைத்தகோலம் அழித்தியாகிலும்உன்தன்மேல் *
உள்ளமோடியுருகலல்லால் உரோடமொன்றுமிலோம்கண்டாய் *
கள்ளமாதவா! கேசவா! உன்முகத்தன கண்களல்லவே

[நா.தி. 2-5]

உன் திருவடியால் மண்ணும் விண்ணும் அளந்து கொண்டவனே. நாங்கள் தனித்து விளையாடும் முற்றத்தில் புகுந்து, அழகு முகத்தையும் புன்முறுவலையும் காட்டி, எங்கள் சிற்றிலோடு நெஞ்சத்தையும் கட்டுக்குலையுமாறு செய் தனையே! அதனோடு மட்டுமின்றி எங்களைப் பற்றிக் கொண்டு அலக்கழித்து நின்றால், அருகில் நின்றவர் தங்களுக்குத் தோன்றிதைச் சொல்லி இகழ மாட்டார்களோ? என்று கண்ணனை நோக்கிக் கேள்வி கேட்கின்றார்.

முற்றத்தூடுபுகுந்து நின்முகம்காட்டிப் புன்முறுவல்செய்து *
சிற்றிலோடு எங்கள் சிந்தையும் சிதைக்கக் கடவையோ? கோவிந்தா!
முற்றமண்ணிடம் தாவி விண்ணுற நீண்டளந்து கொண்டாய்! * எம்மைப்
பற்றிமெய்ப் பிணக்கிட்டக்கால் இந்தப் பக்கம் நின்றவர்கள் என்சொல்லார்.

(நா.தி. 2-9)

இச்செய்திகளை நோக்கும்போது கோதை நாச்சியாருக்குச் சிற்றில் அமைத்து விளையாடும் இளமைப் பருவத்திலேயே மங்கைப் பருவ உணர்ச்சிகளும் உருக்கொண்டெழுந்தன என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

இதற்குக் காரணம் என்ன? ஆண்டாள் தம் இளம் பருவத்தில் தான் சிற்றிலிழைத்துக் கொண்டிருக்கிறார். ஆனாலும் இவர் நெஞ்சம் கண்ணன் பாலே சென்றுவிட்டது. உள்ளுவார் உள்ளக் கருத்துக்களையெல்லாம் அறிவும் மாயனாகிய கண்ணன், கோதையார் மனக்கண் முன்னே காட்சி அளிக் கிறான். இக்காட்சி அவரிடத்துக் காதலைப் பிறப்பிக்கின்றது. அதற்கேற்ற சொற்களை அன்னையார் வெளிப்படுத்துகிறார். இவரது காதல் உணர்வு உலக மக்களைப் போன்று சில நாட் களில் மாறுபடக் கூடிய உடற்காதல் போன்றதல்லவே! "என்று நீ அன்று நான் உன்னடிமையல்லவோ?" என்றவாறு ஆன்மாவிற்கும், பரமான்விற்கும், என்றும் ஒரே தன்மையதாய் விளங்கக் கூடிய ஆன்மக் காதலல்லவா? அழியாத இவ்விரண்டு ஆன்மாக்களின் தோற்றத்திற்கும் ஒரு காலவரையறை காண இயலாத போது, இக்காதலுக்கும் எவ்வாறு காலவரையறை காண இயலும்? இதன்றி, இவர் இருவருக்கும் இளமை, முதுமை என்பதைச் சொல்லத்தான் இயலுமா? கண்ணனோ பரமான்மா, ஆண்டாளோ அவனை விட்டு என்றும் பிரியாத இயல்பு வாய்ந்த பிராட்டிமாருள் ஒருவராகிய உயரிய சீவான்மா. இத்தகைய தன்மை வாய்ந்த இவர்கள் உலகநலத்தின் பொருட்டே ஒருவரை

விட்டு ஒருவர் பிரிகின்றனர். அப்பிரிவு, ஆண்டாளை வருத்தா மலிருப்பதும், அச்சமயங்களில் பகவான் தோன்றி இவரது பிரிவுத் துன்பத் தைத் துடைக்காமலிருப்பதும் எவ்வாறு? கண்ணனும் சிற்றில் சிதைக்கும் தன் பிள்ளைச் செயலையே மேற்கொள்வதையும், அப்போதே தன் பேச்சினாலும், அழகினாலும், செயலினாலும் காதலென்னும் கயிற்றை வீசி, அன்னையாரைக் கட்டுப்படுத்து வதையும் காணமுடிகின்றது. ஆதலான் எங்கும் என்றும் காண இயலாத இச்சீரிய செயல்களுக்கு இவர்களுடைய தெய்வத் தன்மையும், ஆன் மீகத் தொடர்புமே காரணமென்பதைக் கண்டுகொள்ள முடி கின்றது. இதற்கு வேறு ஒரு காரணத்தை யாராலும் உரைக்க இயலாது. இவ்வாறு ஆண்டாள் சிற்றிலிழைத்த பிள்ளைப் பருவச் செயலின் அற்புத அழகினைக் காண முடிகின்றது.

## ஒளி விளக்காகத் திகழும் அழகு

பண்டைத் தமிழ் நிலம் நானிலங்களாகப் பிரிக்கப்பட்டது. அவற்றுள் ஒன்று முல்லை நிலம். முல்லை நிலத்திற்குரிய மக்கள் ஆயர். இது முல்லைக் கொடிகளுக்கும், மரங்களுக்கும் இருப்பிடம். பசுக்கூட்டங்களை வளர்த்தெடுக்கும் அன்னை பூமி. ஆனந்தம் விளையும் நிலம். பசுமை மிக்க புல்தரைகள் மலிந்த இடம். நீர் நிறைந்த சுனைகள் ஆங்காங்கே அமைந்துள்ள நிலம். இவற்றை உண்டும், பருகியும் வளரும் ஆநிரைகளின் ஆற்றலைத் தான் அளவிட முடியுமா? அவை வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்களாம். இத்தகைய நீங்காத செல்வத்திற்குக் காரணம் யார்? அந்நிலத்திற்குரிய இறையாகிய மாயோனே காரணம் ஆவான். 'மாயோன் மேய காடுறை உலகமும்' என்பது தொல்காப்பியம்.

இத்தகைய செல்வம் செறிந்த ஆயர்பாடிக்கு அணிவிளக் கான கண்ணன் எம்பெருமான் தோன்றுகின்றான். ஒருபுறம் ஆடல் நிகழ்வு மறுபுறம் பாடலின் பொலிவு ; ஓரிடம் ஆடவரின்

ஆண்மை விளையாட்டுக்கள் நடைபெறுகின்றன. மறுபுறம் கன்னியர் தம் களியாட்டங்களிலே களித்திருக்கின்றனர். ஆயர் பாடி முழுவதுமே உற்சாகத்தில் ஆழ்ந்துள்ளது.

"பாடுவார்களும் பல்பறை கொட்ட நின்று
ஆடுவார்களும் ஆயிற்றாய்ப் பாடியே"

(பெரியாழ்வார்திருமொழி. 1-1-2)

பாலும் வெண்ணெயும் படிந்து சேறுமிகுந்த முற்றத்தில், இந்தக் குதூகலத்தின் இடையில் நீலநிறக் குழந்தை ஒன்று ஒளிர்கிறது. அதன் அழகு கொழுந்து விட்டு வளர்கிறது. அக்குழவியை யாவரும் கண்ணன் என வழங்குகின்றனர். எளிமையுடையவன் என்ற பெயரும் தரும் இப்பெயருக்கேற்ப அவன் அனைவரிடமும் எளிமை தோன்றப் பழகி வருகிறான். இப்படி இருந்தாலும் கூட கன்னியரிடமே அவனது கருணை பெரிதும் கோலோச்சுகிறது. ஏனெனில் கன்னியர் கலங்கா நிலையினராகவும், களங்கமற்றவரும் ஆக இருப்பதே இதற்குக் காரணம். மங்கையர் தொட்ட வெண்ணெயே அவனது உணவாகின்றது. அக்கன்னியரோடு கைகோத்தாடக் கூடிய குரவைக் கூத்தே இவனுக்குப் பொழுது போக்காக அமை கின்றது. குழலோசையால் அவர்களைக் கூட்டி வைத்துக் கண்டு மகிழ்கையே அவனது தொழிலாகின்றது. அவர்களோடு வாதிடுவதே அவனது வழக்காகின்றது. ஆயர் மங்கையரது வாழ்க்கை எவ்வாறு நடைபெறுகிறது? அவனது கருநிறம் அவர்களது கண்ணைக் கவருகிறது. அவன் மாயோனல்லவா! மாயோன் என்பதற்குப் பரிமேலழகர் பரிபாடலில் 'கரிய நிறமுடையவன்' எனப் பொருள் கூறியுள்ளதைக் காணலாம். அவனது புன்முறுவல் கன்னியரின் நெஞ்சை அள்ளுகிறது. அவனது மழலைச் சொற்களும், விளையாடல்களும், அவர்கள் உயிரையே கொள்ளை கொள்கின்றன. அவனது கூட்டுறவு அவர்கள் ஆன்மாவை அலைக்கழிக்கிறது.

ஒருவரை ஒருவர் இமைப்பொழுதும் அகன்று இருக்கமாட்டார் கள். அவர்கள் கூட்டுறவால் அவன் அடைவது ஆனந்தம்; அவன் சேர்க்கையால் அவர்கள் அடைவது வீட்டின்பம். இவ்வாறு ஒருதலைக் காமமாக அமையாது, இருதலையும் ஒரே இன்ப வெள்ளமாக அமைகின்றது. இந்த இன்ப வெள்ளத்ததால் நாடும் வளமுற்றதாகிறது. இந்த வளத்தினால் ஆயரும் மாண்புற்று வாழ்கின்றனர். ஆயர் மகளிருக்கும், மாயோன் கண்ணனுக்கும் உள்ள இத்தொடர்பு எக்காலத்துக்கும் உண்டு. அந்த மங்கையர் தம் இன்னல்களைப் போக்குதற்கும் அவனே துணை எனக் கருதும் உறுதியுடையவர்கள்.

> மடம் தாழும் நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்
> கடந்தானை நூற்றுவர் பால் நாற்றிசையும் போற்றத்
> படர்ந்தாரண முழங்கப் பஞ்சவர்க்குத் தூது
> நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே
> நாராயணா! வென்னா நாவென்ன நாவே
> *(சிலப்பதிகாரம், மதுரைக்காண்டம். ஆய்ச்சியர் குரவை)*

என மதுரையில் இருந்த ஆய்ச்சியர் கூறிக் குரவைக் கூத்தாடி யதே இதற்குத் தக்க சான்றாக அமைகின்றது.

ஆயர் சேரியில் இவ்வாறு கன்னியர் கண்ணனோடு களித் திருத்தலை அச்சேரி முதியோர்களின் மனம் ஏற்கவில்லை. இச்செயலினால் குலத்திற்குத் தீங்கு விளையும் என அவர்கள் கருதினர். உய்த்துணரும் நுட்ப மதியற்ற சில ஆயர் கண்ணனின் இறைமையையும், கன்னியரின் தெய்வக் காதலையும், ஆன்மா, பரமான்மா, பாகுபாடுகளையும் அறிந்தாரில்லை. ஆதலால் இவர்கள் அன்புக் கயிற்றால் கட்டுண்டு கிடக்கும் ஆயர்மகளி ரையும், யசோதை மகனையும் தனித்தனியாகப் பிரித்து வைத் தனர். கன்னியர்கள் நிலவறைகளிலே அடைக்கப்பட்டனர். கண் ணனோ ஏரார்ந்த கண்ணி யசோதை அகத்திலே அகப்பட்டான். அப்பெண்மணிகளின் இன்பப் பெருக்கிற்கு இது ஒரு போக்கு

வீடாக அமைகின்றது. இஃதின்றேல் அம்மங்கையர் முடியினும் முடிவர் ; இதைத் தடுப்பதற்காகவே இறைவன் இச்சம்பவத்தை நிகழ்த்தினான் போலும். பெருகி வரும் வெள்ளத்திற்குப் போக்கிடம் இல்லாவிட்டால், நீர்க்கரை உடைந்து அழிவுபடுமே? கன்னியர் மனம் கலங்கியது. கணநேரமும் கண்ணனைப் பிரியாத கன்னியர் எவ்வாறு பல நாட்களாக அவனைப் பிரிந்திருப்பர். கண்ணுங் கண்ண நீருமாய்க் காலத்தினைக் கழித்தனர். அவர்தம் நெஞ்சமும் அழிந்தது, உடலும் உரங்குன்றி யது, உயிரும் ஒடுங்கியது. ஆகவே கன்னியர் ஆற்றொணாத ஆற்றாமைத் துன்பத்தினால் அலறிக் கொண்டிருந்தனர்.

களங்கமற்ற கன்னியர், இறைவன் பால் அன்பு மிக்கவர் கள், பண்பார்ந்த பாவையர், அத்தகையோரது மனத்திலே ஏற்பட்ட புண் நாட்டின் நலத்தைக் கெடுக்காமல் விடுமா? குலப்பெண் வயிறெரிந்தால், கொடிச் சீலையும் பற்றிஎரியாதோ? ஆயர் பாடியில் மாரி நின்றது ; பைங்கூழ்களும் வாடத் தொடங்கின ; பசுக்களும் இளைத்துப் போயின; பாலும் வறண்டு விட்டது ; உணவும் குறைந்து போயின ; மானிடரும் உரங் குன்றிப் போயினர். பஞ்சமோ எங்கும் தாண்டவமாடியது. வறுமை வளங்கொண்டுவிட்டது. என் செய்வார் பாவம். ஆயரது நிலையே ஆபத்தாகிவிட்டது. நாட்டின் வறுமைக்குக் காரணம் கன்னியரின் கலக்கமே என்பதைச் சில முதியவர்கள் உணர்ந் தனர். அக்கால வழக்கப்படி மழைவேண்டி, மங்கையர் நோன்பு இழைக்க வேண்டும் என்பதற்காக வெளியிடப்பட்டனர். அவர் களுக்கு வேண்டியவற்றை உதவுகின்ற கையாளாகக் கண்ண னையே நியமித்தனர். உலக முதல்வன் கன்னியர் கையாளாய் அமைந்தது வியப்பினும் வியப்பாக அமைகின்றதன்றோ?

இப்படிச் சேர்ந்த காலத்தே இரு திறத்தினருக்கும் ஏற்பட்ட களிப்பின் நிலையை யாரால் அளவிட இயலும்! பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ? தம்மைத் தெரியாமலே

இன்பப்பெருக்கில் இறங்கினர். மங்கையர் இவனைப் பிரிந்திருந்த துயர் நீங்கக் கண்ணா!, கண்ணா! எனப் பன்முறையும் அழைக்கின்றனர். வேலை கொடுப்பவர்களைப் போன்று நடிக் கின்றனர். கையை நீட்டிப்பணிக்கின்றனர். சிறிது புல்லைப் பிடுங்கி அவன் கையில் இட்டுத் தொலைவில் எறியச் சொல்லுகின்றனர். இந்நிலையில் அவன் கையழகு, முக அழகு, நடை அழகுகளைக்கண்டு, கண்டு களிக்கின்றனர். அவனும் அவர்களது ஏவுதலுக்குப் பணியாளன் போன்று பணிவிடை செய்கின்றான். அன்பரின் பேச்சும், நகையும், ஏவுதலும் அவன் உள்ளத்தில் உவகையை விளைவிக்கின்றன. புன்சிரிப்போடு தொழில்புரியும் கண்ணனுக்கு எந்நேரமும் ஓட்டமும் நடையும் தான். ஓய்வுக்கு வழியில்லை. மங்கையரோ பலர் கண்ணனோ ஒருவன்; இச்செயல்யாவும் கண்ணனுக்கு ஆனந்த லீலைகளாக அமைகின்றன.

அம்மங்கையர்தம் கண்ணனை இவ்வாறு கையாளாக ஆக்கிக் கொண்டதோடு நின்றார்களா? இவன் எப்போதாவது நம்மை ஏமாற்றிச் செல்வான் என்பதை இவர்கள் நன்கு அறிவர். ஏனெனில் இவன் மாயங்களில் வல்லவன். எனவே அடியவருக் காகப் பரிந்துரைக்க வல்லவளாகிய பெரியபிராட்டியையும், அருள்கூட்டிவைக்கும் ஆசாரியனையும் முன்னிட்டுக் கொண்டு கைங்கரியம் என்று சொல்லத்தக்க நோன்பை மேற்கொள் கின்றனர். ஆசாரியரது அருட்பணி இவர்தம் தலையிலே பெய்கிறது. பகவத் பாகவத குணங்களாகிய ஆறுகள் அவர்கள் முன்னே பெருக்கெடுத்தோடின. மழைக் காலத்து வெள்ள மெனப் பாயும் தன்மையுடைய இம்மகளிர் அதில் கூடி மூழ்கித் திளைத்தனர். அகங்கார மமகாரங்கள் அவர்களை விட்டு ஓடிச் சென்றன என்றும் இறைவன் ஒருவனுக்கே அடிமை என்ற கைங்கரியச் செல்வத்தைப் பெற்று மகிழ்ந்தனர். இம்முறையாக

நோன்பு நிறைவுறுகின்றது, மழை பொழிந்தது ; ஆயர் பாடியும் செழிக்கத் தொடங்கியது. ஏனைய ஆயரும் வறுமை நீங்கப் பெற்று மனமகிழ்ச்சி அடைந்தனர்.

இவ்வாறாக கண்ணன் தம்மை விட்டுச் சிறிது பிரியும் போதெல்லாம் ஆயர் மங்கையர் செயலாற்றிய மன்மதனை இறைஞ்சல், சிற்றில் இழைத்தல், ஆற்றில் குளித்து விட்டு ஆடைகளுக்காக, கண்ணனை வேண்டி நிற்றல், கூடலிழைத்துப் பார்த்தல், முதலியவற்றை அருள் அன்னை ஆண்டாள் நாச்சியார் பாவனையாக மேற்கொள்கிறார்.

இவ்வாறாக அவர் மேற்கொண்டாலும், ஆய்ச்சியரைக் காட்டிலும் ஆண்டாள் நாச்சியார் உயர்ந்தோராவார் என்பது எவ்வாறு? ஒரு செயலை உடலால் செய்வதைக் காட்டிலும், மனத்தினால் இயற்றுவது கடினம் என்பதை நோக்கத் தனித் தொரு ஆராய்ச்சியும் வேண்டுவதில்லை. உடலைப் பயன்படுத்தி பல அரிய காரியங்களையும் முடித்துவிட இயலும். மனத்தைப் பண்படுத்தி ஓர் எளிய காரியத்தையும் முற்றுப்பெறச் செய்தல் எவ்வளவு அருமையான காரியம் என்பதை அனைவரும் அறிய இயலும்.

மனத்தை ஓரிமைப்பொழுது கட்டுப்படுத்தி நிறுத்துவதும் கடினமான செயலாகும். அதிலும் சூடிக்கொடுத்த சுடர்க்கொடி யாரது மனோபாவச் செயலுக்குச் செல்வம், குணம், செயல் இவற்றில் பலதரப்பட்டவராகிய ஆயர் மகளிரைக் கூட்டுச் சேர்க் கிறார். அந்தண வகுப்பினரான அன்னையாருக்கும், இடைக் குல மகளிருக்கும் கூட்டுறவு எவ்வாறு உண்டாயிற்று? இக்கூட்டுறவு உடலளவானதன்றே மனத்தைப் பற்றுக் கோடாகக் கொண் டல்லவா இக்கூட்டுறவு நிகழ்ந்துள்ளது. இவர்களிடையே காலம், குலம், ஒழுக்கம். ஆகியவற்றில் வேறுபாடு உண்டானாலும்,

இவ்வேறுபாடு தோன்றவில்லையே இதற்குக் காரணமாக அமைவது இறை அன்பேயாகும். கண்ணனிடத்துக் கொண்ட பக்தி ஒன்றே இவ்வேறுபாடுகளையெல்லாம் ஒழித்து ஒன்றுபடச் செய்தது. அன்னையாரது நெஞ்சும், ஆயர் மகளிரது நெஞ்சமும் ஒன்றோடொன்று கலந்து, மிகப் பெரிய காரியத்தைச் செய்யத் தொடங்கின. ஒரு பலனையே விரும்பி நின்றன. இவ்வாறு மனத்தோடு மனம் கலத்தலின் மாண்பினை என்னென்று கூறுவது. "ஆய்ச்சியர் சிந்தையுள் குழகனார்வரில் கூடிடு கூடலே" என்ற சொற்றொடரால் ஆய்ச்சியரிடம் ஆண்டாள் கொண்டிருந்த மதிப்பின் உயர்வினை உணர்ந்து கொள்ள முடி கின்றது. இவர் இயற்றிய செயல் எளிமையானதும், இவ்வுல கத்தைப் பற்றியதும் அல்லவே? பரமபக்தர்களாலும் இயற்றற்கு இயலாத ஒரு செயலை அல்லவா இம்மகளிர் இயற்றுகின்றனர். அப்படிப்பட்ட அரிய செயலாயினும் இவரால் தொடங்கப் பெற்ற இச்செயல் இடையில் நின்றுவிடவில்லையே. இவரது மனோபாவனை செயலை முற்றுவித்து, கருதிய பயனையுமல் லவா கைக்கொள்ளச் செய்தது.

இறையோடு இரண்டறக் கலந்து இன்பந்துய்க்கச் செய்த இப்பாவனையின் அருமையை என்னென்பது. இப்பாவனையை இடமாகக் கொண்ட அந்த உள்ளத்தின் உயர்வைத் தான் என்னென்று கூறுவது! இந்த அன்னையாரைப் போல மனத்தைக் கட்டுப்படுத்தி ஒன்றிலேயே பதிய வைக்க யாரால் இயலும். சான்றோரும் அஞ்சுவது இந்த மனத்திற்காகவன்றோ! குரங்கும், தீயுமல்லவா மனத்திற்கு ஒப்பாகக் கூறப்படுகின்றன. இத்தகைய மனத்தைக் கண்ணிற் காணும் சிறு பொருளிடத்தும் சிறிது பொழுது நிறுத்துவது என்பதும் அருமையான செயல். அவ்வாறிருக்க, புலனுக்கும் புலப்படாத இறைவனிடத்தே இச்சிந்தனையை நிலைநிறுத்துதல் என்பது இயலுமா? இத்தகைய மனத்தை நிலைநிறுத்துதல் பெட்புடைமையா லன்றோ, திருப்பாவைச் செல்வியார் புண்ணிய சொரூபனான கண்ணனைப் போற்றினர்.

இம்முறையினால் உடலினால் செயல்புரிந்த ஆயர்மகளி ரைக் காட்டிலும், இவர் உயர்ந்தவராகிறார். இவர்தம் மனத்தின் மாண்பின் முன்னே ஆயர்மங்கையர் எங்கு நிற்க இயலும். அது மட்டுமின்றித் தம் பாவனையை வரி வடிவிலும் பொறிக்க வழிகோலிய இவர் செயலோடு அவர்கள் செயலை எம்முறையில் ஒப்பிட இயலும்.

இறைவனை அடைவதற்காக அஃறிணைப் பொருள்களிட மும் சரணடைந்து நிற்கும் நிலையை ஆயர் மகளிரிடம் காண இயலாது. சங்கத்தைக் கண்டு பொருமும் பொருமலை ஆயர் மகளிரிடம் காணமுடியுமா? அந்த மங்கையர் அனைவருடைய பக்தியும், இவர் ஒருங்கே அடையப் பெற்றவர். இத்தன்மையை நோக்கும்போது இவரே அவர்கட்கு தலைமைப் பொறுப்பேற்கத் தக்கவர் என்பதையும் அறிய முடிகின்றது. தம்மை விட பக்தியிலும், ஞானத்திலும் குறைந்தவர்களாயினும் அவர்க ளோடு கூட்டுறவு கொண்டு, இறைவனை அடைவதற்கு, அவர் களையே வழிகாட்டிகளாகக் கொள்வது இவையனைத்தும் அன்னையாரின் பெருந்தகைமையைக் காட்டுகிறது. இத்தகைய ஆயர்மகளிர் இன்றும் அனைத்து பாகவதர்களின் நெஞ்சில் அன் றாடமும் உறைவதற்குக் காரணம் அன்னையாரே ஆவார். இவ்வாறில்லாவிட்டால் அவர்களது செயல் என்றோ மறைந்திருக் கக் கூடும். வலியோரைச் சேர்ந்த மெலியாரும் மேன்மை பெறுவர் என்ற உலகியல் கருத்து இதனால் உண்மையாக்கப்படுகிறது. ஒளி பொருந்திய ஒரு ஒளி விளக்கு எவ்வாறு தன்னையும் விளக் கிக் கொண்டு மற்றப் பொருள்களையும் விளக்குகிறதோ அவ் வாறே ஞான ஒளி வாய்ந்தவராகிய கோதையாரும் தம்மையும் விளக்கம் செய்து, ஆயர் மகளிரையும் விளக்கமாக்குகிறார். இதனால் இவர் ஆயர் குலத்திற்கே விளக்காக அமைகின்றார். யசோதையின் குடலை விளக்கம் செய்தவன் கண்ணன். ஆயர் மகளிர்தம் உயிரை விளக்கம் செய்தவர் கோதையார். ஆயர்

மகளிரை மட்டுமின்றி, உலக உயிர்கள் யாவற்றையும் விளங்கச் செய்த விளக்கு இவர் என்றால் வரக்கூடிய குற்றம் யாதுமொன்று மில்லை. எனவே ஆயர் மகளிரையும், உலகத்தையும் ஒளிரச் செய்த வேயர் பயந்த ஒளி விளக்காகத் திகழ்கின்றார் கோதை நாச்சியார். இவ்வாறாக அன்னையார் தம் வாழ்வியல் வாயிலாக வும், அருளிச்செயல்கள் வழியாகவும் இவர் உலகுக்கே ஒளி விளக்காக ஒளிர்கின்ற அழகினை உணரமுடிகிறது.

## அவதாரம் அமைந்துள்ள அழகு

அவதாரம் என்பதற்குத் தாழ வருதல் என்பது பொருள் ஆகின்றது. உயர் நிலையிலுள்ள ஒருவர், பிறரது நலன் விரும்பி உலகில் தோன்றுவதையே அவதாரம் என்று உரைக்கிறோம். அருள் நிறைந்த மக்கள் பலர் உலகில் தோன்றி, உயிர்களை உயர்த்தினார்கள் என்பதைச் சரித்திரத்தின் வாயிலாக அறிந்து கொள்ள முடிகின்றது. இத்தகைய நிலையில் காக்கும் தொழிலை உரிமையாகக் கொண்டவராகிய திருமால் பன்முறை உலகில் பிறந்தார். அப்படிப் பிறந்த பிறவிகளுள் சிறப்பானதாக அமைவன. இராமனாகவும், கண்ணனாகவும் பிறந்தனவேயாகும். இந்த இரண்டிற்குள்ளும், இறைமைக் குணங்கள் முற்றும் பெற்று விளங்கியது கண்ணன் அவதாரமேயாகும். அவன் யசோதையால் கட்டப்படுகிறான், பெண்கள் ஏவிய காரியங்களைச் செய்து மகிழ்கின்றான், தூது நடக்கின்றான், தேரோட்டுகிறான். இவனது எளிமைக் குணத்தை என்னென்பது இதே அவதாரத்தில் வஞ்சகி பூதனை ஊட்டிய நஞ்சை உயிருடன் உண்டான். ஒரு பெண்ணின் கூனை நிமிர்த்துகிறான். மாண்ட மக்களை உயிர்ப்பிக்கச் செய் கின்றான். ததிபாண்டனது மட்பாத்திரத்திற்கும் வீடுபேற்றை அளிக்கிறான். இத்தகைய தெய்வத் தன்மையின் திறனை என் னென்று கூறுவது! கஞ்சனைத் துவம்சமாக்குகின்றான், பல அசு ரர்களை மாய்க்கின்றான். இந்த வீரத்தையும் வன்மையையும்

அளவிட்டு உரைக்க இயலுமா? மக்கள் ஞானச்செல்வத்தை யடைய வேண்டும் என்பதற்காக தத்துவங்களைப் போதிக் கிறான். இந்த அருளினை அளவிடத்தான் இயலுமா? இத்தகைய பெட்புகள் அனைத்திற்கும் உறைவிடமாக இலங்குபவன் இறைவன் கண்ணனே அல்லவா? இந்த அவதார மாண்பைப் பற்றிப் பலர் அறிந்தாரில்லை. மக்கள் போன்று பிறந்து இறக்கும் ஒருவனும் கடவுள் ஆவானோ? என்ற இழிவுப் பேச்சுகள் இன்ன மும் இருக்கத்தான் செய்கின்றன. இதற்குக் காரணம் பிறர் மதத்தை இழிவுபடுத்த வேண்டும் என்னும் எண்ணமா அல்லது ஆராய்ச்சிக் கண்ணோட்டத்தில் அமைந்த குறைவா என்பது தெரியவில்லை.

கர்மத்தாலேயே தோன்றி கர்மத்திலேயே கட்டுண்டு கிடக்கும் மக்களுக்கும், தன் இச்சையால் மட்டும் தோன்றி, அருளுக்காகவே கட்டுப்பட்டுச் செயலாற்றக் கூடிய இறை வனுக்கும் உள்ள வேறுபாட்டை அறியாதிருக்கும் நிலைக்கு என்ன பாவம் காரணமோ? நம்முடைய கட்டை நீக்குவதற்காக இறைவன் கட்டுப்படுகிறான். நமது பிறப்பை ஒழிப்பதற்காக அவன் பிறக்கிறான் என்ற அரிய உண்மையை அறிஞர் பெரு மக்கள் அறிவர். தன்னலத்திற்காகக் குற்றமிழைத்துச் சிறை செல்பவனுக்கும், பொதுநலத்திற்கு உழைத்துச் சிறை மேற் சென்றவருக்கும் வேறுபாடுண்டன்றோ? அத்தகைய வேறுபாட் டைத் தான் நாம் இங்கு ஒப்புநோக்க வேண்டியுள்ளது. இறை வன் கீழிறங்கி வந்து உழைக்கும் உழைப்பிற்கு இந்த உலகம் என்னதான் கைம்மாறு செய்ய இயலும்? திருமால் இந்த உலகில் தோன்றியதால் ஏற்பட்ட சீர்திருத்தங்கள் தான் எத்தனை! வழிகாட்டிய நீதிமுறைகள் தான் எவ்வளவு! அருட்டிறங்கள் எத்தனை! இத்தகைய சீர்மைகள் அனைத்தும் வாய்க்கப் பெற்றவராகிய கண்ணனின் அவதாரத்தை ஆண்டாள் அன்னை யார் பெரிதும் போற்றுகிறார். 'கொல்லை அரக்கியை மூக்கரிந் திட்ட குமரன்' என்று ஓரோர் இடத்தில் இவர் ஸ்ரீராமபிரானை

நினைத்தாலும் கூட, இவர் மனம் முற்றிலுமாக, எளியவர்க்கு எளியனாக, ஆச்ரித, பரதந்திரனாக நிற்கக் கூடியவனாகிய கண்ணனிடமே செல்கிறது. இவர் நோன்பு நோற்றதும் கண்ணனை நோக்கியே! இயற்கையில் காண்பனவும் கண்ணபிரானின் உடலழகும் உயிர்ச்சிறப்புமேயாகும். செல்ல நினைத்ததோ கண்ணபிரானிடமே, இவர் தேர்ந்தெடுத்துள்ள இந்த அவதாரத்தின் பெருமையை என்னென்றுரைப்பது.

"குறும்பு செய்வானோர் மகனைப் பெற்ற
நந்த கோபாலன் கடைத்தலைக்கே
நள்ளிருட்கண் என்னை உய்த்திடுமின்" [நா.தி. 12-3]

கோதையார் உலகில் தோன்றியது எதற்காக? பன்னிரண்டு ஆழ்வார்களுள் ஒருவராக ஏன் அமைந்தார்? எதன் காரணமாக அழியாப் பெருநூல்களாக இரண்டை இயற்றியுள்ளார்? இவையெல்லாம் தாம் நலம் பெறுவதன் பொருட்டா? இல்லை, இல்லை. பெண் மகளிர் பெட்புப்பெறல் வேண்டும் பெண்டிரை யாவரும் போற்றுதல் செய்ய வேண்டும். பெண் மக்களுக்கும் நுட்பமான அறிவு, தூய ஞானம், பரந்த பக்தியுணர்வு உண்டு என்பதை இந்த உலகம் உணர்ந்து கொள்ள வேண்டும் என்ற கருத்தின் அடிப்படையிலேயே இவரது தோற்றம் நிகழ்ந்தது. மாதர்களுக்கெல்லாம் அரசியாகத் திகழும் இவரது விருப்பம், மங்கையரின் மாண்புணரும் பெருந்தகைமை உடையவரிடம் அல்லவா செல்லும். அத்தகைய சீர்மை வாய்ந்தவன் கண்ணன் எம்பெருமான் ஆவான். ஆண்டாள் கண்ணனையே காதலித்தமைக்கு இதுவே முக்கியக் காரணமாக அமைகின்றது.

கண்ணனைத் துயிலெழுப்பச் செல்லுங் காலத்தும், அவனுடன் உறங்கும் நப்பின்னைப் பிராட்டிக்கே முதன்மை இடம் தருகிறார். கண்ணனிடம் தம்மைச் சேர்ப்பதற்கும் அவளையே இறைஞ்சுகிறார். இங்ஙனம் பெண்களின் பெருமையையே

பெரிதும் பாராட்டும் செல்வியார் பெண்களைத் தன் உயிர் நிலையாகக் கருதும் கண்ணனை விட்டு வேறு யாரை விரும்ப முடியும். அன்னையாரது காலத்திற்குப் பல்லாண்டுகட்கு முன்பே கண்ணன் தோன்றி மறைந்திருந்தாலும் அவனிடம் இவருக்குத்தான் எத்தனை நம்பிக்கை ஏற்படுகிறது. எவ்வளவு அன்பு! எவ்வளவு மதிப்பு செலுத்துகிறார். அவதாரத்தின் போது ஏற்பட்ட உடல் நம்மை விட்டு மறைந்தாலும் அந்தப் பொருளின் ஆன்மசக்தியும், தெய்வ அருளும் நம்மை விட்டு அகலாது. அவை எந்தக் காலத்தும் நம்மோடிருந்து துணைபுரியக் கூடியவை என்ற நுட்பத்தை அறிந்தே கண்ணன் எம்பெரு மானைப் பற்றினார் கவிதைக்கரசி கோதை நாச்சியார் என்ற கருத்தோடு அன்னையார் அவதாரத்தைக் காட்டும் அழகினை நாம் உணர முடிகின்றது.

## அர்ச்சாவதாரத்தைப் பேசும் அழகு

முற்கூறிய அவதாரம் சிறந்ததேயானாலும், அஃது இறைவன் உலகில் தோன்றிய காலம் எதுவோ, அக்காலத்திற்கும், அத்தேசத்தில் உள்ளவர்க்கும் மட்டுமின்றி மற்றவருக்குப் பயன் அளிப்பது கிடையாது அர்ச்சாவதாரமோ அத்தகையதன்று. அது எக்காலத்தவர்க்கும், எத்தேசத்தவர்க்கும் காட்சி அளிப்பது மட்டுமின்றி, அவரவர் விரும்பிய நலனையும் அளிக்கவல்லது. மனம், வாக்கு, காயம் இவற்றிற்கு எட்டாத பரம் பொருளான இறைவனுக்கு, ஓருருவத்தையும், ஓரிடத்தையும் நிலைநாட்டி வழிபடுதல் எவ்வாறு பொருந்தும்? என்ற ஐயமும் எழக்கூடும். சிலர் இந்த வழிபாட்டுக் கொள்கையை மறுக்கவும் கூடச் செய்யலாம். நமது மனமும் புலன்களும், செயல்களும் வரை யறைக் குட்பட்டன. ஆதலால் அவற்றிற்கேற்ப எல்லாவற்றையும் கலந்து நிற்கும் கடவுளை வகுத்துக் கொண்டால் மட்டுமே, நாம் அக்கடவுளிடத்து ஓடுவதுமான மனத்தை ஓரிடத்தில்

நிறுத்தித் தியானிக்க வேண்டுமானால் அதற்கு ஓர் உருவம் தேவைப்படுகிறது.

உருவம் இல்லையென்றால் மனம் ஒருமைப்படுவது இல்லை. நாம் காணாத ஒரு பொருளைத் தெரிந்து கொள்வதற்கு கண்ட ஒரு பொருளின் துணையையே நாடுகின்றோமல்லவா? அவ்வாறே காணாத கடவுளிடம் மனத்தைக் குவியச் செய்து, தியானத்தில் நுழைக்க உருவம் இன்றியமையாது வேண்டப்படு கிறது. இக்கருத்து தற்கால விஞ்ஞானிகளாலும் ஒப்புக் கொள் ளப்படுகிறது. இவர்களும் பல ஆராய்ச்சிகளுக்குப் பிறகு அண்மைக் காலத்தில்தான் மனத்தைக் கவருவதற்கு உருவம் வேண்டும் என்பதைத் தீர்மானித்துள்ளனர். ஆனால் நம் பண்டைக் காலத்தவரோ பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பே இம்முடிவை வரையறுத்துள்ளனர்.

மற்ற மதங்களைக் காட்டிலும் வைணவர்களுக்கு அர்ச்சா வதாரத்தில் ஊற்றம் அதிகம். அர்ச்சையே பூரணமானதென் பதும், ஈச்வர குணங்கள் யாவற்றையும் பெற்றுள்ளதென்பதும் இதுவே பத்தியிலும் சிறந்த பிரபத்தியைச் சேதனன் செய்தற்குப் பொருத்தமான இடம் என்பதும் இதில் செய்யும் பிரபத்தியே தவறாமல் விரைவில் பயனளிக்கும் என்பதும் வைணவர்களது உறுதியாகும். இதற்கு,

நிகரில் அமரர் முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங்கடத்தானே
புகலொன்றில்லா அடியேனுன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே – [திருவாய் 6-10-10]

வந்துன் திருவடி அடைந்தேன்
நைமிசாரணியத்துள் எந்தாய் – [பெரிய திரு. 1-6-1]

எனச் செப்பியுள்ள ஆழ்வார்களே சான்றாவார்கள். ஆண்டாள் நாச்சியார் பல திருப்பதிகளில் எழுந்தருளியிருக்கும் அர்ச்சாவதா ரங்களைக் காண விழைந்தார் என்றாலும், அவற்றுள் திருவேங் கடம், திருமாலிருஞ்சோலை, திருவரங்கம் ஆகிய மூன்று இடங்களிலும் உள்ள பெருமான்களிடமே அதிக அன்பு காட்டினார், இவற்றுள்ளும் இவரது உயர்பக்தி திருவரங் கனையே பற்றிற்று. அன்னையார் அர்ச்சாவதாரத்தை எவ்வாறு நோக்குகிறார்? கல், மண், உலோகங்களாகவா? வேறுவிதமா கவா? என்பது தான். இவரது எண்ணம் யாது? இவரது வேட்கை என்ன? எல்லாம் வல்லவனும், எங்கும் நிறைந்தவனும், அருளையே வடிவாகக் கொண்டவனும் சேதனனது உய்வையே உள்ளத்தில் இருத்தியவனுமான ஈச்வரனுக்குத் தொண்டு புரிதல் வேண்டும். அத்தொண்டும் அவனது முகமலர்த்திக்கே காரணமாயிருத்தல் வேண்டும். அதைக் கண்டு நாம் மகிழ வேண்டும். இதுவே நமது ஆன்மாவிற்கு உய்வைத் தருவதாகும். இதுவே உயர்ந்த தத்துவமும், பிறந்ததன் பயனுமாகும்.

அன்னையார் அவதாரங்களில் ஸ்ரீராமபிரான், வாமனன் முதலியவர்களைப் பொதுவாகவும், கண்ணனைச் சிறப்பாகவும் மனத்தில் வைத்திருந்தாலும், அர்ச்சாவதாரத்தில் அன்பு செலுத்துமிடம் வேறுபட்டதாகும்.

இதை அறிய வேண்டுமானால் அவரது செயல்களுக்குள் சிறிது உள் நுழைவோம். கண்ணன் தம் கைங்கரியத்தை ஏற்றுக் கொண்டால், கைக்கூலியாகப் பின்னும் பல தொண்டு கள் செய்வேன் என்று உறுதி கூறுகிறார். படியாய்க் கிடந்து பவளவாய்க் காண விரும்பிய குலசேகரரைப் போன்று, யாருடைய குணங்களைப் பாடி, உயிரைப் பாதுகாத்துக் கொள்ள விரும்புகிறார். யாரைத் தாம் வசிக்கும் அத்தெருவிலும் போகக்

காண இயலுமா என்கிறார். நீரின் ஆழத்தில் பாசி படர்ந்து கிடந்த தமக்கு உதவி செய்ததாக யாரைக் கூறுகின்றார்? இழந்த கைவளைகளை யாரிடம் திரும்பப் பெற விரும்புகிறார்? என்று பார்த்தால் மேற்கூறிய அந்த மூன்று திவ்ய தேசத்து எம்பெருமான்களிடத்திலேயே வேண்டுகிறார்.

இவ்வாறு அர்ச்சாவதாரத்திலேயே மனத்தைச் செலுத்தி அதனிடமே அளவில்லாப் பக்தி பூண்டு ஒழுகிய கோதை நாச்சியார் இறுதியில் அந்த அர்ச்சாவதாரமான அரங்கத் தெம் பெருமானி டத்திலேயே தம் உடலையும் செலுத்திப் பெறாப் பேற் றைப் பெற்று இன்புறுகின்றார். மற்ற நிலைகளைக்காட்டிலும் அர்ச்சாவதாரமே மேன்மை பெற்றது என்பதை மற்ற பெரியவர் களைக் காட்டிலும், கோதை நாச்சியாரே உச்சநிலையில் நின்று சான்றுரைக்கிறார்

வாத்சல்யம், ஸ்வாமித்வம், சௌலப்யம், சௌசீல்யம், சக்தி ஞானம் ஆகிய ஆறு குணங்களையும் கொண்டிலங்கும் அர்ச்சாவதாரமே உத்தாரகமானது. அவற்றினிடம் புரிகின்ற உயிர்த் தொண்டாகிய கைங்கர்யமே உயிரானது உத்தம மானது, உய்வளிக்கவல்லது என்று கோதை நாச்சியார் தமது நூல்கள் வாயிலாக அர்ச்சாவதாரத்தின் அழகைப் பேசுகின்றார்.

## அக அமைப்பழகு

ஒவ்வொரு பொருளிலும் அகம், புறம் என்று இரு பிரிவுகள் உண்டு

ஒருவருக்கும் புலனாகாதது அகம். யாவருக்கும் புலப்படு வது புறம். இன்னதன்மை உடையதெனப் பிறருக்கு வெளிப் படையாக எடுத்தியம்புவதற்கும், ஒரு கால் அநுபவித்த தானே மற்றொரு கால் இஃது இந்நிலை வாய்ந்தது என உய்த்துணர்

தற்கும் இயலாது அகத்திலே அடங்கிக் கிடப்பது 'அகம்' எனப் பட்டது. இப்பண்பு அன்பினிடமும் உண்டு.

"குடத்துள் விளக்கும் தடற்றுள் வாளும் போன்று மறைந்து ஒளிர்வது!" என அன்பின் இலக்கணத்தை அறிஞர் வரையறுத் துள்ளனர். 'ஒத்தவயதும், ஒத்தகல்வியும், ஒத்தஅறிவும், ஒத்த பண்பும் அமைந்த தலைவர் தலைவியரிடம் ஏற்படும்அன்பு, காதல் எனப்படும்'. யாவற்றிலும் ஒன்றுபட்ட இவ்விருவர் உள்ளத்தில் உதிக்கும் காதலே உண்மைக்காதல். இதற்கு என்றும் மறைவு இல்லை, அழிவு இல்லை, உயர்வுள்ளது, உத்தமமானது, உயிருள்ளது. இம்மை மறுமை, இவ்வுலகம், வீட்டுலகம் எங்கும் தொடர்ந்து செல்லக் கூடியது. இறையன்பைப் பெறுவதற்கு வழிகாட்டுவது உலகில் பிறந்த ஒவ்வொரு ஆன்மாவும் இதைப் பெறவே அல்லும், பகலும் முயலுகிறது. நீதி நூல்கள், புராணங்கள், சமய நூல்கள் யாவும் இதைக் கற்பிப்பதற்காக எழுந்தனவேயாகும். ஒவ்வோர் ஆன்மாவும் முயன்று முயன்று முடிவில் இதைப் பெற்றே தீரும் என்பது திண்ணம். இதுதான் ஆன்மாவின் ஆனந்த நிலை; இன்ப நிலை இந்த நிலையை எய்திய பின்பு துன்பம் இல்லை, குறைவு இல்லை. இதற்கு பூரண நிலை என்று பெயர். இத்தகைய பெருமை வாய்ந்து காதலுக்குத் தோற்றுமிடம் பிறர் கண்ணினால் காணற்கு இயலாத அகமே ஆகும். இதனாலேயே இவ்வன்பொழுக்கம் அகப்பொருள் எனவும் அகத்திணை எனவும் வழங்கப் பெறுகின்றது.

மற்றமொழி இலக்கிய இலக்கணங்களுக்கு அமையாத ஒரு சிறப்பாக இந்த அகப்பொருள் இலக்கணம் தமிழ்மொழிக்கு மட்டுமே உரியதாக உள்ளது. பழந்தமிழர் பழக்க ஒழுக்கங் களின் பேழையைத் திறக்கத் தகுந்த திறவுகோலாக இது அமை கிறது. தமிழ்நாட்டின் சீர்மையையும் ஒழுக்க முறைகளையும், பாகுபாடுகளையும் தெளிவாக உணர்த்தத்தக்க மனோதத்துவ

நூலாக அக இலக்கியம் விளங்குகிறது. நாடு உயர்நிலை அமை வதற்குரிய சிறந்த வழிகளுள் ஒன்று திருமணம். இந்தத் திருமணம் நேரிய வழியில் நடக்கப் பெறவில்லையென்றால், மணத்தினால் மணமக்கள் எய்தும் பலன் ஏதுமில்லை. தெய்வம் பேணல், விருந்து ஆதரித்தல், நன்மக்கள் தோற்றம் முதலிய செயல்கள் நடைபெற வேண்டுமானால் அதற்கு மனமொத்த மணந்தானே காரணமாய் அமைகின்றது. இத்துறையில் நம் அன்னைத் தமிழ்நாடு எத்தகைய நாகரிகத்தைப் பெற்றிருந்தது என்பதைக் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டுவது இந்த அகப்பொருள் நூலேயாகும்.

அன்பின் ஐந்திணைக் களவெனப் படுவது
அந்தணாளர் அருமறை மன்றல் எட்டனுள்
கந்தருவ வழக்கம் என்மனார் புலவர்

[இறையனாரகப்பொருள்]

என்பது ஆன்றோர் அகப்பொருள் நூலிற்கு வகுத்த இலக்கணம் ஆகும்.

கொடுப்பாரும் அடுப்பாரும் இன்றி ஒத்த குலமும் ஒத்த அறிவும் வாய்ந்த இருவர் அன்பினால் கட்டுப்பட்டுத் தம்முள் கலக்கின்றமையின் இக்காதல் மணம் கந்தருவ மணத்தோடு ஒப்பதாயிற்று. இது தெய்வக் காதல். இத்தெய்வக் காதலுக்குப் புறக்கண்களின் கூட்டுறவு அவசியமில்லை. அகக் கண்களின் கூட்டுறவே வேண்டுவது, ஏனெனில் இது உடலழகையோ அல்லது உடலமைப்பையோ பற்றி எழுவதன்று. உயிர்ப்பண்பை யும், உத்தமச் செயல்களையும் கொண்டு தோன்றுவதாகும். இக்காதல் உடையவர் தாம் என்றும் அவன் என்றும் வேற்றுமை இல்லாதவர்கள். ஒருவரைவிட்டு ஒருவர் பிரிந்திருந்தாலும் உடல் தான் பிரிந்துள்ளது. உயிர் ஒன்றை விட்டு ஒன்று பிரிதல் இல்லை. இவற்றின் கூட்டுறவு என்றும் நித்தியமானது.

உயிர்க்கு இறுதி ஏற்பட்டால் மட்டுமே இக்காதலுக்கும் இறுதி ஏற்படும். ஆனால் உயிர்க்கு இறுதி என்பது உலகில் ஏது?

ஆதலால்தான் சிற்றின்பம் போலத் தோன்றும் இந்த அகப்பொருள் நம் தமிழ்நாட்டு மக்களுக்கோ பேரின்பமாகத் தோன்றுகிறது. தமிழர் அணிந்தது பேரின்பப் பளிங்காக உள்ளது. சீவான்மாவைப் பரமான்மாவுடன் இணைத்து வைக்கும் கை கண்ட மருந்து இது. இதைப் பற்றிய இலக்கணங்களும் அளவற்றவை. புறப்பொருளாலும், அகப்பொருளாலும் அளவிட இயலாத ஆன்மா பரமான்மாக்களை ஒன்றுபடப் பிணிக்கும் நெறியை வரையறுத்த நம் தமிழ்மொழியின் பெருமையை என்ன என்பது இம்முறையைப் பின்பற்றியே வாழ்வில் வெற்றி பெற்ற நம் பெரியோரின் மாண்பை என்னவென்று கூறுவது. அவரது மனப்பக்குவத்தைத் தான் அளவிட முடியுமா? இதுவே தமிழ்நாட்டை அழகு செய்யும் அணிகளில் தலை சிறந்த அணியாகும். இவ்விடம் மாணிக்கவாசகர், திருமங்கை ஆழ்வார், நம்மாழ்வார் முதலிய சான்றோரின் மனப்பான்மை நினைக்கத் தரும்.

ஆண்டாள் நாச்சியாரும் இவ்வியல்பில் பண்பட்ட ஒருவரே யாவார். ஆனால் இவரை முற்கூறிய பெரியோர்களுக்கு ஒப்பானவர் என்று கருத இடமில்லை. இவர் அவர்கள் யாவரையும் விடச் சீரிய நிலையில் நிற்பவர். மற்றவர்களைப் போல இவர் அகப்பொருள் இலக்கணத்திற்கு ஓர் இலக்கியம் என்ற அளவோடு மட்டும் நின்றுவிடவில்லை. அந்த இலக்கியத்தில் ஆழ மூழ்கி அதன் தத்துவத்தைப் பளிங்கெனச் செயல்முறையிலும் காட்டியவர்.

இதன் பயனை இவர் கனவில் பெற்றது மட்டுமின்றி நனவிலும் அடையப் பெற்றார். தெய்வத் தன்மை வாய்ந்த அகப்பொருட்சுவையில் பண்பட்ட இவர் உடல்பக்திமயமாகவே மாறிப் பண்பட்டுவிட்டது. அவ்வாறில்லாவிட்டால் இவரை

உடலுடன் ஏற்றுக் கொள்ள எம்பெருமான் இசைவானா? ஒரு குழந்தையின் நோய் நீக்குவதற்காக எண்ணெயையும் பாலையும் ஒன்றாகக் குழைத்து உண்பிக்கும் தாயைப் போல, நம் அறியாமை நீங்குவதற்காகக் கோதை நாச்சியார் தமிழையும் அகப்பொருளையும் ஒன்றுபடக் கலந்து நமக்கு ஊட்டுகிறார். மக்கள் தூய்மையும், நேர்மையும், உயர்வும் அடைவதற்கு இது ஒரு கருவியாகும்.

தலைவர் தலைவியாரைப் பிரிந்து சென்றுவிட்டார். இளவேனிற் பருவம் வந்துவிட்டது. மலர்கள் மலர்ந்தன, மயில் கள் ஆடுகின்றன, குயில்கள் கூவுகின்றன. அவற்றைக் கண்டு கலங்குகிறார் தலைவியார். அக்காலம் கடந்து கார்ப்பருவம் வரு கின்றது. 'கார் காலத்தில் திரும்பி வருவேன்' எனச் செப்பிச் சென்ற தலைவர் வந்தாரில்லை. தலைவியாருக்கு ஆற்றாமை மிகுகின்றது. கார் காலத்து மலர்களும், மற்ற இயற்கைப் பொருள்களும் தலைவியாரைப் பெரிதும் வருத்துகின்றன. கார் மேகம் விரைவாகச் செல்கிறது. அதைத் தம் தலைவரிடம் தூது இலக்கணமாகும். இதை நம் பெட்புடைய கோதை நாச்சியார் அழகுபட அமைக்கிறார்.

தெய்வப்பாவையாரது நூல் அகப்பொருளாகும் மனோ தத்துவ சாத்திரத்தையும் கடந்து நிற்பதொன்று, மக்கள் மனத்திற்குப் புலனாகும் பொருள்களைப் பகரும் அக நூல்க ளோடு மனத்திற்கும் எட்டாத நுட்பப் பொருள்களை இயம்பும் நம் அன்னையாரின் நூலை வைத்துக் கொண்டு அதற்கு ஒப்புமை காண்பதென்பது இயலாத ஒன்றாகும். ஆனாலும் அகப் பொருள் நூல்கள் கேவலம் சிற்றின்பத்தைப் பற்றியவை என்றெண்ணும் பலர் மயக்கத்தைப் போக்கவே, ஆன்மாவிற்கும் பரமான்மாவிற்கும் தொடர்பினை உண்டாக்கும் நம் நாச்சியாரது

நூல்களிலும் இத்துறைகள் அமைந்துள்ளன. அதற்குச் சில சான்றுகளைக் காண்போம்.

(1) தலைவியர் தாம் விரும்பிய தலைவரை அடைதற் பொருட்டுத் தெய்வத்தைப் பராவி நிற்றல்.

"தையொரு திங்களுந் தரைவிளக்கித்
தண்மண்டலமிட்டு மாசிமுன்னாள்
ஐயநுண் மணற் கொண்டு தெருவணிந்து
ஆழகினுக் கலங்கரித்து அனங்க தேவா
உய்யவுமாங் கொலோ என்று சொல்லி
உன்னையும் உம்பியையுந் தொழுதேன்
வெய்யதோர் தழலுமிழ் சக்கரக்கை
வேங்கடவற் கென்னை விதிக்கிற்றியே" [நா.தி. 11]

"உரவிப் பெருங்கலித் துன்பங்கள்
போய்முதல் ஊரி இன்பம்
வரவிப்படி தன்னை வாழ்வித்த
வாணன் தென் மாறை அன்னாள்
புரவிப் புனை நெடுந்தேர் அண்ண
லே! நின் பொருட்டணங்கைப்
பரவிப்பரவி நின்றே வரம்
வேண்டுதல் பார்த்தருளே!" [தஞ்சை. 282]

2 பிற விலக்குவித்தல்

"மானிடவர்க் கென்று பேச்சுப்படில்
வாழகில்லேன் கண்டாய் மன்மதனே!" [நா.தி.1-5]

"பொருபால் மதியினைப் போல் மருப்பி
யானையில் பொன் னொடின்பம்
தருபால் மொழிவஞ்சி! சாரவந்

குறிப்பு: தஞ்சைவாணன் கோவை மேற்கோள், புலவர் செந்துரை முத்து தொகுத்த மீனாட்சி பதிப்பகம். புதுக்கோட்டை 1969, ஜனவரி பதிப்பு.

தார் தஞ்சை வாணன் வெற்பின்
ஒருபால் நொதுமவரென்ன
இருபால் மருங்கினும் கொண்டெறிந்
தால் ஒத்த தென் செவிக்கே" [தஞ்சை 223]

### கூடலிழைத்தல்

........"வாமனன்,

ஓட்டரா வந்தென் கைப்பற்றித் தன்னொடும்
கூட்டுமாகில் நீ கூடிடு கூடலே!" [நா.தி.4.2]

வரற்காலம் என்றெனப் பலகூடல் வளைந்துதிறம்
விரற்கால இன்று மெலியல்மின்னே! [தஞ்சை 404]

### கவின் அழிவு உரைத்தல்

"எத்திசையும் அமரர் பணிந்தேத்தும்
இருடீகேசன் வலி செய்ய
முத்தன்ன வெண் முறுவற் செய்ய வாயும்
முலையு மழகழிந்தேன் நான்
கொத்தலர் காவில் மணித்தடங் கண்படை
கொள்ளும் இளங்குயிலே!" [நா.தி.5.6]

"வாளினும் நீள்விழி வாள்நுத
லாய்! தஞ்சை வாணன்தெவ்வின்
நாளினும் நாளும் நலம் தொலைவேன்" [தஞ்சை 216]

"ஏரேற்ற கொங்கை இளங்கொடி
மாந்தளிர் ஏய்ந்த வண்ணம்
காரேற்ற கங்குலில் பீரலர்
போன்றது ; காவியுண்கண்
..... வாவியின் கண்
நீரேற்ற செங்கழுநீர்மலர் போன்றது" [தஞ்சை. 244]

### தன் துயர் தலைவற்கு உணர்த்தல் வேண்டல்

"பொங்கிய பாற்கடற் பள்ளிகொள்வானைப்
புணர்வதோ ராசையினால் என்
கொங்கை கிளர்ந்து குமைத்துக் குதுகலித்
தாவியை ஆகுலஞ் செய்யும்
அங்குயிலே! உனக்கென்ன மறைந்துறைவு?
ஆழியுஞ் சங்கும் ஒண்தண்டும்
தங்கிய கையவனைவரக் கூவில் நீ
சாலத் தருமம் பெறுதி" [நா.தி. 5-7]

".... வையை
நுரைப்பால் முகந்தன்ன நுண்துகி
லாய்! இந்த நோய் அவர்க்கின்று
உரைப்பார் உளரேல் உயிர்எய்த
லாம் நமக்கூர் திரைசூழ்
தரைப்பால் வளரும் புகழ் எய்த
லாம் அவர் தங்களுக்கே" [தஞ்சை 217]

### காமம் மிக்க கழிபடர் கிளவி

"பைங்கிளி வண்ணன் சிரீதரன் என்பதோர்
பாசத் தகப் பட்டிருந்தேன்
பொங்கொளி வண்டிரைக்கும் பொழில்வாழ்குயி
லே! குறிக்கொண்டிது நீகேள்
சங்கொடு சக்கரத்தான் வரக்கூவுதல்
பொன்வளை கொண்டு தருதல்
இங்குள்ள காவினில் வாழக் கருதில்
இரண்டத்தொன்றேல் திண்ணம் வேண்டும்" [நா.தி. 5.9]

"ஒண்டுவி நாராய்! நின்சேவலும் நீயுமாய்
வண்டுது பூங்கானல் வைகலும் சேறிரால்;
பெண்டுது வந்தேன் ; எனவுரைத்தெம் காதலரைக்
கண்டீர் கழறியக்கால் காதலர் கடிபவோ?

[இறையனாரகப் பொருள் 214]

**தனிப்படர் மிகுதி**

"அன்றுலகம் மளந்தானை உகந்தடி
மைக் கண்வன்வலி செய்யத்
தென்றலுந் திங்களும் ஊடறுத் தென்னை
நலியு முறைமை அறியேன்" [நா.தி. 5-10]

"பருவரலும் பைதலும் காணான்கொல் காமன்
ஒருவர்கண் நின்றொழுகு வான்" [திருக்குறள் 1207]

**கனவு நலிவு உரைத்தல்**

பூப்புனை கண்ணிப் புனிதனோடு என்றன்னைக்
காப்புநாண் கட்டக் கனாக் கண்டேன் தோழீ நான்! [நா.தி. 6-4]

"சினவாகை சூடிச் செருவென்ற
வாணன் தென் மாறையில்நம்
மனவாழ் வனையவர் வந்து நல்
லியாமம் மணந்ததெல்லாம்
நனவாம் எனவே மகிழ்ந்தே
விழித்தொன்றும் நாம் கண்டிலேன்
கனவாய் முடிந்தது பின்னை; என்
னே! என்ன கைதவனே!" [தஞ்சை 215]

"கனவினால் உண்டாகும் காமம் நனவினால்
நல்காரை நாடித் தரற்கு" [திருக்குறள் 1224]

**சங்கினை வாழ்த்தல்**

"செங்கமல நாண்மலர்மேல் தேனுகரும் அன்னம்போல்
செங்கண் கருமேனி வாசுதேவனுடைய
அங்கைத் தலமேறி அன்ன வசஞ் செய்யும்
சங்கரையா! உன் செல்வம் சால அழகியதே!' [நா.தி.7.7]

"தேனிறவார் கண்ணிச் செம்பியன்
மாறன் செழுங்குமரி
மானிற வெண்டிரை மால்கடல்
தோன்றினை ; மண்ணளந்த

நீனிற வண்ணனும் ஏந்தினன்
தம்முன் நிறம் புரைதீம்
பானிறவெண் சங்கம் ; யார் நின்னின்
மிக்க படிமையரே?" [இறையனார் 31].

## தென்றலுக் கிரங்கல்

"காமத்தீயுள் புகுந்து கதுவப்பட்டு இடைக்கங்குல்
ஏமத்தோர் தென்றலுக்கிங்கிலக்காய் நானிருப்பேனே!" [நா.தி.8.2]

"தைவரலசை வளி மெய் பாய்ந்துறு தரச்
செய்வுறு பாவையன்ன வென்
மெய் பிறிதாகுத லறியாதோரே" [குறுந்தொகை 195]

## தலைவி கூற்று

"மின்னாகத் தெழுகின்ற மேகங்காள்! வேங்கடத்துத்
தன்னாகத் திருமங்கை தங்கியசீர் மார்வர்க்கு
என்னாகத் திளங்கொங்கை விரும்பித் தாம் நாள்தோறும்
பொன்னாகம் புல்குதற்கென புரிவுடைமை செப்புமினே" (நா.தி. 8–4)

"பெரும் பெயலுண்மையின் இலையொலித் தாங்கென்
உரஞ் செத்து முளனே தோழியென்
நலம்புதி துண்ட புலம்பினானே" [குறுந்தொகை 133]

"இலங்குவளை நெகிழச் சாஅய்ப்
புலம் பணிந்...." [குறுந்தொகை 50]

"நள்ளென் யாமத் துயவுத் துணையாக
நம்மொடு பசலை நோன்று தம்மொடு
தானே சென்ற நலனும்
நல்கார்கொல்லோ நாம் நயந்திசினோரே!" [அகநானூறு 103]

"இருவிசேர் மருங்கிற் பூத்த முல்லை
வெருகு சிரித் தன்ன பசுவீமெனப் பிணிக்
குறுமுகை அவிழ்ந்த நறுமலர்ப் புறவின்
வண்டுசூழ் மாலையும் வாரார்
கண்டிசிற்றோழி பொருட் பிரிந்தோரே" [குறுந்தொகை 220]

## தலைவி இளவேனிற் பருவம் கண்டு புலம்பல்

"பாடும் குயில்காள்! ஈதென்ன பாடல் நல் வேங்கட
நாடர் நமக்கொரு வாழ்வு தந்தால் வந்து பாடுமின்
ஆடும் கருளக் கொடியுடையார் வந்தருள் செய்து
கூடுவராயிடில் கூவிநும் பாட்டுக்கள் கேட்டுமே" (நா.தி. 10.5)

"நங்கண் இரங்க அரும்பொருள் தேட நடந்த அன்பர்
செங்கண் இருங்குயில் ஆர்ப்பது கேட்கிலர்" (தஞ்சை 412)

## தலைமகள் கார்ப்பருவம் கண்டு புலம்பல்

"மழையே! மழையே! மண்புறம் பூசியுள்ளாய் நின்று
மெழுகூற்றினாற் போலூற்று நல்வேங்கடத்துள் நின்ற
அழகப்பிரானார் தம்மை என்னெஞ்சத்தகப்படத்
தழுவநின்று என்னைத் ததர்த்திக் கொண்டூற்றவும்
வல்லையே! [நா.தி 10.8]

"யாணர்க்குழல்மொழி! என்செய்கு
வேன்! கல்வி எல்லை எல்லாம்
காணப் பிரிந்தவர் காண்கிலரால்...
...என் வல் உயிரின்
ஊணற்பம் என்ன எண்ணா வரும்
மேகம் உருமுடனே" [தஞ்சை 409]

"கேளார் கொல்லோ தோழி! தோள்...
இலங்குவளை நெகிழ்த்த கலங்கு அஞர் எள்ளி
நகுவது போல மின்னி
ஆர்ப்பது போலுமிக் கார்ப் பெயற் குரலே" [நற்றிணை. 214]

"தண்ணந் துறைவன் தணந்தமை நம்மினும்
முன்ன முணர்ந்தாள் அனை" [திருக்குறள்]

"தம்மை யுகப்பாரைத் தாமுகப்பர் என்னுஞ்சொல்
தம்மிடையே பொய்யானால் சாதிப்பா ராரினியே? [நா.தி. 11.-10]

"பெரியோர் மொழி பிறழார் என்று
தேறுதல் பேதைமையே" (தஞ்சை வாணன் கோவை)

"நீருவார் மருங்கின் நீரணி திகழ
இன்னும் வாரால் ஆயின் நன்னுதல்
யாதுகொல் மற்றவர் நிலையே? காதலர்
கருவிக் காரிடி இரீஇய
பருவ மன்றவர் வருது மென்றதுவே"

**நாணிழந்து வருந்துதல்**

"நாணியினி யோர் கருமமில்லை
நாலய லாரும் அறிந்தொழிந்தார்
பாணியாது என்னை மருந்து செய்து
பண்டு பண்டாக்க உறுதிராகில்
மாணியுருவாய் உலகளந்த
மாயனைக் காணில் தலைமறியும்
ஆணையால் நீரென்னைக் காக்க வேண்டில்
ஆய்ப்பாடிக்கே என்னை உய்த்திடுமின்" [நா.தி. 12.2]

"உயிரினும் சிறந்தன்று நாணே; நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று" [இறையனார் 177]

"சேண் அகலாது உடன் என்னோடு நாடித்திரிந்து வந்த
நாணும் அழியத் தருகற்பு ரோ ணைகின்றதே" [இறையனார் 178]

**காமம் மிக வுரைத்தல்**

"குற்றமற்ற முலை தன்னைக் குமரன் கோலப் பணைத்
தோளோடு
அற்றகுற்ற மவைதீர அணைய வமுக்கிக் கட்டீரே"

[நா.தி.13.7]

"பின்னாக முன்வந்த பேதைதன் காமப் பெருங்கடற்கு நின்னாக
மன்றியுண்டோ புணையாவது நீந்துதற்கே"

[தஞ்சை 242]

இவ்வாறாக அன்னையாரின் அகப்பொருள் பாடல்களுக்கும் ஏனைய அக இலக்கியத் துறைகளுக்கும் இடையே தொடர்பு அமைந்துள்ளது.

## நாச்சியாரது தூதில் இயற்கையழகு

கண்ணன் எம்பெருமானை எங்கு காண்போம். அவனது இன்சொற்களை என்று கேட்போம் என ஆர்வங் கொண்டிருப் பவர் கோதை நாச்சியார். வானில் தோன்றும் நீலநிற மேகங்கள் அவருக்குப் புலனாகின்றன. அவற்றின் நிறத்தைக் கொண்ட திருமாலாகிய கண்ணன் அவற்றினூடே போதருவான் என்றும், இன்றேல் அவற்றின் வாயிலாகத் தமக்குச் சில செய்திகள் அனுப்பியிருப்பான் என்றும் உறுதியாக நினைந்து அம்மேகங் களை நோக்கி வினா எழுப்புகின்றார்.

"விண்ணீல மேலாப்பு விரித்தாற் போல் மேகங்காள்!
தெண்ணீர்பாய் வேங்கடத்தென் திருமாலும் போந்தானே?"[1]

மாமுத்த நிதிசொரியும் மாமுகில்காள்! வேங்கடத்துச்
சாமத்தின் நிறங்கொண்ட தாளாளன் வார்த்தை என்னே[2]

## தூதுவர் யார்?

ஒருவர் கருத்தை மற்றொருவருக்கு அவர்கள் ஏற்றுக் கொள்ளும் வகையில் நயமாக உரைப்பவருக்கே தூதுவர் எனப் பெயர். இவர்களுக்குரிய குணங்கள் கல்வி, அறிவு, ஆராய்ச்சி,

1. ஆண்டாள், நாச்சியார் திருமொழி (8-1)
2. மேலது (8-2)

உயர்குடிப் பிறப்பு, சொல்வன்மை, மனத்திட்பம், கம்பீரத் தோற்றம், அஞ்சாமை என்பனவாகும். இத்தகையோரே தூது செல்வதற்குப் பொருத்த முடையவர். தூதுவரின் பெருமையோ மிக உயர்ந்தது. பழம்பெரும் இதிகாசங்களான இராமாயணத்தில் அனுமானும், மகாபாரதத்தில் கண்ணபிரானும் தூதுவராக அமைவதை நோக்கும்போது தூதுவரின் பெருமை புலனாகின்றது.

இவரைப் போன்றே நம்முடைய கோதையாருக்குத் தூதுவராய் அமைபவர்கள்யாவர்? எனில் கோதையாரின் உடல் திருமாலின் பிரிவைத் தாங்காது இளைத்துவிட்டது.

'கழல் வளையைத் தாமும் கழல் வளையே யாக்கினரே'[3]

என்றாற் போன்று, கைவளைகள் தாமாகவே கழன்றொழிந்தன. இவரது பெண்மைக் குணங்கள் குறைந்து ஆற்றாமை மீதூர்கின்றன. இவ்வாற்றாமையை உலகம் அறிய அரற்றுகிறார். இந்நிலையில் ஆற்றாமையை உள்ளவாறே இறைவனிடம் உணர்த்துவதற்கு இயற்கையைக் காட்டிலும் இயைந்த பொருள் வேறொன்றும் இல்லை என்ற உறுதிப்பாட்டைக் கொண்டவர் கோதை நாச்சியார். தமக்குத் தூது செல்வதற்குப் பொருத்த முடையன இவையே என்று தீர்மானிக்கிறார்.

"உலங்குண்ட விளங்கனிபோல் உள்மெலியப் புகுந்தென்னை
நலங்கொண்ட நாரணற்கென் நடலைநோய் செப்புமினே"[4]

3. மேலது (11-2)

4. மேலது (8-6)

"கடலே கடலே யுன்னைக் கடைந்து கலக்குறுத்து
உடலுள் புகுந்து நின்றூறல் அறுத்தவர்க்கு என்னையும்
உடலுள் புகுந்து நின்றூற லறுக்கின்ற மாயற்கு என்
நடலைகள் எல்லாம் நாரணற்கே சென்றுரைத்தியே"[5]

## இயற்கையில் இறைமையைக் காணும் அழகு

மயிலின் ஆட்டத்தில் மாயவனின் மாயக்கோலத்தைக் காணுகின்றார்.

"கணமா மயில்காள் !கண்ணபிரான் திருக்கோலம் போன்று
அணிமா நடம் பயின்றாடுகின்றீர்"[6]

இவ்வின்பத்தை ஊன்றித் துய்க்கும் அன்னையாரின் இயல்பு இம்மட்டோடு நிற்க இடந்தரவில்லை. அது மலர்கள், பறவைகள், கடல் முதலிய இயற்கைப் பொருள்களின் உள்ளுறைப் பொருளினிடத்துச் செல்லுகிறது. உள்ளுறைப் பொருள் யாது எனில்? கண்ணன் எம்பெருமானேயன்றோ? கண்ணனின் முறுவலையும், இன்பச் சிரிப்பையும் முல்லைக் கொடிகளிடத்துக் காண்கிறார்.

"போர்க்களிறு பொரும்மாலிருஞ் சோலையம் பூம்புறவில்
தூர்க்கொடி முல்லைகளும் தவளநகை காட்டுகின்ற
கார்க்கொள் படாக்கள் நின்று கழறிச் சிரிக்கத் தரியேன்"[7]

5. நாச்சியார் திருமொழி (10-9)
6. மேலது (10-6)
7. மேலது (9-2)

**குறி கூறுவதைக் கூறும் அழகு**

கரிக்குருவிகள் கோதையாருக்குக் குறி பகர்கின்றன. எம்பெருமான் வரவைச் சொல்லிக் கொண்டு 'மருள்' என்னும் பண்ணைப் பாடுகின்றன. இதனைச் செவியுற்ற கோதையார், இந்நற்சுகத்தின் பயனை நான் அடைவேனோ? இது உண்மை யாக முடியுமா? இக்குருவிகளின் வார்த்தைகள் பொய்க்காமல் பலிக்க வேண்டுமே!" என்று ஆற்றாமை தோன்றப்பாடுகின்றார்.

"காலை எழுந்திருந்து கரிய குருவிக் கணங்கள்
மாலின் வரவு சொல்லி மருள்பாடுதல் மெய்ம்மை கொலோ!"[8]

**மலர் வண்டு இவற்றைச் சரண் ஈயக் கேட்கும் அழகு**

மலர்களும், வண்டுகளும் தம்முள் இறைமைத்தன்மையை உள் அடக்கிக் கொண்டு புறத்தே எம்பெருமானின் நிறத்தைக் காட்டி மிளிர்கின்றன. அன்னையாரின் ஆற்றாமை மிகுந்து இவற்றை உற்று நோக்குகிறார். நீங்கள் இழைத்த தவத்தையும் யானிழைக்க வில்லையே! உங்களுடைய அழகு, நிறம், செழுமை, ஒளி, இவையாவும் எம்பெருமானின் ஒளியைப் பெற்றுத் திகழ்கின்றனவே. நீங்களல்லவா புண்ணியம் செய்தவர்கள். அவன் உருவத்தையும், நிறத்தையும் பெற்றுத் துலங்கும் நீங்கள் எனக்கு உய்யும் வகையைச் சொல்வீர்களா! நான் உங்களை அடைக் கலமாகப் புகுகின்றேன். எனக்கு ஒரு சரண் சாற்றுங்கள் என்கிறார்.

"துங்க மலர்ப் பொழில் சூழ்
திருமாலிருஞ் சோலை நின்ற
செங்கண் கருமுகிலின்
திருவுருப் போல் மலர்மேல்

8. மேலது (9-8)

தொங்கிய வண்டினங்காள்!
தொகு பூஞ்சுனைகாள்! சுனையில்
தங்கு செந்தாமரைகாள்!
எனக்கோர் சரண் சாற்றுமினே"[9]

**கோடல் மலரிலும் கொவ்வைக் கனியிலும் காணும் அழகு**

மழைக் காலத்தில் திருமாலின் திருமேனி நிறத்தைப் போன்ற கோடல் மலர்கள் மலர்ந்தும், அவன் திருவதரத்தைப் போன்ற கொவ்வைக் கனிகள் கனிந்தும் காணப்படுகின்றன. இவை எம்பெருமானை நினைப்பூட்டிக் கோதையாரை வருத்து கின்றன. அன்னையார் அலமருகின்றார். அவனோடு கலந்திருக் கும்போது இன்பமூட்டிய பொருட்களே பிரிந்திருக்கும் சமயத்தில் அளவிலாத துன்பத்தை ஊட்டுகின்றன.

அவை தமக்குப் பகைகள் எனக் கருதுகின்றார் நாச்சியார். அதுமட்டுமல்ல, எம்பெருமானே அவற்றைப் போர்க் கோலஞ் செய்து தம்மேல் விடுத்துள்ளான் என்று உறுதிகொண்டு உரைக்கிறார்.

"கார்க்கோடற் பூக்காள்! கார்க்கடல் வண்ணன்
என்மேல் உம்மைப்
போர்க் கோலஞ் செய்து
போராவிடுத்தவன் எங்குற்றான்?"[10]

9. மேலது (9-5)
10: மேலது (10-5)

"கோவை மணாட்டி நீ உன் கொழுங்கனி
கொண் டெம்மை
ஆவி தொலையேல்
வாயழகர் தம்மை அஞ்சுதும்"[11]

என்று இயற்கையில் இறைமையைத் தாம் கண்டு ஆற்றாமை வெளிப்படுத்தியதோடு மட்டுமல்லாமல், தமது நடை அழகின் மூலம் நாட்டிற்கும் உணர்த்துகிறார்.

## வீரம் வெளிப்படும் அழகு

திருமாலின் வீரத்தைத் திருப்பாவையில் பாடு பொருளாக் கிய கோதை நாச்சியார், தம் திருமொழிப் பாசுரங்களில், வீரச் செயல்கள் பலவற்றை ஒன்றாக அடுக்கி உரைக்கின்றார்.

"அன்றின்னாதன செய் சிசுபாலனும்
நின்ற நீள் மருதும் எருதும் புள்ளும்
வென்றி வேல் விறல் கஞ்சனும் வீழமுன்
கொன்றவன் வரில் கூடிடு கூடலே!"[12]

புள்ளின் வாய் கீண்டானை என்ற வீரம் திருமொழியில் எவ்வாறு தோற்றுகிறது?

"கரியலற மருப்பினை ஒசித்துப் புள்வாய்பிளந்து
மணிவண்ணற்குஎன்னை வகுத்திடு"[13]

என்று அமைகின்றது.

11. மேலது (10-3)
12. மேலது (4-7)
13.. மேலது (1-10)

கண்ணனின் வீரத்தைக் கண்ணுற்ற கோதையாருக்கு யாவும் வீரத் தோன்றலாகவே விளங்குகின்றன. கண்ணன் கைத்தலச் சங்கும் வீரம் செறிந்தது. கொடிய அசுரர் அஞ்சி நடுங்குமாறு ஒலிக்கும் தன்மை வாய்ந்தது என்கிறார்.

"திடரில் குடிஏறித் தீய அசுரர்
நடலைப் படமுழங்கும் தோற்றத்தாய் நற்சங்கே!"[14]

**உவமை நலன்**

புலமைச் செல்வியாரின் பாசுரங்களில் ஆங்காங்கே உவமையணிகள் மிளிர்கின்றன. இவை இயற்கையிலிருந்தே தோன்றினாலும், ஒவ்வொன்றும் ஒவ்வொரு தனி உருவத்தைப் பெற்றவையாகவேத் திகழ்கின்றன. சில இறைவனது உருவத்தை யும், வீரத்தையும் விளக்குவனவாகவும், சில தமக்கும் இறைவ னுக்கும் உள்ள தொடர்பைச் சுட்டுவனவாகவும் அமைகின்றன.

"தடவரையின் மீதே சரற்கால சந்திரன்
இடையுவாவில் வந்தெழுந்தாலே போல் நீயும்
வடமதுரையார் மன்னன் வாசுதேவன் கையில்
குடியேறி வீற்றிருந்தாய் கோலப்பெருஞ் சங்கே!"[15]
"நீர்காலத தெருக்கினம் பழவிலைபோல் வீழ்வேனை
வார்காலத் தொருநாள்தம் வாசகம் தந்தருளாரே"[16]
"பீதக ஆடை யுடை தாழப்
பெருங்கார் மேகக் கன்றேபோல்
வீதியார வருவானை
விருந்தாவனத்தே கண்டோமே"[17]

14. நா. தி (7-2)
15. மேலது (7-3)
16. மேலது (8-8)
17. மேலது (14-5)

## திருமொழியின் தமிழ் அழகு

தமிழ் என்பதற்கு இனிமை என்று பொருள். தமிழ்மொழியே ஆயுந்தோறும் இனிமை பயக்கும் என்பது ஆன்றோர் வாக்கு. தமிழின் ஒலியும் ஆயுந்தோறும் இனிமை, சொல்லும் இனிமை, பொருளும் இனி மை, செயல் இனிமை மிகுந்தவையாகும். மானுட இனத்திற்குக் கடுமை கொள்வது என்பது எவ்வாறு செயற்கையானதோ, அவ்வாறே தமிழில் கடின சொற்கள் அமைவதும் செயற்கையே. தெய்வருள் பெற்ற பொருட்கள்யாவும் இனிமை வாய்ந்தவையே. இயற்கைப் பொருட்கள் மிகவும் இனிமை தருபவை. அவ்வினிய இயற்கைப் பொருட்களைத் தனக்கு உடலாகக் கொண்ட இறை வனின் இனிமையைப் பற்றிக் கூறவும் வேண்டுமா? இத்தகைய இனிமை வாய்ந்த இறைவனை வழுத்த இனிமை மிக்க மொழிதானே பயன்பட முடியும்? அத்தகைய மொழி தமிழைத் தவிர வேறு எதுவாக இருக்கமுடியும்? எனவே தான் ஆழ்வார் களும், நாயன்மார் களும், இறைவனின் இனிமையைப் பாட இன்தமிழையே இனியதாகக் கருதினர். அவர்களுள் கோதை நாச்சியாரும் ஒருவராகின்றார். ஆனால் ஆழ்வார்கள் பன்னிரு வருள்ளும் அன்னையாரை உயர்ந்தவராகக் கருதக் காரணம் என்ன? எனில் ஆழ்வார்கள் தம் பாசுரங்களைத் தமிழில் பாடியுள்ளதாகக் கருதினர். ஆனால் ஆண்டாளோ இவர்களைப் போலன்றி தமிழே தம் பாசுரங்கள் எனச் செப்பினார். தமிழும் தம் பாசுரங்களும் வேறல்ல என்பது இவர் கருத்தாகும்.

> "கோதை வாய்த் தமிழ் வல்லவர்"[18]
> "கோதை சொல் தூய தமிழ் மாலை"[19]
> "கோதை தமிழ் ஈரைந்தும்"[20]

என்ற இத்தொடர்களே தக்க சான்றாக அமைகின்றன.

18. நா.தி (2-10)
19. மேலது (6-11)
20. மேலது (7-10)

தமிழ் அன்னைக்கு மணிமேகலையும், சிலப்பதிகாரமும் முறையே மேகலையாகவும், காற்சிலம்பாகவும் அமைகின்றன என்பது வழக்கு. ஆனால் நம் திருப்பாவைச் செல்வியாரின் பிரபந்தங்களோ, இவ்வாறு ஒப்புமைப்படுத்தும் வகையில் இல்லை. இவரது சொற்கள் தமிழன்னை வேறு, இவரது நூல்கள் வேறு என்று பிரிக்க இயலாநிலையில் உள்ளன.

இவரது நூலில் அமைந்துள்ள அகப்பொருள் கருத்துக்கள் தமிழ்த் தாய்க்கு உயிர்க்குயிராக விளங்குகின்றன. கோதையார் இயற்கைத் தடாகத்தில் படிந்து குடைந்து, எத்தனை வண்ண ஆடைகளைத் தமிழன்னைக்கு அலங்கரிக்கின்றார். வீரம், சான்றாண்மை, சீர்திருத்தம், காதல் என எத்தனை அணிகளை அன்னைக்கு அணிவிக்கிறார்.

இவற்றை அணிந்து கொண்ட தமிழன்னை ஆண்டாளது நூலின் அழகினை வியந்து மகிழும் மகிழ்ச்சிக்கு எல்லை தான் உண்டோ? இவ்வாறு நம் அன்னையார் ஒழுகிக் கொண்டதற்கும் ஒரு காரணம் வேண்டுமே? அது என்ன? தமிழ்த்தாய் இவர் மருங்கிலே அன்றோ வளர்கிறாள். இதற்குச் சான்றாக,

> "ஏன மருப்பிலே பயின்ற பாவை
> மருங்கிலே வளருகின்றாள்"[21]

என்ற தொடர் அமைகின்றது.

தமிழ் இயல், இசை, நாடகம் என முத்திறப்படும். இம் மூன்றும் சேர்ந்த போதே தமிழ் முற்றுப் பெறுகிறது. கோதை நாச்சியாரது நூலில் இவை மூன்றும் விரவி அமைவதைக் காணலாம்.

21. பெரியாழ்வார், பெண் கொடி, பா. 155

கோதை நாச்சியாரது பாக்களின் அமைப்பு, உணர்வு, அழகு, சீர்மை வாய்ந்தன என்பதால் இவரது நூல்கள் இயற்றமி ழுக்கு இருப்பிடமாக இருக்கின்றன.

இவரது நூல்களுள் நாடக அமைப்புகள் முற்றும் அமைந்துள்ளன. நாடகத்திற்குரிய ஒன்பான் சுவைகளும் இவற்றுள் பொதிந்துள்ளன.

எம்பெருமானைக் காளியன் உச்சியாகிய நாடக மேடையில் ஏற்றி நடிக்கச் செய்கிறார். அவனுக்கு கூத்தனென்றெ பெயரிடு கிறார். மயில்கள் கண்ணனின் கோலத்தைக் கொண்டு தம் முன் நடிப்பதை இவர் கண்டு களிக்கிறார்.

இதனால் அன்னையாருக்கு நாடகத்தில் இருக்கும் சுவை யையும், தம் நூலில் இவர் நாடகத்தைப் பொருத்தும் பாங்கினை யும், அதனைப் பண்படுத்தும் நேர்மையினையும் நோக்கி இன்புற முடிகின்றது.

"குதி கொண்டரவில் நடித்தாய்!"[22]
"வாய்த்த காளியன்மேல் நடமாடிய கூத்தர்"[23]
கண மாமயில்காள் கண்ணபிரான் திருக்கோலம் போன்று
அணி மாநடம் பயின்றாடுகின்றீர்க்கு"[24]

உலகமே இசையால் ஆனது. காற்றுக்கு இசை உண்டு, கடலுக்கு இசை உண்டு, மழைக்கு இசை உண்டு, ஏன் மரத்திற் குக் கூட இசை உண்டு. இசை இல்லாத இடம் தான் உண்டோ?

22. நாச்சியார் திருமொழி, (3-2)
23. மேலது (4-4)
24. நாச்சியார் திருமொழி (10-6)

எங்கும் நிறைந்த இறைவனும் இசைக்குக் கட்டுப்பட்டவனல் லவா? நம்பாடுவான் இனிமையாள பண்ணிசைத்துப் பேறு பெற்றமை வைணவ உலகமனைத்தும் அறிந்ததே. எனவே நாச்சியார் தாமும் இறைவனது இன்னருளைப் பெறத் தம் நூல் களை இன்னிசையோடுங் கலந்து பாடியருளுகிறார். இந்த இசையும் அன்னையாருக்கு இறைவன் அருள் அவரைச் சார்ந்த போதும், எம்பெருமான் அவரைக் கூடிய போதும் மட்டுமே இனிமை பயக்கின்றன. இவரே தம்முடைய பாசுரங்களை இசைத் தமிழெனவும், இசையோடு கலந்தே அவற்றைத் தாம் இயம்பி யுள்ளதாகவும், சான்றமைக்கிறார்.

"இன்னிசையால் சொன்னமாலை ஈரைந்தும்"[25]

"இன்னிசையால் சொன்ன செஞ்சொல் மாலை"[26]

மேற்கூறியவற்றை நோக்கும் போது, சூடிக்கொடுத்த சுடர்க்கொடியார் நூல்களில் முத்தமிழும் விரவியிருப்பதை அறிந்து கொள்ள முடியும். தற்காலத்து சிலப்பதிகாரம் மட்டுமே. முத்தமிழ்க் காப்பியமாகவும், தமிழ்ச் சங்கம் நிலவியதைக் காட்டும் கண்ணாடியாகவும் இலங்குகிறது. அதைப் போன்றே அன்னையாரும், தம் நூலில் முத்தமிழையும் பொருத்தி, இறுதியில் "சங்கத்தமிழ் மாலை முப்பதும்" எனச் செப்புகின்றார்.

மேலும் இவர் வணங்கிய தெய்வங்களை நோக்குமிடத்து,

25. மேலது (3-10)

26. மேலது (12-10)

முதன்முதலில் தமிழின் எல்லை நிலமான வேங்கடம், அவ்வேங் கடவாணனுக்குத் தூது விடுக்கிறார்.

பின்னர் தமிழ் வளர்த்த மாமாடக் கூடல் அமைந்த பாண்டி வளநாடு, அங்கு திருமால் இருஞ்சோலை. அந்த அழகருக்கு வெண்ணெயும் அக்கார அடிசிலும் ஊட்டுகிறார். இறுதியில் "சோழநாடு சோறுடைத்து" என்ற சிறப்புப் பெற்ற காவிரி வளநாடு, செங்கோலுடைய திருவரங்கச்செல்வனார். அச்செல்வ அரங்கனின் செம்மைத் திருவடிகளில் இரண்டறக் கலந்துவிடுகிறார். இவ்வாறாக, அன்னையாரது பிரபந்தங்கள் மற்றும் வாழ்வியல் நடை இவற்றால், தமிழையும், தமிழ் நாட்டையும், தமிழ்த் தெய்வத்தையும் போற்றிய போக்கினை உணர முடிகின்றது. எனவே நாச்சியாரது அழகு நடை என்ற பொன் மாலையில் தமிழ் என்ற மணி பதிக்கப்படுகிறது.

## பிரிவுத்துயரிலும் வரம்பு கடவா அழகு

நாச்சியார் எம்பெருமானின் பிரிவை நினைத்துத் துன்புறுங் காலத்தில் கூட தாய், தோழி இவர்களிடத்து உரைக்கும் சொற்களில் நாகரிகமாகவே நடந்து கொள்கிறார்.

ஒரு தீய சொல்கூட இவரது அமுதத் திருவாயினின்று வெளி வந்திலது. ஆழ்ந்த ஆற்றாமை, கவலை இவைகூட வரம்பு கடந்த செயல்களில் ஈடுபடுத்தவில்லை. மறந்தும் கொடிய சொற் களைக் கூறுவது என்பது ஒழுக்கமுடையாரிடம் அமைந்த செயலன்று.

"எழிலுடைய அம்மனையீர்! என்னரங்கத் தின்னமுதர்"[27]

என்று இந்த இடத்து, அன்னையாரின் நடை அழகில் நாவை நற்சொற்களுக்குப் பழக்கி வைத்தல் என்று சான்றோர் இயல்பாகிய சால்பு வெளிப்படுகிறது.

**கனவு நிலையைக் கவிதைக் கண்ணாடியில் காட்டும் அழகு**

மக்களின் அன்றாட வாழ்க்கை நிலை ஒவ்வொரு நாளும் மூன்று வகையாக அமைகின்றன. ஒன்று ஆதவனின் வெளிச்சத் திலே அனைத்துயிரும் உடலும் உழன்றுவிடுமாறு உழைக் கும் நிலை. மற்றொன்று இரவுக்காலத்தில், துயிலும் நேரத்தில் ஐம்பொறிகளின் செயல்பாடோய்ந்து, மனமாகிய தத்துவம் மட்டும் செயல்படும், பாதித்துயிலும், பாதி விழிப்புமான நிலை, பிறிதொன்று, உணர்வோடு மனமும் அடங்கித் தன்னைத் தான் அறியாது உறங்கும் நிலை. இந்த இடைப்பட்ட நிலையில் மட்டுமே கனவுகள் தோன்றுகின்றன. 'நனவுலகைப் போன்றே கனவுலகிலும் அவரவர்கள் புண்ணிய பாவத்திற்கேற்ப நற்கன வும் தீக்கனவும்' தோன்றுகின்றன என்பது ஸ்ரீபாஷ்யகாரர் கருத்து. அன்னையார் தம் தந்தையார் பெரியாழ்வாரும், ஆண் டாளின் அவதாரச் சிறப்பையும், பிற்காலப் போக்கையும், எம் பெருமானே அவரது கனவில் வந்துரைக்க அறிகின்றார். ஆனால் ஆண்டாள் நாச்சியாரோ, என்றும் தன் உள்ளத்தில் உறையும் திருமால், மானிட உருவந் தாங்கி வந்து, தம்மை மணம் புரிவதாகக் கனவு கண்டு களிக்கிறார். இக்கருத்தை

27. நாச்சியார் திருமொழி (11-2)

"துஞ்சுங்கால் தோள்மேலராகி விழிக்குங்கால்
நெஞ்சத்த ராவர் விரைந்து"[28]

எனத் திருக்குறள் தெளிவாக்குகிறது.

அன்னையாரது கனவில் தான் எத்தனை மங்கலப் பொருட்கள், விதவிதமான அலங்காரங்கள், முழங்கும் வாத்திய ஒலிகள் இவை மட்டுமா உயரிய தத்துவங்களும் தவழ்கின்றன.

தாம் மணக்க விரும்பும் எம்பெருமானின் குணநலன்களை யும், அறச்செயல்களையும் அமைக்கும் அழகுதான் என்ன? மனத்தின் உயர் கருத்துக்களைக் காண்பதற்கேற்ற ஓர் ஆடியே அன்னையாரின் கனவு நிலை எனலாம்.

"பூரண பொற்குடம் வைத்துப் புறமெங்கும்
தோரணம் நாட்டக் கனாக் கண்டேன் தோழீ! நான்"[29]

"இந்திரன் உள்ளிட்ட தேவர் குழாம் எல்லாம்
வந்திருந் தென்னை மகட்பேசி மந்திரித்து
மந்திரக் கோடி யுடுத்தி மணமாலை
அந்தரி சூட்டக் கனாக் கண்டேன் தோழீ! நான்"[30]

28. திருவள்ளுவர், திருக்குறள், குறள் 1228
29. நாச்சியார் திருமொழி (6-1)
30. மேலது (6-3)

## அனங்கனடி பணிதல்

தான் வேண்டும் பேறாகிய இறைவனது திருவடிக் கைங்கர்யத்திற்குக் கால தாமதம் ஏற்பட்டமையால் மிகவும் கலங்கிய கோதை நாச்சியார் தான் செய்யும் செயல் ஏற்றதுதானா? என்பது பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபடாமல், காமதேவனைப் பற்றிக் கொண்டு அவன் மூலமாகக் கண்ணன் எம்பெருமானைப் பெற வேண்டும் என்று விரும்புகிறார். தலைவனைப் பிரிந்த தலைவி அவனுடன் சேர வேண்டுமென்று தன்முயற்சிகளை வேண்டுவது தமிழ் மரபன்று. ஆயினும் பெரியாழ்வாராகிய பரமபாகவதர் வளர்த்த பெண்ணாகையால், இளமை முதல் செய்து வந்த பக்தி, பரபக்தியாக மாறி, இறைவன் நினைவைத் தவிர, வேறொன்றில் நினைவு செல்லவில்லை. அவனைப் பெற வேண்டுமென்ற எண்ணம் மட்டுமே மேலோங்கி நிற்கிறது. அதுவும் விரைவில் பெறவேண்டும் என்ற ஆற்றாமையினாலேயே உடலிலியாகிய (அனங்கன்) காமனைப் பற்றுகிறார் நாச்சியார். காமன் அடிபணிந்து தன்னை இறைவனிடத்தில் சேர்த்து வைக்க வேண்டும் என்று முதல் திருமொழியிலேயே வேண்டுகிறார். அதோடு மட்டுமின்றி, இறைவனை வணங்கும் முறையிலேயே காமனையும் இங்கு வழிபடுகிறார்.

எம்பெருமான் ஒருவனைத் தவிர பிற தெய்வங்களைத் தொழாமை என்பது வைணவக் கொள்கை. நாச்சியார் ஆற்றாமை கரைபுரண்டு, விரைவில் எம்பெருமானை அடைய வேண்டும் என்ற ஒரு நினைவினாலேயே மேற்கொண்ட செயலாதலான் தவறில்லை என்பது பெரியோர் கூற்று.

வானிடை வாழுமவ் வானவர்க்கு
மறையவர் வேள்வியில் வகுத்தவவி

கானிடைத் திரிவதோர் நரிபுகுந்து
கடப்பதும் மோப்பதுஞ் செய்வதொப்ப
ஊனிடை யாழி சங்குஉத்தமர்க் கென்
றுன்னித் தொழுந்த வென் தடமுலைகள்
மானிடவர்க் கென்று பேச்சுப்படில்
வாழகில்லேன் கண்டாய் மன்மதனே! [நா. தி. 1-5]

என்று எம்பெருமான் ஒருவனுக்கே சங்கல்பித்து வைத்த தம் உடம்பை மானிடவர்க்கு உரிமையாக்கக் கருதினால் உயிர் வாழமாட்டோம் என்ற உறுதியை வெளிப்படுத்துகிறார்.

பண்டே உயிரனைத்தும் பங்கயத்தாள் நாயகற்கே
தொண்டாமெனத் தெளிந்த தூமனத்தார்க்கு – உண்டோ
பலகற்றும் தம்முடம்பைப் பாரித்தபிமானிக்கும்
உலகத்த வரோடு உறவு. [ஞானஸாரம் – 13]

என்று அருளாளப் பெருமாள் எம்பெருமானாரும், உலகத்தாரது இயல்பு பற்றிக் கூறியுள்ளது இங்கு நோக்கத்தக்கதாகும்.

## சிற்றில் சிதைத்தலும் சிந்தை கவர்தலும்

"உன் அடியார்க்கு என் செய்வன் என்றே இருத்தி நீ"

என்று நம்மாழ்வார் அருளிச்செய்யுமாப்போல அடியார்களுக்கு அருள் செய்வதையே தன் பேறாக நினைத்திருப்பவன் கண்ணன் எம்பெருமான்.

ஆயர்கள் இந்திரனுக்கு விழாவெடுத்து வேள்வி செய்யப் புகுந்தவிடத்து தாம் பிறந்து வளர்ந்து வரும் இவ்வூரிலேயே சிலர் நம்மைவிட்டு, வேறொரு தெய்வத்திற்கு உரியவர்களாகிறார்களே என்று நினைத்து, வேள்விக்கான படையல்களை கோவர்த்தன

மலைக்குப் படைக்கச் செய்து அதனை அங்கீகரித்துக் கொண்ட வன் எம்பெருமான்.

இத்தகைய உயர்ந்த குணம் படைத்த கண்ணன் தம்மையடைய வேண்டும் என்ற ஆற்றாமை மிக்கிருக்கும், ஆண்டாள் நினைக்கின்றாள். நம்மிடத்து அன்பு பூண்டவள் நம்மைப் பெறுவதற்காகக் காமனின் காலிலே விழுகின்றாளே என்று கண்ணன் மனம் புழுங்கினான். எனவே, காமனை வேண்டிச் சிறுமியர் சிற்றிலிழைக்கும் இடத்தில் உடனே தோன்றுகின்றான். சிறுமியருள் ஒருவராகிய கோதை நாச்சியார் எதிர்வந்த கண்ணன் காலம் தாழ்த்தி வந்தமையாலே ஏறெடுத் தும் பார்க்கவில்லை. இதனைக் கண்ட கண்ணன் சிறுமியர் இழைத்த சிற்றிலைச் சிதைக்கத் தொடங்கு கின்றான். தாங்கள் அமைத்த சிற்றிலைச் சிதைக்க வேண்டாம் என்று சிறுமியர் வேண்டும் வகையில் அமைந்துள்ளது இத்திருமொழி.

சிற்றிலைச் சிதைத்துக் கொண்டு சிறுமியருடன் கூடிய கண்ணன் மீண்டும் பிரிகின்றான். அவன் பிரிந்து சென்றபோது சிற்றிலை மட்டும் சிதைத்துச் செல்லவில்லை. எங்கள் சிந்தை யையும் கவர்ந்து கொண்டு சென்றான் என்கின்றனர் சிறுமியர்.

முற்றத்தூடு புகுந்து நின்முகங்
காட்டிப் புன்முறுவல் செய்து
சிற்றிலோ டெங்கள் சிந்தையுஞ் சிதைக்கக்
கடவை யோகோவிந்தா!

இவ்வாறு கண்ணன் எம்பெருமான் சிற்றில் சிதைத்த அழகிற் காகக் காப்பிடல் அமைக்கின்றார் பெரியாழ்வார் திருமகள். சிற்றில் என்பது தேவதாந்தபரஜனத்தை, அதாவது பிற தெய்வங்களைத் தொழுவது என்பதைக் குறிக்கிறது.

பெருவீடாகிய பரமபதத்தையே தன்னடியார்க்குத் தர வல்லவன் அவர்கள் செய்யும் சிறுதெய்வ (காமன்) வணக்கத்தைப் பொறுப்பானோ? காமனுக்காக இழைத்த சிற்றிலைச் சிதைக்கத் தானே செய்வான் என்ற கோட்பாடு இவ்விடம் புலப்படுகிறது. மேலும் இத்திருமொழியில் கோதை நாச்சியார் 'கோதை வாய்த் தமிழ்' என்ற சொற்றொடரைக் குறிப்பிடுவதால் இத்திருமொழி ஆண்டாளுடைய பகவதநுபவம் வழிந்து புறப்பட்ட தமிழ் என்பதும் பெறப்படுகிறது.

## கன்னியரோடு கரியபிரான் விளையாட்டு

கண்ணன் எம்பெருமான் தாம் இழைத்த சிற்றிலைச் சிதைத்ததை வருணித்த கோதையார், தம் தந்தையார் தம்மைக் கோபிகைப் பெண்ணாகப் பாவித்துக் கொண்டு "ஆற்றிலிருந்து விளையாடு வோங்களைச் சேற்றாலெறிந்துவளை துகில் கைக் கொண்டு'' எனப் பாடியவாறு தாமும் "கன்னியரோடு கரிய பிரான்'' விளையாட்டாக, "கோழியழைப்பதன் முன்னம்'' திருமொழியில் கன்னியரின் மொழியாலேயே சொல்லோவிய மாக்குகின்றார்.

உலகுக்கெல்லாம் தனி முதல்வனாக நின்று, அறநூல் உரைத்தவனாகிய கண்ணன் எம்பெருமான் கன்னியரின் சிற்றில் சிதைத்தல், கூறை கவர்தல் ஆகிய லீலைகளைச் செய்தான் என்பது பொருந்துமா? ஞானிகளும் இவற்றைப் ஆதரித்துப் போதல் நியாயமாகுமா? இவற்றை மோக்ஷ சாதனமாகக் கொள்ளலாமா? என்ற கேள்விகள் எழும்பும்போது, அதற்கு விடையாக சுகர் அருளிய சமாதானம்.

"ஈச்வரன் எல்லாவகையிலும் பெருமையுடையவன். அவனது செயல்களைக் குறைய நினைப்பதற்கில்லை. அக்னி

உயர்ந்த வற்றையும், தாழ்ந்தவற்றையும் தன் பால் ஏற்றுக் கொள்வது காரணமாக, அதனிடம் குறை கூறுவதற்கில்லை யன்றோ? இறைவனது செயல்கள் யாவையும் மாயைகள், அதாவது வியக்கத்தக்கவை; நம்முடைய கருமத்தின் பலனாக வருவனவல்ல; அவனது கிருபையினாலே நிகழ்வன. இவன் இந்திரியங்களுக்குக் கட்டுபட்டவனல்லன். இவன் கோபிகை களிடம் கொண்ட அன்பு, இந்திரிய வசியராகிய நாம் கொள்ளும் காதல் போன்றதன்று. இந்தக் கோபிகளது கண்கள், ஸ்தனங் கள், இடை இவற்றை இவன் அநுபவிப்பது என்பது இவர்களு டைய ஞானம், பக்தி, வைராக்யம் இவற்றை ஆராய்வது என்பர் பெரியோர். கோபிமார்களிடம் இவனது அன்பைக் குறிக்கும் போது, இவன் இவர்களுடன் நடுவே பல உருவங்களுடன் புகுந்து ரஸித்தான் என்றும், த்வாரகையில் பதினாறாயிரம் தேவிமார்களுடன் ஒருத்திக்கும் குறையில்லாமல் மனை வாழ்க்கை நிகழ்த்தினான் என்றும், நாம் கேட்கும் போது, இவனது செயல்கள் மிகச் சிறந்தன மட்டுமேயன்றி, நமது ஆய்வுக்காக வல்ல என்பதாகும்''. எனவே கண்ணனின் லீலைகள் மற்றும் இறைவனது குணங்களை விரும்பி ஏற்றுக் கொள்வதற்காக, கர்ம வயப்பட்ட மனிதர்களும் ஆதரிக்கும் சிற்றின்ப நிகழ்ச்சிகளை அமைத்துப் பாடுகின்றனர் பெரியோர். இவ்வழியைப் பின்பற்றிய ஆண்டாளும் இம்முறையில் பாடுகின்றார்.

ஏழமை ஆற்றவும் பட்டோம்;
இனியென்றும் பொய்கைக்கு வாரோம்
தோழியும் நானும் தொழுதோம்
துகிலைப் பணித்தருளாயே! (நா. தி. 3-1)

ஆயர் மகளிராக அநுகாரம் பெற்ற நாங்கள் நோற்கும் இந்த நோன்பை நீ எப்பொழுதும் நினைவில் குறிக்கொள்ளவேண்டும் என்று கண்ணனிடம் வேண்டுகின்றனர் பெண்பிள்ளைகள்.

மாசுடை [illegible]ம்பொடு தலையுலறி
வாய்ப்புறம் வெளுத்தொரு போதுமுண்டு
தேசுடைத் திறலுடைக் காமதேவா!
நோற்கின்ற நோன்பினைக் குறிக்கொள் கண்டாய் [நா.தி. 1-8]

இவனுக்குத் தன்பால் உள்ள ஆதர அதிசயத்தை இவன் செய்த இத் தீம்புகளின் மூலம் காட்டுகிறாள் ஆண்டாள். வெளிப்படையாக இந்த உறவைச் சொல்லுவதால் ஜீவாத்மா வுக்குப் பரமாத்மாவினிடம் ஏற்பட வேண்டிய ஆராத காதலைக் குறிப்பிடுகின்றார் என்பது தெளிவாகின்றது.

### கூடலிழைத்தல்

கண்ணனிடமிருந்து தமது ஆடைகளைப் பெற்றுக் கொள்கின்றனர் இடைப்பெண்கள். கூடியிருத்தல் என்பது பிரிவாகவே நிகழும் ஆதலால் பிரிந்த கண்ணனை மீண்டும் கூட வேண்டும் என்பதற்காக ஆயர் மகளிர் கூடல் இழைக் கின்றனர்.

கூடலிழைத்தலாவது வட்டமாக ஒரு கோட்டைக்கீறி, அதற்குள் சுழிச் சுழியாக அடுத்தடுத்துச் சுழித்து, சுழிகள் இரண்டாக முடிந்தால் கூடுவது நிகழும் என்றும், தனிச்சுழியாக நின்றால் கூடுவது நேராது என்பதுமாகும்.

கோதை நாச்சியார் இடைப்பெண்கள் பேசுகிறாற்போல, கூடலே நீ கூடிடு என்று அசேதனமான கூடலின் காலில் விழுந்து எம்பெருமானைப் பெறப்பார்க்கிறாள். இந்தக் கலக்கம்

ஆண்டாளுக்கு இறைவனிடம் உள்ள அன்பின் மிகுதியைக் காட்டுகிறது.

> காட்டில் வேங்கடம் கண்ணபுர நகர்
> வாட்டமின்றி மகிழ்ந்துறை வாமனன்
> ஓட்டரா வந்தென் கைப்பற்றித் தன்னொடும்
> கூட்டுமாகில் நீ கூடிடு கூடலே [நா. தி. 4-2]

என்று திருவேங்கட மலையிலும், திருக்கண்ணபுரத்திலும் உறையும் இறைவன், தன்னுடைமையைப் பெறுகைக்குத் தான் இரப்பாளனாக, அதுவும் இந்திரனாகிய வேறொருவனுக்காக வந்தாற்போன்று, ஓடிவந்து எங்களுடன் கூடுவானாகில் நீ கூடிடு கூடலே என்று குறிப்பிடுகிறார் கோதை நாச்சியார். இத்திருமொழியில் கண்ணன் எம்பெருமான் மீது கொண்ட ஆராத அன்பு வெளிப்பட்டு ஆற்றாமை மிகுந்து விரைந்து அடைய வேண்டும் என்ற துடிப்புப் பாடல்கள் வாயிலாகவே வெளிப் படுகிறது.

இராமாவதாரத்தில் ஆரண்யத்தில் ரிஷிகளோடு கூடி வனவாசத்தை ரசித்தாற்போல, திருவேங்கடமலையில் அருள்புரி கின்றனன். அயோத்தி நகர மக்களுடன் கூடி மகிழ்ந்திருந்தாற் போல விளங்குகிறான் திருக்கண்ணபுரத்து செளரிராஜன். வெள்ளப் பெருக்குப் போல வடிந்து போன அவதாரங்கள் போல் அல்லாமல், இவ்வூரில் நிலை நின்ற அர்ச்சாவதாரமாக எழுந்தருளியிருக்கிறான் எம்பெருமான். தம்முடைய உடைமை யாகிய சீவான்மாவைப் பெறவேண்டும் என்று இரப்பாளனாக நிற்கிறான் எம்பெருமான். குற்றமுடையோரையும் நற்றமாக்கி சுற்றமாக்கிக் கொள்பவன். ஆகையால் அவன் தானாக வந்து என் கைப்பற்றித் தன்னொடுங் கூட்டிக் கொள்வனாகில் நீ கூடிடு

கூடலே என்று ஆண்டாள் அமைக்கிறார். இதனால் சீவான் மாவின் கைம்முதலின்மை வெளிப்படுகிறது.

**கண்ணனைக் கூவு கருங்குயிலென்னுதல்**

'தெள்ளியார் பலர்' திருமொழியினால் கூடலிழைத்து, எம்பெரு மான் தன்னொடு கூடுவானா? என்று வினவினார் கோதை நாச்சியார். கூடலும் ''கூடுவேன் மாட்டேன்'' என்று மாற்றம் உரைக்கவில்லை. முன்பு தாமும் கண்ணனும் கூடியிருந்த காலத்து, சோலையில் கூவிக் கொண்டிருந்த குயிலைப் பார்த்து, தன்னை அவனுடன் பொருந்த விடக் கூவுவாய் என்று கேட்பதாக அமைகின்றது. 'மன்னுபெரும் புகழ்மாதவன்' திருமொழி .

மென்னடையன்னம் பரந்து விளையாடும்
 வில்லிபுத் தூருறைவான்றன்
பொன்னடி காண்பதோ ராசையினாலென்
 பொரு கயற் கண்ணிணை துஞ்சா
இன்னடிசிலொடு பால முதூட்டி
 யெடுத்தவென் கோலக் கிளியை
உன்னோடு தோழமை கொள்வன் குயிலே
 உலகளந்தான் வரக் கூவாய் [நா. தி. 5–5]

வைகுண்டத்தில் வீற்றிருக்கும் இறைவன் கோதை நாச்சியாருக்காகவே ''மென்னடை யன்னம் பரந்து விளை யாடும்'' வில்லிபுத்தூரிலே வடபத்ரசாயியாகச் சாய்ந்துள்ளான். அவ்வாறு இருக்க, கோதை நாச்சியார் இவ்வாறு வருத்தப்படக் காரணம் என்ன? எனில் கோதையாருக்கு இறைவனது, சீல குணங்கள் புலப்படுகின்றன. அதனால் ஆட்கொள்ளப்பட்டு மயங்கியவராய் வில்லிபுத்தூருறை வானையும், விருப்புடன் சென்று நோக்கும் வல்லமையற்றவராக இருக்கிறார்.

கள்ளவிழ் செண்பகப் பூமலர் கோதிக்
களித்திசை பாடுங் குயிலே! [நா.தி. 5-2]
போதலர் காவிற் புதுமணம் நாறப்
பொறிவண்டின் காமரங் கேட்டுன்
காதலியோடுடன் வாழ்குயிலே [நா.தி. 5-3]
அன்புடையாரைப் பிரிவுறு நோயது
நீயும் அறிதி குயிலே! [நா.தி. 5-4]
கொத்தலர் காவில் மணித்தடங் கண்படை
கொள்ளு மிளங் குயிலே [நா.தி. 5-6]

என்று களித்து இசைபாடி, வண்டின் இசை கேட்டுக் கொண்டு காதலியுடனிருக்கும் குயிலே, அன்புக்குரியாரைப் பிரிவுறும் நோயை நீயும் அறிவாய். சிறந்த இடத்தில் பள்ளி கொண்டிருக் கிறாய். தன்னுடைய வருத்தத்தை உணர்ந்து, குயிலே! உன் போகங்களைத் துறந்து உடனே தலைவன் வருமாறு கூவவேண் டும் என்று தமது கரைபுரண்ட ஆற்றாமையை வெளிப்படுத்து கிறாள் கோதையார்.

அத்துடன் குயிலைக் கூவுமாறு ஊக்குவிப்பதற்காக, நீ கூவினால் உனக்குத் தலையல்லால் கைம்மாறிலேன், சாலத் தருமம் பெறுதி, என்ற பரிசில் மொழிகளையும் கூறுகிறார் கோதையார்.

### கனவு நிலையைத் தோழிக்கு உரைத்தல்

குயிலிடத்துத் தன் வருத்தத்தை உணர்த்தி இறைவனை விரைவில் அழைத்து வரக் கூவவேண்டும் என்று பலவாறாக வேண்டியும், அக்குயில் அவ்வாறு செய்யவில்லை. காலம் தாழ்த்தாது எம்பெருமானைக் காணவேண்டும் என்ற ஆர்வம்

அதிகமாயிற்று. இவ்வாறு கோதையாரது ஆர்வத்தை மேலும் பெருக்கவேண்டும் என்பது இறைவனது கருத்தாதலால் முகம் காட்டாது இருக்கின்றான். இவ்வாறு அடியொடு முகம் காட்டாமல் இருந்தாலும் கோதையாரால் தரித்துக் கொள்ள முடியாது. எனவே கனவிலாலேனும் காட்சி தருவோம் என்று திருமணம், திருமணத்திற்கு முன்னர் நிகழ்த்தும் செயல்களைக் கனவிலே காட்ட, கோதைநாச்சியாரும் அவற்றை அப்படியே அநுபவித்துக் கொண்டு, அதனைத் தனது உயிர்த் தோழியிடத்துச் சொல் வதாக அமைகின்றது இத்திருமொழி.

**நாளை வதுவை மணமென்று நாளிட்டு**
**பாளை கமுகு பரிசுடைப் பந்தற்கீழ்**
**கோளரி மாதவன் கோவிந்தனென்பானோர்**
**காளைபுகுதக் கனாக் கண்டேன் தோழீநான்** [நா.தி. 6-2]

என்று கனவு நிலையை உரைக்கின்றார். கனவு சாமானியர்கள் மாட்டு கர்மத்தின் அடிப்படையில் எழும். ஆனால் இறைவனுக்கு ஆட்பட்டவர்கள் பொருட்டு அவர்களுக்கு ஏற்படும் ருசி மற்றும் குண அநுபவத்தின் வழியாக எழுகின்றது. திருமணத்தை நாட்கள் கடத்தி வைத்தால் அதுவரை இவளால் பொறுக்க மாட்டாது வருத்தம் மிகக் கொள்வாள் அல்லது இன்று திருமணம் என்றால் அந்த மிகுந்த மகிழ்ச்சியையும் இவளால் தாங்கிக் கொள்ள இயலாது என்று நாளை திருமணம் என்று நிச்சயித்து "நாளை வதுவை என்று காட்டினான்" என்பதாக இப்பாடல் அமைகிறது.

இத்திருமொழியில், திருமணத்திற்கு முன்னர் நிகழும் நிகழ்ச்சியாகக் கூறப்படுபவை அனைத்தும், தமிழருக்கே உரிய தமிழ்முறைச் செயல்களாக அமைந்துள்ளன. இத்தகைய

திருமணச் சடங்குகளை கோதை நாச்சியார் உரைத்தாற் போன்று வேறு எந்த நூலிலும் காணக் கிடைக்கவில்லை.

கண்ணபிரானும் தானுமான சேர்த்தியில், மங்கல வீதி களில் வலம் வந்து, பின்பு மஞ்சன நீர் ஆட்டுவது வரைத் தாம் கனவில் கண்டதாகக் கோதை நாச்சியார் கூறுகின்றார்.

**மருப்பொசித்த மாதவன்தன் வாய்ச்சுவையை வெண் சங்கிடத்து விருப்புற்றுக் கேட்டல்**

மேல் திருமொழியில் மஞ்சனமாட்டுவது வரை கனவில் கண்டு கொண்டதாக உரைப்பதால், இருவருமான சேர்த்தியும் கனவில் நிகழ்ந்ததாகவும் கொள்ளத்தகும். இதனால் கண்ண பிரான் வாயமுதத்தைப் பருகப் பெற்ற ஆண்டாள் கண் விழித் துக் கொள்கிறாள். ஆ! இத்தகைய அனுபவம் கனவில் தானே கண்டு கொள்ளப் பெற்றேன். நேரில் இவ்வனுபவம் கிடைக்கப் பெறவில்லையே, கண்ணன் நம்மை இப்படி வஞ்சித்து விட்டானே என்று மிகவும் வருத்தமுற்றார் கோதை நாச்சியார். அப்போது கண்ணன் எம்பெருமானின் வாய்ச்சுவையை நாளும் பருகத் தக்கோ யாரேனும் உளரோ? என்று ஆராயத் தொடங்குகிறார். அவனது இடக்கையிலே பொருந்தியுள்ள ஆழி வெண்சங்கு அத்திருவாயமுதத்தை இடைவிடாது அநுபவிக்கும் பாக்கியம் பெற்றவன் என்றுணர்ந்து, சங்காழ்வானைத் தோழியாகப் பாவித்து, கண்ணபிரானது திருப்பவள வாயமுதத்தைப் பருகு கிறாயே அதன் சுவையையும், வாசனையையும் விருப்பத்துடன் கேட்கின்றேன். சிறிது சொன்னாயானால் நான் காதினாலாவது கேட்டு மகிழ்கின்றேன் என்று வினவுகிறார் கோதையார்.

கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ
திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித் திருக்குமோ

மருப்பொசித்த மாதவன்தன் வாய்ச்சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண்சங்கே

(நா.தி. 7-1)

என்று, சீதை குரங்காகிய அனுமனிடம் உரையாடினாற்போன்று கோதை சங்காழ்வானிடம் உரையாடுகின்றார்.

இறைவனிடத்து ஆழங்காற்பட்டவர்கள் இழியும் துறை என்று சங்கினை வினவுகிறார். முதன்முதலில் உயிரினம் தோன்றிய இடம் கடல் என்பது அறிவியலாளர் கூறும் உண்மை. எனவே அனைத்துயிர் கட்கும் அடைக்கலம் கடல் என்பது பெறப்படுகிறது. எனவே கடலில் பிறந்தவனாகிய சங்காழ்வானே! இறைவனது குணாநுபவம் கிடைக்கப் பெறுகைக்கு நீயே அடைக்கலமாக வேண்டும் என்கிறார்.

மேலும் சங்குகளிற் சிறந்த பாஞ்சசந்நியமே! பெண்ணாய்ப் பிறந்தவர்களெல்லாம் பொறாமை கொள்ளும்படியாக அல்லவா நீ செய்யும் செயல்கள் அமைந்துள்ளன. உனக்கும் உணவு எதுவென்றால், உலகளந்த பெருமானின் வாயமுதம்; உறக்கம் கொள்ளும் இடமோ கண்ணபிரானின் கைத்தலம்; எம்பெருமானிடத்துக் கணப்பொழுதும் பிரியாதிருக்கும் பாக்கியத்தைப் பெற்றுள்ளாய். எம்பெருமானிடத்து அன்பு கொண்டு அடிமை செய்ய ஆசைப்பட்டிருக்கும் பெண்பிள்ளைகள் யாவரும் வயிறெரிந்து, நீயொருவனே இவ்வாறு போது போக்கிக் கொண்டு எங்களுக்கு அநியாயம் செய்கிறாயே? என்று முறையிடுவதையும் அமைக்கிறார்.

உண்பது சொல்லில் உலகளந்தான் வாயமுதம்
கண்படை கொள்ளில் கடல்வண்ணன் கைத்தலத்தே

பெண்படையாருன்மேல் பெரும்பூசல் சாற்றுகின்றார்
பண்பல செய்கின்றாய் பாஞ்ச சன்னியமே [நா.தி. 7-8]

என்று பாஞ்சசன்னியத்தைப் பத்மநாபனோடுஞ் சுற்றமாக்கி பாஞ்ச சன்னியத்தின் செயல்களைக் கூறி எம்பெருமானின் சீல குணங்களை விளக்குகிறார்.

**மேகத்தை மேக வண்ண வேங்கடவனுக்குத் தூது விடுத்தல்**

சங்காழ்வானிடத்து கண்ணனின் திருப்பவளச் செவ்வாயின் சுவையைக் கேட்டறிந்து உரையாடிய போதும் சங்கும் மறுமாற்றம் சொல்லவில்லை. இதனால் ஆண்டாளின் ஆற்றாமை மேலும் அதிகமாயிற்று. முன்னொரு காலத்து எம்பெருமானிடத்து கூடித் திரும்பவும் அவன் பிரிந்து செல்லும்போது கார்காலத்து மீண்டும் திரும்புவேன் என்று உரைத்துச் சென்றான். கார் காலமும் வந்தது. கார் காலத்திற்கு அறிகுறியாக வந்துள்ள மேகக் கூட்டங்களோடு கண்ணன் எம்பெருமானும் வந்திருக்கக் கூடும் என்று நினைத்தாள். மேகங்களிடத்து எம்பெருமானும் உடன் வந்தானோ? என்று வினவினாள். அவையும் பதிலுரைக்காத காரணத்தால், மேகங்களை நோக்கி, பிரிவினால் ஆற்ற இயலாத தன் தசையை எம்பெருமானிடத்து அறிவிக்க வேண்டுமென்று சிந்துபூ மகிழும் சோலைகள் சூழ்ந்த திருவேங்கடமுடையானிடத்துத் தூது அனுப்புகிறார் கோதை நாச்சியார்.

எதுவும் தலைவனது விருப்பம், அவனது மனக்கருத்துப் படியே நடக்க வேண்டும். அவன் வந்தபோது வரட்டும், அவனது வரவைப் பற்றி நாம் சிறிதும் கவலைப்படத் தேவையில்லை. நாம் ஓர் உபாயமும் செய்ய வேண்டியதில்லை, என்ற பெண்களுக்கே உரிய தன்மையைச் சீர் கெடச் செய்யும்படியாக, என்னை

இவ்வாறு வருத்தத்திற்கு உட்படுத்துகின்றானே இதனால் அவனுக்குப் பெருமை சேராது பழியே தலைக்கட்டும். இலக்குமியுடன் கூடியுள்ள நாயகன் அதேபோன்று என்னையும் மகிழ்வித்தால் மட்டுமே பெருமையுண்டாகும். இல்லையெனில் இவ்வாறு ஒரு பெண் கொடியைவதை செய்தானே என்ற பழிச் சொல்லே அவனுக்கு வந்து சேரும். எனவே வேங்கடத் துறைகின்ற செங்கண்மாலிடத்து என்னுடைய ஆற்றாமையை அவன் திருவடிகளில் நான் செய்யும் விண்ணப்பமாக உரைப்பீர் என்று மேகங்களிடத்து மொழிகின்றார் கோதை நாச்சியார்.

**சங்கமா கடல் கடைந்தான் தண்முகில்காள்! வேங்கடத்துச்**
**செங்கண்மால் சேவடிக்கீழ் அடிவீழ்ச்சி விண்ணப்பம்**
**கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து ஒருநாள்**
**தங்குமேல் என்னாவி தங்கு மென்றுரையீரே – என்றும்,** [நா.தி. 8–6]

**நாகத்தினணையானை நன்னுதலாள் நயந்துரை செய்**
**மேகத்தை வேங்கட க்கோன் விடுதூதில் விண்ணப்பம்**
**போகத்தில் வழுவாத புதுவையர்கோன் கோதைதமிழ்**
**ஆகத்து வைத்துரைப் பாரவரடியா ராகுவரே** [நா.தி. 8–10]

என்று மேகத்தை வேங்கடக்கோன் இடத்திற்கு தூது விடு விண்ணப்ப மாக இத்திருமொழியை அருளிச் செய்துள்ளார். கோதை நாச்சியார் கண்ணனின் விளையாட்டுக்களை மிக விரும்பிப் பாடியுள்ள இத்திருமொழிப் பாடல்களை மனத்தில் வைத்து ஓதவல்லவர்கள் அவனுக்கு அடியாராகுவர்கள் என்று கூறுகிறார். உலகியலாக அடிமை என்பது வருத்தமான செயலாகக் கருதப்படுகிறது. ஆனால் இறைவனுக்குச் செய்யும் அடிமை பெரும்பேறு என்ற வைணவ அடியார்களின் நிலை இங்குப் பேசப்படுகிறது.

## கார் கண்டு கலங்கியுரைத்தல்

மேகங்களை வேங்கடக்கோனிடத்து விடுதூதாக அனுப்பி, என் நிலைமையை அவனுக்கு உணர்த்தி என்னையும் எம்பெருமானையும் கூட்டி வைக்க வேண்டுமென்று மேகங்களை வேண்டினார். இவள் வேண்டிய அக்காரியத்தைச் செய்யத்தக்க வல்லமை அவற்றிற்கு இல்லை. ஆயினும் தாங்கள் வந்ததன் காரியங்களைச் செம்மையாகச் செய்தன. கார் காலத்தில் நன்கு மழை பொழிந்தன! கார்ப்பருவ மலர்கள் மலர்ந்தன! மழைக் காலத்துக் கூடிக் களித்துத் திரியும் விலங்குகளும் உலவி வந்தன. இவையாவும் கோதை நாச்சியார் எம்பெருமான் வரவை நோக்கி ஆற்றாமை மிக்கிருக்கும் காலத்தே காணப்படுகின்றன. இக்காட்சிகளால் அவரது ஆற்றாமை மேலும் கரைபுரண்டு அவரால் பொறுக்க இயலாத நிலையில் துவண்டு மொழியும் மொழிகளாகப் பேசுகின்றார் 'சிந்துரச் செம்பொடி' திருமொழியில்,

பைம்பொழில் வாழ்குயில்காள் மயில்காள் ஒண்கருவிளைகாள்
வம்பக்களங் கனிகாள் வண்ணப்பூவை நறுமலர்காள்
ஐம்பெரும் பாதகர்காள் அணிமாலிருஞ் சோலைநின்ற
எம்பெருமானுடைய நிறம் உங்களுக்கென செய்வதே [நா.தி. 9-4]

குயில், மயில், கருவிளை, களங்கனி, காயாம்பூ ஆகிய இவ்வைந்தும் பொன் களவு செய்தல் முதலிய ஐந்து மிகப் பெரும் பாதகங்களைச் செய்யும் ஐம்பெரும் பாதகர்கள் என்கிறார். தனக்குப் பொறுக்க முடியாதவாறு, இவை யாவும் திருமாலிருஞ்சோலை எம்பெருமானின் நிறத்தைத் தாம் ஏறிட்டுக் கொண்டு தன்னை மிகவும் துன்புறுத்துகின்றன எனக்

குறிப்பிடுகின்றார். அவர் பிரிந்து சென்ற காலத்து என்னைத் தேற்ற வேண்டிய இவையும், எனக்குப் பாதகம் செய்கின்றன. பிரிந்து சென்றவன் ஒருவன் என்றால்; பிரிந்து சென்ற காலத்தும், அவனது நினைவைக் கொணர்ந்து பாதகம் செய்பவர் பலராயிருப்பதால் என்செய்வது? என்று துன்பத்தால் துவண்டு மொழிகின்றார்.

*நாறு நறும்பொழில மாலிருஞ்சோலை நம்பிக்கு நான்*
*நூறு தடாவில் வெண்ணெய் வாய்நேர்ந்து பராவி வைத்தேன்*
*நூறு தடா நிறைந்த அக்கார வடிசில் சொன்னேன்*
*ஏறு திருவுடையான் இன்றுவந்திவை கொள்ளுங்கொலோ* (நா.தி. 9–6)

என்ற பாசுரம் வைணவ சமயத்தின் முக்கிய மந்திரங்களில் ஒன்றான த்வயத்தின் பொருளை விளக்குவதாக அமைகின்றது. த்வயத்தில் முதல் வாக்கியம் இலக்குமியோடு கூடிய பெருமானைச் சரணமாகப் பற்றுகிறேன். இரண்டாம் வாக்கியம் எம்பெருமானுக்கு எல்லாவித அடிமையும் செய்வேன் என்பதாகும். முதல் வாக்கியத்தின் பொருளுக்கேற்ப அமையும் அடியார்கள் சீதாதேவியைப் போன்று அவனுடைய அருளையே நோக்கி நிற்பவர்கள். பின்நிலையில் உள்ள அடியார்கள் இலக்குவனைப் போன்று எல்லா அடிமையும் செய்வேன் என்றிருப்பவர்கள். இப்பாட்டின்படி எம்பெருமானின் அருள் நோக்கினைப் பார்த்திருத்தலையும், இறைவனுக்கு அடிமை செய்வதையும் கூறுவதாக அமைந்துள்ளது.

காலையெழுந்திருந்து கரிய குருவிக் கணங்கள்
மாலின்வரவு சொல்லி மருள் பாடுதல் மெய்ம்மை கொலோ
சோலைமலைப் பெருமான் துவராபதி யெம்பெருமான்
ஆலினிலைப் பெருமான் அவன் வார்த்தை யுரைக்கின்றதே! (நா.தி. 9–8)

தாம் பிறந்த ஊரிலே, பறவைகள் கூட எம்பெருமானின் சிந்தனையே மிக்கு இருப்பதனால், சில கருங்குருவிகள், காலை யில் எழுந்திருந்து கூட்டங்கூட்டமாக இருந்து மாலின் வரவைச் சொல்லி இந்தளம் என்ற பண்பாடுகின்றனவே! இவை மெய்யாய் நடக்குமா? பொய்யாய்ப் போகுமா என்று சிந்திக்கிறார் கோதை நாச்சியார்.

**கார்கண்டு ஆற்றாமையும் காப்பு பாருவார் பெற்றமையால் தணிகையும்**

'சிந்தூரச் செம்பொடி' பதிகம் போலே இத்திருமொழியிலும் கார் காலத்துப் பொருள்கள் எம்பெருமான் திருவுருவை நினை வூட்டி ஆற்றாமையைப் பெருகச் செய்வதாகவும், ஆற்றாமை மிகுதியினால் பேசும் பாசுரங்களாகவும் சில அமைகின்றன.

கார்க்கோடல் பூக்களை எம்பெருமான் போருக்கணிகல மாகச் செய்து தன்னை நோக்கி அனுப்பியுள்ளான் என்று கார்க் கோடல் பூக்களையே வினவுகிறார்.

**கார்க்கோடல் பூக்காள் கார்க்கடல் வண்ணனென்மேல் உம்மைப்**
**போர்க் கோலஞ் செய்து போர விடுத்தவன் எங்குற்றான்** [நா.தி. 10-1]

முல்லைப் பிராட்டியே! எம்பெருமானது முறுவல் போலே மலர்ந்திருக்கும் உனது அழகாலே எனக்குத் துன்பத்தை உண் டாக்காதே. நான் உன்னைச் சரணமடைகின்றேன். வரம்பு கடந்து வந்த அரக்கி சூர்ப்பணகையின் மூக்கை அரிந்த பெருமான் சொன்ன சொல் அதாவது அண்டினாரை விடமாட்டேன் என்ற சொல்லும் பொய்யானால் பெரியாழ்வார் வயிற்றுப் பிறப்பாக நாம் பிறந்தமையும் பொய்யாகி விடும் என்கிறார் கோதை நாச்சியார். எம்பெருமான் தன்னைச் சரணடைந்தவன். எப்படிப்பட்டவனாகிலும்

அவனைக் கைவிடமாட்டான் என்ற உயர்ந்த கருத்தைப் புலப்படுத்துகிறார்.

முல்லைப் பிராட்டி நீயுன் முறுவல்கள் கொண்டு எம்மை
அல்லல் விளைவியேல் ஆழி நங்காயுன்னடைக்கலம்
கொல்லை யரக்கியை மூக்கரிந்திட்ட குமரனார்
சொல்லும் பொய்யானால் நானும் பிறந்தமை பொய்யன்றே [நா.தி.10–4]

பாடும் குயிலைக் கண்டு ஈதென்ன பாடல் பாடுகின்றீர் சிறந்த சுனைசூழ் திருவேங்கடமலைநாதர் எனக்கொரு வாழ்வைத் தருவாரானால் அதனை இங்கு வந்து பாடுங்கள் என்கிறார்.

**பாடும் குயில்காள்! ஈதென்ன பாடல்? நல்வேங்கட**
**நாடர் நமக்கொரு வாழ்வு தந்தால் வந்து பாடுமின்** [நா.தி. 10–5]

**கணமாமயில்காள்! கண்ணபிரான் திருக்கோலம் போன்று**
**அணிமாநடம் பயின்றாடுகின்றீர்க்கு அடிவீழ்கின்றேன்** [நா.தி. 10–6]

என்று மயில்கள் அடிபணிகின்றார். கடலும், மழையும் தம்மை எம்பெருமானிடம் சேர்ப்பிக்க வேண்டும் என்று வேண்டுகிறார்.

கார்ப் பருவப் பொருட்களெல்லாம் தம்மை எம்பெருமானிடத்து கூட்டி வைக்கும் வல்லமை படைத்தவையல்ல. தம் திருத் தகப்பனாராகிய பெரியாழ்வார் கண்ணனை நீராட்டவும், காப்பிடவும், ஓர் இசையைச் சொல்லி வரப்பண்ணுபவராதலாலே அவரோடு தாம் கொண்ட தொடர்பே இறைவனிடத்துத் தம்மைக் கூட்டி வைக்கும். அதாவது பகவதநுபவம் பெறுவதற்கு, இறைவனது குணாநுபவத்தில் ஊறித் திளைத்திருக்கும் பாகவதர்களது தொடர்பு இன்றியமையாதது என்பதை இறுதிப் பாடலில் கூறி இத்திருமொழியை நிறைவு செய்கின்றார் கோதை நாச்சியார்.

நல்லவென் தோழி நாகணை மிசை நம்பரர்
செல்வர் பெரியர் சிறுமானிடவர் நாம்செய்வதென்
வில்லிபுதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை
வல்லபரிசு வருவிப்பரேல் அது காண்டுமே [நா.தி. 10-10]

## கழல் வளையை கழல் வளையாக்குதல்

தனது ஆற்றாமையையும், ஆற்றாமை மிகுதியினால் துன்புற்றாலும் பெரியாழ்வாரிடத்துப் பெற்ற ஸம்பந்தத்தினால் அவதார காலத்தில் ருக்மிணிப் பிராட்டிக்கு அருள்செய்தாற் போலத் தனக்கும் அருள்புரிவான் என்று ஆறியிருத்தலை, தாய் மார், தோழிமார்களுடன் கூறுவதாக அமைகின்றது 'தாமுகக்கும் தம்கையில்' திருமொழி.

யான் உகந்து அணிந்திருக்கின்ற சங்கினாலான வளை, தாம் உகந்து கைக்கொண்டிருக்கின்ற எம்பெருமான் கைச்சங்கு போன்றதே என்கின்றார்.

தாமுகக்கும் தங்கையில் சங்கமே போலாவோ
யாமுகக்கு மென்கையில் சங்கமுமேந்திழையீர் [நா.தி. 11-1]

எம்பெருமான் யான் அணிந்திருக்கக் கூடிய கழல்வளையையும் கழல் வளையாகவே ஆக்கினார் என்கிறார்.

சங்கினாலான கழல்வளை, எம்பெருமானைப் பிரிந்து, இளைத்து வருந்துவதால், கழன்றொழிகின்ற வளையலாக ஆயிற்று. நான் கழலாத வளை அணிந்திருந்தால் அவரும் அத னை கழலாத வளையாக ஆக்கியிருப்பார். நான் அணிந் திருந் ததோ கழல்கின்ற கழல்வளை எனவே அவர் செய்ததில் ஒரு குற்றமுமில்லை. என்னிடத்திலேயே குற்றமுள்ளது என்கிறார்.

**என்னுடைய கழல்வளையைத் தாமும் கழல்வளையே யாக்கினாரே**

[நா.தி. 11-2]

**செம்மையுடைய திருவரங்கர் தாம் பணித்த**
**மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்**
**தம்மை யுகப்பாரைத் தாமுகப்பரென்னுஞ் சொல்**
**தம்மிடையே பொய்யானால் சாதிப்பா ரானினியே?** [நா.தி. 11-10]

செம்மை - நினைவு, சொல், செயல் மூன்றும் ஒரு படிப்பட்டுள்ள செம்மை வாய்ந்த அழகியமணவாளர், முன்பு கூறிய, "எல்லா வித செயல்களின் நற்பலன்களையும், தீய பலன்களையும் கைவிட்டு, என்னையே சரணமாகப் பற்று, நான் அனைத்துப் பாவங்களையும், புண்யங்களையும் போக்கி மோட்சத்தை அளிக்கிறேன்" என்ற வார்த்தையே தமக்குத் தாரகமாகக் கொண்டு வேறு உபாயத்தைத் தேடாது 'தன்னைக் கொண்டாடுபவர்களை தாங்கள் கொண்டாடுவர்' என்ற பழமொழி திருவரங்கநாதரிடத்திலேயே பொய்யாகிவிட்டால் இங்ஙனம் செய்யக்கூடாது என்று அவரை நியமிப்பவர் யார்? என்பதன்மூலம் பிரபந்நன் பின்பற்ற வேண்டிய சரமோபாயத்தைக் கூறுகிறார் கோதைநாச்சியார்.

## தன்னைத் தமருய்த்துப் பெய்ய வேண்டுதல்

தானே நடந்து சென்று அவனுள்ள விடத்துச் சென்று சேர்வதற்கும் சக்தியற்றவளாக ஆற்றாமையினால் துவண்டு விடுகிறார் கோதை நாச்சியார். எனவே தன்னிடத்துப் பரிவு கொண்டவர்களை நோக்கி, நீங்கள் என்னை இப்போதே கண்ணபிரான் எழுந்தருளியிருக்கக் கூடிய இடத்திற்குக் கொண்டு போய்ப் போடுங்கள் என்பதாக "மற்றிருந்தீர்கட்கு அறியலாகா" என்ற இத் திருமொழியை அருளிச் செய்துள்ளார்.

என்னுடைய துணிவுக்கு மாறுபாடாக இருக்கிற உங்களால் அறியமுடியாதபடிக்கு மாதவன் பொருட்டு அன்பு கொண்டிருக்கிற எனக்கு, நீங்கள் உரைப்பதெல்லாம் ஊமையும் செவிடும் கூடிப்பேசினாற் போன்றவையே யாதலால் என்னை, மல்லர் வந்து பொருவார்கள் என்று மல்லருக்காக கண்ணன் வந்து பொருந்தி இருந்த மதுரைப் பக்கத்தில் (பிரதேசத்தில்) உய்த்து விடுங்கள் என்கிறார்.

மற்றிருந்தீர் கட்கறியலாகா மாதவனென்பதோரன்புதன்னை
உற்றிருந்தேனுக் குரைப்பதெல்லாம்ஊமையரோடு செவிடர்வார்த்தை
பெற்றிருந்தாளை யொழியவே போய்ப்பேர்த்தொரு தாயில் வளர்ந்த நம்பி
மற்பொருந்தா மற்களமடைந்த மதுரைப் புறத்தென்னையுய்த்திடுமின் [நா. தி. 12-1]

மாதவனென்பதோரான்புதன்னை உற்றிருந்தேனுக்கு - அவனை யொழியச் செல்லாமையுடைய நான் என்பதைக் கூறுகிறார். இதேபோன்று ஆய்ப்பாடி நகர், நந்தகோபாலர், திருமாளிகை வாசல், யமுனைக்கரை, காளியனுச்சியில் நடனம் புரிந்த பொய்கைக் கரை, பத்த விலோசனம், கோவர்த்தனமலை, துவராபதி ஆகிய இடங்களுக்குத் தன்னைக் கொண்டு சென்று போட்டு விடும்படியாகப் பணிக்கிறார் கோதை நாச்சியார்.

### அல்லல் விளைவித்த பெருமானின் அணுக்கப் பொருட்களால் வாழ்விக்கச் சொல்லுதல்

தம்மிடம் அன்புடையோரிடத்தில் கண்ணனிருக்குமிடத்தில் கொண்டு செலுத்தச் சொல்லியும், இவள் படும் துன்பத்தைக் கண்டு அவர்களும் ஆற்றாதவர்களாயினர். நடை தளர்ந்தவர் களானார்கள். மேலும் இப்படிப் பதறி வார்த்தை சொல்லலாகாது. பெண்ணாய்ப் பிறந்தவர்களுக்கு இத்தனைப் பதற்றம்

கூடாது என்று பழமையான வார்த்தைகளைச் செல்லி நிற்கலாயினர். அவ்வாறு நின்றவர்களிடத்தே என்னுடைய ஆற்றாமைக்குத் தகாதபடி பயனற்ற வார்த்தைகளைப் பேசவேண்டாம். அவனுள்ளவிடத்து என்னைக்கொண்டு செலுத்த வில்லையா யினும், அவனது அணுக்கத் தொடர்புடைய பொருட்கள் ஏதாகிலும் ஒன்றைக் கொணர்ந்து, அதனாலே என்னை வாழ்விக்கப் பாருங்கள் என்கிறார் 'கண்ணனென்னுங் கருந்தெய்வம்' திருமொழியில்,

பெண்ணின் வருத்தமறியாத பெருமானரையில் பீதக
வண்ண வாடைகொண்டு என்னைவாட்டம் தணிய வீசீரே [நா.தி. 13-1]

நீலார் தண்ணந்துழாய் கொண்டு என்நெறிமென் குழல்மேல் சூட்டீரே
[நா.தி. 13-2]

அவன் மார்பணிந்த வனமாலை
வஞ்சியாதே தருமாகில் மார்வில் கொணர்ந்து புரட்டீரே [நா.தி. 13-3]

ஆராவமுதமனையான் அமுத வாயிலூறிய
நீர்தான் கொணர்ந்து புலராமே பருக்கியிளைப்பை நீக்கீரே [நா.தி. 13-4]

நெடுமாலூதி வருகின்ற
குழலின் துளைவாய் நீர்கொண்டு குளிரமுகத்துத் தடவீரே [நா.தி. 13-5]

போட்கன் மிதித்த அடிப்பாட்டில்
பொடித்தான் கொணர்ந்து பூசீர்கள்
போகாவுயிரென்னுடம்பையே (நா. தி. 13-6)

என்று எம்பெருமான் தொடர்பு கொண்ட பொருட்களைத் தமக்குச் சூட்டி அதனால் தம் ஆற்றாமையைத் தணிவிக்குமாறு தம்மருகிலிருந்தாரைக் கேட்டுக் கொள்கிறார். என்னுடைய

என்பதால், மாலுடைய அன்பு எனும்படி பகவதநுபவம் வழிந்து புறப்பட்ட தமிழாயிற்று இத்திருமொழி.

**கரியகோலத் தெம்பெருமான் கண்ணனைக் கண்டமை கூறல்**

'தையொரு திங்களுந்' திருமொழி தொடங்கி கண்ண னென்னும் திருமொழி வரையில் கோதை நாச்சியாருக்குக் காட்சி தரக் காலம் தாழ்த்தி, அதனால் அன்னையாருக்கு ஆற்றாமை மிக வெளிப்படுத்தினான் கண்ணன். ஆற்றாமை வெளிப்பாட்டி னால் ஆன்ற உண்மைகள் உள்ளடக்கிய அற்புதத் திருமொழி கள் அன்னைத் தமிழுக்குக் கிடைக்கப் பெற்றன. 'அவாவறச் சூழ்ந்தாயே' என்று நம்மாழ்வாருக்கு 'சூழ்விசும்பணி முகில்' திருமொழி வாயிலாகப் பேறு கிடைக்கப் பெற்றாற்போன்று, கோதை நாச்சியாருக்கு 'பட்டிமேய்ந்தோர் காரேறு' என்ற இத்திருமொழி மூலமாகக் கண்ணன் எம்பெருமான் காட்சி அளிக்கிறான். அதனை அவ்வாறே உரைக்காமல், கண்ணபிரா னைக் கண்டதுண்டோ? என்று வினவுவார் படியாகவும், ஆம். நன்றாகக் கண்டோமே என்று பதிலுரைப்பார் படியாகவும் இத்திருமொழியை அருளிச் செய்கின்றார் கோதை நாச்சியார்.

இத்திருமொழியில் ஒன்பது பாடல்களில் முன்னிரண்டு அடிகள் கண்டீரே என்ற வினா முடிவாகவும், பின்னிரண்டு அடிகள் கண்டோமே என்று வந்து விடையாகவும் அமைகின்றன. ஆண்டாள் ஒருவரே இவ்வாறு இரண்டு விதமாகப் பாசுரம் அருளிச் செய்வது சாத்யமாயெனில், எம்பெருமானின் அருளால் ஞானத்தில் தடையற்று இருக்கும்போது பொருந்தாத செயல் நிகழ இடமில்லை. மேலும் இவர் தந்தையார் 'என்னாதன் தேவிக்கு' திருமொழியில் ஆயர்மங்கையர் இருவர் இராமாவ

தார, கிருஷ்ணவாதாரக் கோலச் செயல்களை மாற்றி மாற்றி உரையாடிக் கொள்வதாக அமைத்துள்ளார். எனவே இறைவன் அருளாலே ஞானத்தில் ஊன்றி நின்ற இவர்களுக்கு ஒரே சமயத்தில் பல தசைகளை அநுபவிப்பது எளிதாக அமைகின்றது எனலாம்.

பட்டிமேய்ந்தோர் காரேறு பலதேவற்கோர் கீழ்க்கன்றாய்
இட்டீறிட்டு விளையாடி இங்கே போதக் கண்டீரே
இட்டீறான பசுக்களை யினிது மறித்து நீருட்டி
விட்டுக்கொண்டு விளையாட விருந்தாவனத்தே கண்டோமே

[நா. தி. 14-1]

என்று இறைவனது திருவடிகளை அநுபவிக்கப் பெற்ற பாங்கினை இத் திருமொழியில் அருளிச் செய்கின்றார் கோதை நாச்சியார்.

ஒண்தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு

[முதல்திரு.]

என்ற இறைவனது நெறிக்கு மாறுபட்டு, காமதேவனைப் பணிவது, ஆற்றாமை மிகுதியினால் இறைவனை வழியில்லா வழியாகிலும் அடையவேண்டும் என்ற கலக்கத்தின் மிகுதி யால், அவனுக்காகவே பிறநிகழ்த்தப் பெறுவதால் பொருந்தும்.

தான் பிறந்து வளர்ந்த ஊரில் பிற தெய்வத்திற்காகச் செய்த வேள்வியைப் பொறாது இயற்கையாகிய கோவர்த்தனகிரிக்குப் படைத்தவன். சிற்றில் என்று நாம் காமதேவனைப் பணிவதைப் பொறாது அருள் செய்வான் என்பதால் சிற்றில் சிதைத்தல் பதிகம் உருவாயிற்று.

இறைவனது செயல்கள் மாயைகள்; வியப்பிற்குரியவை மனிதர்களைப் போல கர்ம பலன் அடிப்படையானதன்று. எனவே கண்ணனின் லீலைகளில் பெண்களின் கண்கள்,

முலைகள், இடை ஆகியவற்றைக் கூறுவது, பெண்களாகிய சீவான்மாக்களின் ஞானம், பக்தி, வைராக்கியம் ஆகியவற்றைக் குறிக்கும். எனவே பனிநீராட்டுப் பதிகம், இறைவனைப் பற்றுகையில் சீவான்மாவின் ஞான, பக்தி, வைராக்கியங்களைக் கூறுமிடமேயாகும். அசேதனமாகிய கூடலின் காலில் விழுதல், மணிக்குயிலை மாதவனிடத்து தூது விடுத்தல், கண்ணனைக் கனவில் கண்டதைத் தோழிக்குரைத்தல், சங்கரையனைத் தோழியாக்கிக் கண்ணனின் வாய்ச் சுவையை வினவுதல், மேகத்தை மேக வண்ணனாம் வேங்கடக்கோனுக்கு விடு தூதாக அனுப்புதல், திருமாலிருஞ்சோலை மலை எம்பெருமானின் வண்ண வடிவழகை மலைப்பொருட்கள் காட்டித் தம்மை வஞ்சிப்பதாகக் கூறுதல், கார்ப் பொருட்களைக் கண்டு கலங்கியுரைத்தல் இவை, காமம் மிக்க கழிபடர் கிளவி என்பதன் பாற்படும்.

**காமம் மிக்க கழிபடர் கிளவியாவது**

காமம் - வேட்கை - மிகுதல் - பெருகுதல்; கழி - சிறத்தல - படர் - துயர்; கிளவி - சொல் வேட்கை மிக்குச் சிறப்பச் சிந்தித்துத் துயருற்றுச் சொல்லும் சொல் என்றவாறு, எம்பெருமான் மீது வேட்கை மிகவுற்றுச் சிறப்பச் சிந்தித்துச் சொல்லும் சொல்லாக கோதையார் மேற்கூறிய திருமொழிகளை அமைத்துள்ளார் எனலாம்.

நாச்சியார் திருமொழி வாயிலாகக் கோதை நாச்சியார் சீவான்மாவிற்கு உரிய வழி பிரபத்தி நெறியே, என்பதையும், இறைவனிடம் கொண்ட பக்தி பரபக்தியாக விளைந்து பரஜ்ஞானமாக முதிர்ந்து பரமபக்தியாகிற கனியாக விளையப் பெற்றது என்பது தெளிவாக்கப்படுகிறது.

பருந்தாட்களிற்றுக் கருள்செய்த பரமன் தன்னைப் பாரின்மேல்
விருந்தாவனத்தே கண்டமை விட்டு சித்தன் கோதை சொல்
மருந்தாமென்று தம் மனத்தே வைத்துக் கொண்டு வாழ்வார்கள்
பெருந்தாளுடை பிரானடிக்கீழ் பிரியாதென்றும் இருப்பாரே

[நா.தி.13-10]

என்று பூமியிலேயே கண்ணனைக் கண்ட காட்சிக்கு கைம் முதலாக இருப்பவர் பெரியாழ்வார் பெண்பிள்ளை. கஜேந்திராழ் வானுக்கு அருள்புரிந்த ஆதிமூலமான திருமாலை, விருந்தாவ னத்தே கண்டமையைக் கூறும் இத்திருமொழி, உடம்பொடு பிறந்த இவ்வுயிரனைத்தும், பிறவாப் பேரின்பத்தைப் பெற்றுக் கொண்டு பரமபதநாதனின் திருவடிகளின் கீழ்ப் பிரியாது அடிமை செய்யும் பேரின்ப நிலையை அடைவதற்கு மருந்தாக அமையும் என்பது தெளிவாகின்றது.

அன்னையார் கனவில் கண்ட மணத்தின் தொடர்பு, இப்பிறவிக்கு மட்டும் துணை புரிவதன்று. கோதையார் தம் கனவு நிலையிலும், தம்மையும் தம்மை ஆட்கொள்ளும் எம்பெருமானையும் எம்முறையில் அறிந்துள்ளார் என்பதை.

“இம்மைக்கும் ஏழேழ் பிறவிக்கும் பற்றாவான்
நம்மை உடையவன் நாராயணன் நம்பி
செம்மை உடைய திருக்கையால் தாள்பற்றி
அம்மி மிதிக்கக் கனாக் கண்டேன் தோழீ நான்”

[நா.தி. 6-8]

என்று இப்பாடலினால் அறிந்து கொள்ள முடிகிறது.



# நாச்சியாரது பிரபந்தங்களில் முப்பொருள் உண்மை அழகு

## முப்பொருள் உண்மை யாது?

சித், அசித், ஈசுவரன் என்பதே முப்பொருள் உண்மை யாகும்.

## சித் என்பதன் விளக்கம்

அறிவுக்கு ஆதாரமான பொருள் 'சித்' எனப்படும். ஜீவாத்மா, சேதனன் என்ற வேறு பெயர்களாலும் 'சித்' அழைக்கப்படுகின்றது.

## ஜீவாத்மாவிற்குரிய (சித்) இலக்கணங்கள்

ஜீவாத்மா அழிவற்றது என்பது ஆன்றோர் கருத்து. அப்படியானால் பிறப்பு, இறப்பு ஆகியவை ஏற்படுவது எவ்வாறு? என்ற ஐயம் எழக்கூடும். பிறப்பாவது - ஜீவாத்மாவுக்கு கர்மா காரணமாக ஏற்படக் கூடிய உடலின் தொடர்பால் நிகழ்கின்றது. இறப்பாவது - ஜீவாத்மாவுக்கும் உடலுக்கும் உள்ள தொடர்பு நீங்கப் பெறுவதால் உண்டாகிறது. மேலும் இந்தப் பிறப்பும் இறப்பும் உடலுக்கே உரியதன்றி ஜீவாத்மா விற்கு உரியதன்று.

## அநிலயன்

'மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்து' என்னும் படியாக, புண்ய பாபங்களுக்கேற்ப வெவ்வேறு உடலுள் புகுந்து கொண்டு தனக்கென்று ஓர் இருப்பிடமில்லாதது.

பரந்த தன்மை

ஜீவர்களின் எண்ணிக்கை, ஏற்கப்பட்ட உடலுக்கேற்ப தனித் தனியாக எண்ணற்ற அனந்தமாகும்.

அணுத்தன்மை

ஏற்கப்பட்ட உடல் யானையதாயினும், எறும்பதாயினும், ஜீவன் உருவம் ஒரே தன்மையானது. அணுவாக இருப்பினும் ஜீவன் அந்த [illegible]ல் முழுவதும் தன்அறிவால் பரந்து இருக்கக் [illegible]து.

காணமுடியாமை

ஜீவனின் உருவத்தை உடலில் அமைந்துள்ள ஊனக் கண்ணினால் பார்த்தல் என்பது இயலாதது.

அவயவமிலி

ஜீவனுக்கு கை, கால் போன்ற அவயங்கள் இல்லை. அவை ஜீவனால் ஏற்கப்பட்ட உடலுக்கு மட்டுமே அமையுமன்றி ஜீவனுக்கு அவயவமாகாதவை.

தானாகத் தோற்றும் தன்மை

விளக்கானது ஒளிவீச மற்றோர் விளக்கை நாடாதது போல, ஜீவாத்மாவும் தனக்குத் தானே ஒளிவீசிக் கொண்டிருக்கும் தன்மை வாய்ந்தது.

ஆனந்த மயமானது

ஜீவாத்மா தனக்குத் தானே சுகமுடையது. உறங்கும்போது ஆனந்தமாக உறங்கினேன் என்பதால் தனக்குத் தானே

சுகமுடையதாக அமைகின்றது. மோட்ச நிலையில் இது முழுவதுமாக வெளிப்பட்டிருக்கும்.

அறிவு மயமானது

ஜீவாத்மா அறிவு மயமானது. அறிவை குணமாகவும் உடையது. இவ்வறிவானது அவரவர் கருமத்திற்கேற்ப விரிந்தும், சுருங்கியும் இருக்கும். என்னுடைய அறிவு என்று அறியப்படும் இவ்வறிவு தர்மபூதஞானம் எனப்படும். இது ஆத்மாவோடு என்றும் இணைந்திருக்கக் கூடியது.

செயல்புரிபவன் செயலை அநுபவிப்பவன்

ஜீவாத்மா செயல்புரிபவனாகவும், அச்செயலை அநுபவிக்கக் கூடியனவாகவும் அமைகின்றது.

ஜீவாத்மா ஈசுவரனது அடிமை

உடலொடு இயங்கக் கூடிய ஜீவாத்மா தனது அனைத்துச் செயல்களிலும் உடையவனாகிய இறைவனுக்கு (ஈசுவரனுக்கு) அடிமைப்பட்டது.

சுதந்திரமின்மை

இறைவனது நினைவு மற்றும் ஆணைகளுக்கு ஏற்ப இயங்குவதேயன்றி, ஜீவாத்மா தனக்கென்று ஒரு சுதந்தரம் இல்லாதது.

வைக்க இருப்பாவது

ஜீவாத்மா தனக்கென்று ஒரு விருப்பம் இல்லாது, இறைவன் சந்தனம், மலர், தாம்பூலம் ஆகியவற்றை எவ்வாறு அவற்றின்

விருப்பமின்றி ஏற்றுக் கொள்கிறானோ அவ்வாறே ஜீவாத்மாவும், தன் விருப்பம் ஏதுமின்றி இறைவனது விருப்பத்திற்கு ஆட்பட்டது ஆகும்.

அசித்தற்குரிய இலக்கணங்கள்

அறிவற்றது. மாற்றமடைந்து கொண்டே இருக்கக்கூடியது. மூன்று விதமாக அமைவது.

மூன்று வகைகள் பரமபதம்

இறைவனின் விருப்பத்தாலே அழிவற்றதாகவும், விமான கோபுர மண்டபங்களையுடையதாகிய மேலுலகு என்று சொல்லப்படும் பரமபதம்.

லீலாவிபூதி

மாயங்கள் மாற்றங்கள் நிறைந்ததாக, ஸத்வ, ரஜஸ், தமஸ் குணங்களுக்கு ஆட்பட்டது. ஞானமாகிய பூரண அறிவை மறைத்து, விபரீத ஞானத்தை உண்டாக்கக் கூடியதுமான இந்நிலவுலகம்.

காலம் - அசித்தத்துவத்தின் ஒரு வகை

இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என மூன்று வகையாக அமைகின்றது.

அசித்தின் இரண்டாவது வகையாகிய லீலாவிபூதி எனப்படும். இது மேலும் எட்டு வகையாகப் பிரிக்கப்படுகிறது.

எட்டு வகை - 24 வகை

எட்டு வகை: 1.மூலப்ரகிருதி, 2.மஹான், 3.அஹங்காரம், 4.மனம், 5.ஐந்து அறிவுப் பொறிகள், 6.ஐந்து செயல் பொறிகள், 7.ஐந்து தன் மாத்திரைகள், 8.ஐந்து பூதங்கள் ஆகும்.

(தன் மாத்திரை - நடுவில் உள்ள நிலை (எ-டு) பாலிற்கும் தயிருக்கும் நடுவிலுள்ள நிலை.

24 வகை : 1. மூலப்ரகிருதி, 2. மஹான், 3.அஹங்காரம் 4-14. பதினொரு இந்திரியங்கள். 15-19. ஐந்து தன் மாத்திரைகள் 20-24. ஐந்து பூதங்கள்.

மூலப்ரகிருதி

இந்த மூலப்ரகிருதி மேலும் நான்கு வகையாகப் பிரிகின்றது. அவை ப்ரளய நிலை, ஸ்ருஷ்டியில் தனித்து இயங்கும் நிலை, ஜீவஸ்ரூபம் புரிந்த நிலை, கார்யத்தை உண்டு பண்ணும் நிலை ஆகும்.

மூலப்ரக்ருதியும் அதன் கார்யங்களும்

காரணமான மூலப்ரக்ருதியில் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்களும் ஸமமாயிருக்கும், மஹான், அஹங்காரம் முதலான அதன் கார்யங்களும் இக்குணங்கள் ஏற்றத்தாழ்வுடனிருக்கும்.

அண்டங்கள்

சூரியக்குடும்பம் அமைந்துள்ள பால்வழி அண்டத்தைப் போன்று, மேலும் பல அண்டங்களைக் கொண்ட அண்டத் தொகுதிகள் அமைந்துள்ளன.

படைப்புத் தொழிலோன் சிறப்பு

'உந்திமேல் நான்முகனைப் படைத்தான்'[1] என்ற நிலையில் ப்ரம்மா உண்டாக்கப்படுகிறார். ப்ரம்மாவுக்கு அந்தர்யாமியாய் உள்நின்று உலகைப் படைப்பது இறைவனின் விருப்பம்.

**ஈச்வரனின் (இறைவன்) - பெருமைகள்**

ஞான, ஆனந்த வடிவுடையவன். ஞானம், சக்தி ஆகிய கல்யாண குணங்களையுடையவன். அனைத்துலகையும் படைத்துக் காத்தளிப்பவனா யுள்ளவன். திவ்ய மங்கள விக்கிரக வடிவை யுடையவன். ஸ்ரீதேவி, பூதேவி, நீளா தேவியாரின் நாயகனாக இருப்பவன். உடையவன் உடைமையாக, பரம பதத்தையும், நிலவுலகத்தையும் அதீனமாகக் கொண்டவன்.

பிறர் துன்பம் கண்டவுடன் 'ஐயோ' என்று இரங்குபவன். தன்னிடத்தில் சரணாகதி செய்தவர்களிடத்திலே குற்றம் பாராதவன். பிறர் தஞ்சமல்லாதபோது தான் தஞ்சமாயும், தன்னையும் தன் உடைமையையும் வழங்குபவன்.

குற்றங்களைக் குணமாகக் கொள்பவன். கட்டவும் அடிக்கலாம்படி எளிமையானவன்.

அன்று ஈன்ற கன்றுக்குத் தாயிரங்கி, முன்னைய கன்றையும், புல்லிடுவோரையும், கொம்பாலும், குளம்பாலும் குத்துவது போல பெரியபிராட்டியார் மற்றும் பரமபதத்தில் அணுக்கத் தொண்டு புரியும் அனந்த, கருட, விச்வக்சேனர் முதலியோரையும் விட்டு புதிய சேதனனிடத்தில் அன்பு கொள்ளக் கூடியவன்.

1. திருமங்கையாழ்வார், பெரியதிருமொழி, (5-4-1).

அனைத்துலகுக்கும் காரணமானவன். படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்றும் எம்பெருமானின் நினைவினால் மட்டுமே நிகழக் கூடியவை. இம் முத்தொழிலுக்கும் எம்பெருமான் ஒருவனே, உபாதான, நிமித்த, ஸஹகாரி ஆகிய மூன்று காரணமாகவும் அமைகின்றான்.

பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சாவதாரம் என்ற ஐந்து நிலைகளையுடையவன். இவை ஈச்வரதத்வமாகிய நாராயணனுக்கேயுரிய பெருமைகள் ஆகும்.

இனி, கோதை வாய்த் தமிழாகிய திருப்பாவை மற்றும் நாச்சியார் திருமொழியில் மேற்கூறிய முப்பொருள் உண்மை எவ்வாறு அமைந்துள்ளது எனக் காண்போம்.

முப்பொருள் வடிவானவன் இறைவன்

உடல்வேறு, ஆன்மாவேறு என்றும், உயிர்கள் உடம்பை விட்டு, பரம்பொருளாகிய இறைவனோடு ஒன்றும் என்றும், சொல்லக் கூடிய துன்பத்தையெல்லாம் தவிர்த்து, உயிரை உடையவன் நாராயணன். சித்து, அசித், ஈசுவரன் ஆகிய முப் பொருள் வடிவானவன் இறைவன் என்பதை விளக்குகிறது (திருப்.1).

உலகில் வாழக் கூடியவர் யார்?

இறைவனின் குணங்களை அறிபவன் சித், அத்தகைய குணங்களை அறிய இயலாதவன் அசித், இறைவனாகிய பரம் பொருளை உணராதவனுக்கு, பிறவிப்பெருங்கடலின் தொடர்பும் பிறவியும் கழிவதில்லை. பரம்பொருளின் குணங்களை அறிந்தவர்களாகிய சித்துக்களே பிறவியென்னும் பெருங்கடல்

வற்றிப் பரமபதமாகிய மேலுலகம் சென்று நித்யவாழ்வு வாழ் பவர்களாகிறார்கள். இவர்களே "வையத்து வாழ்வீர்காள்" எனப்படுகின்றனர் (திருப்.2.)

பரம்பொருளை யுணர்ந்தோர்க்கு ஏற்படும் நன்மைகள்

இறைவனையுணர்ந்தவர்களுக்கு ஏற்படும் நன்மைகள் அவர்களளவுக்கு மட்டுமின்றி அவர்கள் வாழும் நாடும், நாடு தழுவிய மற்றெல்லாவிடத்தும் பரவிச் சென்று நன்மையை உண்டாக்கும்.

தீங்கின்றி நாடெல்லாந் திங்கள் மும்மாரி பெய்து
ஓங்கு பெருஞ் செந்நெலூடு கயலுகள
பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்ப
தேங்காதே புக்கிருந்து சீர்த்தமுலை பற்றி
வாங்க குடம் நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்தேலோரெம்பாவாய் [திருப்.3]

சீவான்மாவுக்குக் கர்மமடியாக அமைவது உடல் என்று தெளியக்கூடிய அறிவு முதல் மழையாகின்றது. பரம்பொரு ளாகிய இறைவனுக்கும் தனக்கும் உள்ள ஒன்பது வகையான உறவுகளை உணர்ந்து இறைவனுக்கு அடிமைப்பட்டிருத்தலே வழி என்பது அறிந்து கொள்ளும் அறிவு இரண்டாவது மழையா கின்றது.

பரம்பொருளின் அருட்கண் நோக்கு காரணமாக, கர்மம் அடிப்படையில் தோன்றும், உடலில் பொருந்திய சீவான்மா இறைவனுக்கு ஆட்பட்டிருத்தலோடு, இறைவனுகந்த, இறைப் பணி, இறையடியார் பணி ஆகியவற்றில் ஈடுபடுவதே தாம் பிறப்

பெடுத்தற் கேற்ற பயன் என்று உணரும் உணர்வு மூன்றாவது மழை.

### பரம்பொருளையுணர்வதற்கு அடிப்படை

பரம்பொருளையுணர்ந்து கொள்வதற்கு முன்னர், தமக்கு முன்பே இறைவனின் கல்யாண குணங்களை அறிந்து கொண்டு இறைப்பணி, இறையடியார் பணியில் ஈடுபட்டுள்ள சித்துக்க ளோடு தொடர்பு கொள்ள வேண்டியது அவசியமாகிறது. சித்துக் களிடம் அன்பு பூண்டு அவர்களிடத்து உண்மை அறிவைத் தெரிந்து கொள்வதே பரம்பொருளையுணர்வதற்கு அடிப்படை யாக அமைகின்றது.

### தீவினைகள் நீங்க வழி

சீவான்மாவானது கர்மத்தொடர்பால் உண்டான உடம் போடு கூடித் தெரிந்தும், தெரியாதும் பல தீவினைகளுக்கு ஆளாக நேரிடுகின்றது. அத்தகைய தீவினை நீங்க, யான், என்று சொல்லக் கூடிய அஹங்கார, மமகாரங்களை நீக்கி, நாராயணனின் நாமங்களை வாயினால் பாடி, மனத்தினாற் சிந்திக்க வேண்டும் என்ற நியதியை கோதை நாச்சியார் வகுத்தளித்துள்ளார் (திருப்.5).

### உன்னடியார்க் கடிமை

பரம்பொருளையுணர்ந்து கொண்ட சித்து, அத்தோடு நில்லாது, இறைவனடியார்களிடத்து, அன்பு கொண்டு அவர்களிடத்தும் அடிமைகொண்டு இயங்கும் இயல்புடையது (திருப்.6).

உற்றதும் உன்னடியார்க் கடிமை மற்றெல்லாம் பேசிலும்
நின்திருவெட்டெழுத்தும் கற்று[2]

என்று இதனாற் உறுதிப்படுத்தப்படுகிறது.

நாராயணன் யார்?

உடல்மிசை உயிரெனக் கரந்து எங்கும் பரந்துளன்[3]

என்னும்படி, அனைத்துப் பொருள்களிலும் உள்ளும் புறமும் வியாபித்திருப்பவனே நாராயணன்.

நார-அனைத்துப் பொருட்கள். அயநன்-ஆபத்துக்கு ஆதாரமாக இருப்பவன், (அ) அவற்றை இருப்பிடமாகக்கொண்டவன்

மூர்த்தி என்பதன் விளக்கம்

திவ்ய, மங்கள விக்ரஹத்தையுடையவன்.

திருக்கையிலே பிடித்த திவ்யாயுதங்களும், வைத்து
அஞ்சல் என்ற கையும், கவித்த முடியும் முகமும்
முறுவலும் ஆஸந பத்மத்திலே அழுத்தின
திருவடிகளுமாய் நிற்கிற நிலையே நமக்குத் தஞ்சம்[4]

கேசவன் என்ற சொல்லின் பொருள்

கேசி என்பது பெயருடைய குதிரை வடிவான அசுரனை வென்றவன் என்பது பொருளும், அழகிய திருக்குழல்கற்றையை உடையவன்; பிரமனுக்கும் ஈசனுக்கும் இறைவன் என்னும் பொருள்களும் உண்டு.

2. திருமங்கையாழ்வார், பெரியதிருமொழி, (8-10-3).
3. நம்மாழ்வார், திருவாய்மொழி, (1-1-7).
4. பிள்ளை லோகாசார்யார், முமுட்சுப்படி, சூ.(142).

கீழ்வானமும் மேல்வானமும்

மேல்வானம் - பரமபதமாகிய நித்யவிபூதி

கீழ்வானம் - கர்மங்களுக்கு ஆட்படச் செய்யும் நிலவுலகம் ஆகிய லீலாவிபூதி

எருமை - என்பதாவது நிலவுலகமாகிய லீலாவிபூதியில் தமோகுணம் நிறையப் பெற்று, பிறவிப் பெருங்கடலில் அமிழ்ந்து கிடப்பவர்களாகிய ஸம்ஸாரிகள்.

பிள்ளைகள் என்று பரம்பொருளையுணர்ந்தவர்களாகிய வைஷ்ணவர்களைக் குறிப்பிடுகின்றார். இவர்கள் செய்யத் தகாதவைகளைப் பாபமென்று தவிர்த்தும், செய்யத் தகுந்தவைகளை, அதிகாரி உகப்புக்காகச் செய்யக் கூடியவர்கள்.

உள்ள பிள்ளைகள் என்று ஸர்வேசுவரனாகிய நாராயணனை உபாயமாகப் பற்றினவரையும், செய்யத் தகுந்த செயல்களையும், உலகத்தார் பின்பற்றி நடப்பதற்கு அவசியம் என்றெண்ணிச் செய்பவர்களைக் குறிப்பிடுகிறார்.

மிக்குள்ள பிள்ளைகள் என்று செய்யத் தகாதனவைகளை எவ்வித ருசியுமின்றி தவிர்த்தும், செய்வனவற்றையும் இறைவன் உகப்புக்கே வழி என்று செய்கின்றவர்களை குறிப்பிடுகிறார் கோதைநாச்சியார் (திருப்.8).

சீவான்மாவும் அதனை மேம்படுத்துபவரும்

மாடம் : புறஞ்சுவரோட்டை மாடம் என்று சொல்லக் கூடிய உடல்.

மணிமாடம் : ஒன்பது வித தொடர்புகளையுடைய ஆன்மா.

தூமணிமாடம் : ஒன்பது வித தொடர்பையும் ஆன்மா விற்கு அறிவிக்கக் கூடியவராகிய ஆசார்யன்.

மாமாயன்

இரும்பையும் பொன்னாக்கும் ரசவாதிகள் போலே, பிறவிப் பெருங்கடலுள் அழுந்தும் நித்ய ஸம்ஸாரிகளையும் அநந்தன், கருடன், விச்வக்சேனர் போன்ற நித்யஸூரிகள் வரிசையில் சேர்ப்பிக்க வல்லவன்.

மாதவன்

மந்த்ர வஸ்துவான திருமகளையுடையவன்

வைகுந்தன்

**தேமாரும் கமலத் திருமாமகள் கொழுநன் தானே குருவாகி[5]**

என்று தானே சிஷ்யனும் ஆசார்யனுமாய் அவதரித்தவன் என்பதைக் காட்டுகிறார் ஆண்டாள் அன்னையார். (திருப். 9).

பெருந்துயிலாவது எது?

பிறவி, ஸம்ஸாரம் ஆகியவற்றில் சிறிதேனும் தொடர்பும் நினைவும் தோன்றாது, இமைப்பொழுதும் இறைவனது அநுபவமே குடியிருப்பாய் இருக்கும் இருப்பே பெருந்துயில் என்பதாகும்(திருப்.10)

பரம்பொருளையுணர்ந்தோர் செய்ய வேண்டிய கடமை

அன்றாடம் செய்ய வேண்டும் என இறைவனால் தனக்கு நியமிக்கப்பட்ட கர்மங்களை, தனது குலம், தொழில், வருவாய் ஆகியவற்றிற்கேற்ப, இறைவனால் தனக்கு விதிக்கப்பட்ட பணி

5. மணவாளமாமுனிகள் உ.ப. பா. 61

இது, இதன் நன்மையும் தீமையும் அவனுக்கே என்ற நினைவோடு செயலாற்றுவதே பரம்பொருளையுணர்ந்தோர் கடமையாகும்.(திருப்.11)

இறைபணியில் ஈடுபட்டோருக்கான விதி விலக்கு

இறைவனது உகப்புக்கான பணியிலேயே ஈடுபட்டு அல்லும் பகலும் கடமையாற்றுவோருக்கு, இறைவன் ஆணையாக அமைந்த அவரது சுயபலனுக்கான காரியங்களிலிருந்து தவறுவதால் அவரது குணத்துக்கு ஒரு குற்றம் நேராது (திருப். 12).

இறைவனது குணாநுபவம் எப்போதும் கிடைக்கப் பெறும்?

இறைவனது குணத்தை அநுபவிப்பதில் ருசி ஏற்படாதபோது இறைப்பணியிலும் ருசி ஏற்படாது. பிறவிப் பெருங்கடலின் பற்றற்று, இறைவனது குணாநுபவத்தில் ஆழங்கால் பட வேண்டும். இவ்வாறு ஆழங்காற்பட்டபோது, இறைவனது குணாநுபவம், கிடைக்கப் பெற்று, அதனால் கிடைக்கப் பெறக் கூடிய பிறவாப் பேரின்பத்தையும் அடைய முடியும் (திருப். 13)

பரம ஏகாந்தியின் நிலை

செய்யத் தகுந்த செயல்களையும், இறைவனுகப்புக்காகவும், இறையடியார் உகப்புக்காகவும், செய்வது மட்டுமின்றி, எவரது விருப்பு, வெறுப்பும் காரணமில்லாது, தானே மேலிட்டு ஏறிட்டுக் கொண்டு கைங்கர்யத்தைச் செய்வதே பரமைகாந்தியின் நிலை (திருப்.14)

இறைவனது குணாநுபவத்திற்கு கோதை நாச்சியார் காட்டும் நெறி

பிறருடைய துன்பம் தனது என எண்ணும் பெ:ரியோனாக (வைஷ்ணவ ஜனதோ) பிறவியாகிற பெருங்கடலின் வாசனை யால் உண்டாகிற இன்பதுன்பங்களில் துவளாது, ஆன்மா உய்வடைய வேண்டும் என்ற நினைவோடு, திருமகள் பரிந்துரை செய்ய, அகில உலகத்துக்கும் காரணனான, அனைத்துப் பொருள்களிலும் எள்ளுக்குள் எண்ணையே போல், அந்தர்யாமி யாய் விளங்குபவன். அனைவராலும் ஆராதிக்கத் தகுந்தவ னான, ஸ்ரீமந்நாராயணனோடு, என்ற நிலையை உணர்ந்து கொண்டு, முந்துறமுன்னம் பரம்பொருளையுணர்ந்தவராகிய ஆசார்யன் காட்டக் கண்டு அநுபவித்தலே இறைவனது குணாநு பவம் கிடைக்கப் பெறும் வழி எனக் கோதை நாச்சியார் அருளிச் செய்கிறார்.

திருப்பாவையில் அறம், பொருள், இன்பம், வீடு, அறம்

எக்காலத்தும் எப்போதும் திருவனந்தாழ்வான் போலே அடிமை செய்ய வேண்டுவது (திருப்.26).

சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம்
நின்றால் மரவடியாம் நீள்கடலுள் – என்றும்
புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்
அணையாம் திருமாற்கு அரவு[6]

பொருள்

ஞானம் இல்லாத போது அநுஷ்டானமாகிய நடைமுறை சித்தியாது. நடைமுறை இல்லாதபோது பேறு கிடைக்கப் பெறாது.

6. பொய்கையாழ்வார், முதல் திருவந்தாதி, பா.53

பேற்றுக் குண்டான நான்குவித வழிகளில் உண்மைப் பொருளை அறிய வேண்டுவது அவசியமாகின்றது (திருப்.27).

இன்பம்

பறையாகிய இறைபணி மற்றும் இறையடியார் பணியே வேண்டுவது என்று இன்பம் பேசப்படுகிறது (திருப். 28).

வீடு

**உற்றோமேயாவோம் உனக்கே நாமாட் செய்வோம்**

என்று ஒழிக்கவொழியாத உறவு, வீடு என்பதாகப் பேசப்படுகிறது (திருப்.29).

நாச்சியார் திருமொழியில் முப்பொருள் உண்மை முக்காலத்திலும் சிறப்பு எது?

'செங்கண்மால் எங்கள் மால் என்றநாள் எல்லா நாளாகும்' என்பதற்கேற்ப இறைவனுக்கு நம்மிடம் அருள்நோக்கு உண்டு என்று அறியும் நாள் என்று கிடைக்கப் பெற்றால் அந்நாளே இறப்பு, நிகழ்வு, எதிர்எ

சீவான்மாவின் அன்பிற்கு

இறைவனது திருபே

பேராற்றல், நீலமணிவண்ணம் ஆகியவையே சீவான்மா பரம் பொருள் மீது பற்றுக் கொள்ளக் காரணங்களாகின்றன. தன்னை அண்டிய சீவான்மாவின் விரோதங்களைப் போக்கியருளுபவன் எம்பெருமான். எனவே இறைவனையே மனத்தில் தேக்கி, வைத்துக் கொண்ட பெரியாழ்வார் திருமகள் கோதை நாச்சியார் தாமும்,

இறைவனையே தம் மனத்திற்கொண்டு அவனைப் பெறுவதற்கான வழிமுறைகளில் ஈடுபடுகிறார்.

சேதனுக்காக இரங்கும் நிலை

குழந்தைக்கு நோய் உண்டானால், அதற்காகத் தான் மருந்துண்ணும் தாயைப்போல், நர நாராயணனாகத் தானே அவதரித்து, இந்நிலவுலகில் ஆசாரிய மாணாக்க நிலையை உணர்த்திக் காட்டிய நிலையே சேதனுக்காக இரங்கும் நிலையாகும்.

நாமமாயிரமேத்த நின்ற நாராயணா நரனே யுன்னை[7]

என்று இன்ப துன்பங்கள் நிலவாத திருமாமணி மண்டபமாகிய பரமபதத்தில் நித்யஸூரிகள் துதிக்க, இரண்டுலகங்களுக்கும் நாதன் சேதனன் பொருட்டு அவதரித்தான் என்பதையும் காட்டுகிறது கோதை நாச்சியாரது திருமொழி.

இறைவனிடத்தில் அன்பு கொண்டு சீவான்மாவின் நிலை

காற்றைப் பிடித்து ஓரிடத்தில் அடைத்து வைக்க இயலாத தைப் போல பரம்பொருளிடத்து அன்பு கொண்ட சீவான்மாவை யும், ஓரிடத்தில் நிலைப்படுத்த இயலாது, இறைவன் உள்ளவிடத் தும், அவன் திருநாமம் நிலவுமிடத்தும் அது உழன்று கொண்டே இருக்கும்.

இறைவனருள் கிடைக்கப் பெறாமைக்குக் காரணம்

எவ்வித பிரதியுபகாரமும் எண்ணாது அருள்பொழியும் இறைவனருள் ஒரு சேதனனுக்குக் கிடைக்கப் பெறவில்லை

7. ஆண்டாள், நாச்சியார் திருமொழி, (2-1).

என்றால், அதற்குக் காரணம், அச்சேதனனுக்குக் கர்மங்களடி யாக வரப்பெற்ற பாவங்களேயாகும்.

விரைவில் இறைவனருளை அளிக்கவல்லது எது?

தோழியும் நானும் தொழுதோம்
துகிலைப் பணித் தருளாயே[8]

என்று இரண்டு கைகளையும் இணைத்து என்னால் ஆவது ஒன்றும் இல்லை. உனது அடிகளே சரணம் என்று பொருள் படும்படியாகக் கும்பிடும் செயலே விரைவில் இறைவனருளை அளிக்கவல்லது.

ஊழிக் காலத்தும் உதவிபுரிபவன்

பிரளயம் உண்டான காலத்தில் உயிர்கள் யாவற்றையும் தன் வயிற்றில் அடக்கிக் கொண்டு, அவற்றுக்குச் செய்ய வேண்டுவன வற்றிற்காகச் சிந்தை புரிந்த பேரன்பினை உடையவன் கண்ணன் எம்பெருமான்.

**மாமிமார் மக்கள் என்று ஆண்டாள் காட்டும் உறவு**

மாமிமார் மக்கள் என்று தான் எம்பெருமானுடன் கொள்ள விரும்பும் உறவைக் காட்டுகிறார் என்றாலும், ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவினிடம் ஏற்பட வேண்டய ஆராத காதலையே இவ்விடத்துக் குறிப்பாக உணர்த்துகிறார். பெண்ணாய்ப் பிறந்து சீவான்மாபடும் அல்லலை ஆண்டாள் காட்டினாற் போலே, ஆழ்வார்களாற் காட்டுவது என்பது இயலாது.

8. நாச்சியார் திருவாய்மொழி (3-1)

**சீவான்மா பரமசேதனனான இறைவனைப் பெறாமையால் கலக்கம் மிகுந்து செய்யும் செயல்கள்**

பரம சேதனனான எம்பெருமானைப் பெறுவதற்காக, அசேதனமான கூடலின் காலில் விழுந்தாவது, அவனைப் பெற வேண்டும் என்ற கலக்கம் மீதூர்ந்து கூடலிழைக்கிறார் கோதை நாச்சியார்.

**நித்யாநுபவம் பெறுவோர் யார்?**

பிரிவினால் கலக்க மேற்படாமல் வைகுண்டத்தில் இமைப் பொழுதும் பிரியாது அடிமை கொள்ளக் கூடிய நித்யஸூரிகளே நித்யாநுபவம் பெறுவோர். அவரே தெள்ளியார் எனப்படுவர்.

**இங்குள்ளார் பெற இறங்கி வருபவன்**

பரம்பொருள் நித்ய அடிமை செய்யும் நித்யஸூரிகள் கிடைக்கப் பெற்றாலும், அதனில் விருப்பம் கொள்ளாமல், இந்நிலவுலகில் உள்ளாரும் பெற வேண்டுமென்று, அருள்புரிந்து திருமாலிருஞ் சோலையளவு வந்து நின்று, தனது அநுபவத்தை இழந்து கிடக்கும் சம்சாரிகளும் அநுபவிக்கும் பொருட்டு இறங்கி வருபவன்.

**வாட்டமின்றி மகிழ்ந்துறை வாமனன்**

'உவந்த வுள்ளத்தனாய் உலகமளந்து அண்டமுற' என்கிறாற் போல இவ்வுலகிலுள்ள அனைத்துயிர்களும் உய்வ டையுமே என்று மகிழ்ந்த திருவுள்ளத்தையுடையவனாய் உலகி லுள்ள அனைத்துப் பொருட்களின் மீதும் தன் திருவடி பட உலக மளந்து, வாமனனானவன் திருவிக்ரமனாக வளர்ந்தருளினான்.

### ஆவலன்புடையார் யார்?

ஆவலன்புடையார் என்பது ஆவல் உடையார், அன்புடையார் எனப்பொருள் தரும்.

### ஆவலுடையார்

இறைவனின் குணங்களை அறிந்து கொண்டும் அவனைப் பெறும் ஆவலினால், நோன்பு நோற்பது, காமனை வணங்குவது, சிற்றலிழைப்பது, பனி நீராடுவவது, கூடலிழைப்பது போன்ற செயல்களில் ஈடுபடும் ஆண்டாளைப் போல்வார் ஆவலுடையார்.

### அன்புடையார்

இறைவன் மீது பரிவு மேலிட்டு இவனுக்கு என் வருமோ? என்றஞ்சிப் பல்லாண்டு பாடும் பெரியாழ்வாரைப் போன்றவர் அன்புடையார் எனப்படுவர்.

### கூடலிழைப்பது ஆன்ம சொரூபத்திற்கு முரணா?

பத்துடை அடியவர்க் கெளியனான கண்ணனை அடைவதற்குக் கூடலிழைப்பது என்ற செயலைச் செய்வது பாவம்.

ஒண்தாமரையாள் கேள்வ னொருவனையே நோக்குமுணர்வு[9]

என்ற வைணவ அநுஷ்டானத்தில் நிற்கும் அடியார்களுக்கு அவனைப் பெறக் கூடலிழைப்பது ஆன்மசொரூபத்திற்கு முரணானது என்பது 'தெள்ளியார்' திருமொழியால் வெளிப்படுகிறது.

9. பொய்கையாழ்வார், முதல் திருவந்தாதி, பா (67)

## கடலினை நீங்கப் பெறும் தோணி எது?

எம்பெருமானைப் பிரிந்து பிறவிப் பெருங்கடலுள் ஆழ்ந்து கிடப்போர்க்குத் துக்கம் நீங்க, பிறவாப் பேரின்பம் பெறுவதற் கேற்ற தோணி வைகுந்தனது அடிமலர்களே என்பதைக் காட்டு கிறார் கோதை நாச்சியார்.

## ஆற்றாமை கரைபுரண்டு வெளிப்படும் திருமொழிகளின் நோக்கம்

இறைவனுக்கே உரியதான ஆத்மா அவனுடன் கூடுவதற்கு விரும்புவதும், இறைவனும் இந்த ஆத்மாவின் மீது அதிகமாகப் பிரேமம் கொண்டு, பரமபக்தியை உண்டாக்கி, அந்த ஆத்மா வைத் தன்னுடன் சேர்த்துக் கொள்வான் என்பதே இத்திருமொழி கள் வெளிப்படுவதன் நோக்கமாகும்.

## சீவான்மா பரம்பொருளை அடைவதும் அவனருளே

சீவான்மா ஆர்வமுற்று பரம்பொருளை அடையத் துடிக்கும் போது, அந்த ஆன்மாவை ஆட்படுத்திக் கொள்வதற்கு உரிய தருணத்தை அமைத்துக் கொள்வதும், இறைவனது ஆணைக்கு ஆட்பட்டதே ஆகும்.

நாளை வதுவை மணமென்று நாளிட்டு[10]

என்பதால் இக்கருத்து புலப்படுத்தப்படுகிறது.

## பூப்புனை கண்ணிப் புனிதன்

சீவான்மாவாகிய கோதை நாச்சியார் பேரொப்பனையோடு பேற்றுக்காகக் காத்திருக்க, இறைவனும் ஒரு தனிமாலையை

10. ஆண்டாள், நாச்சியார் திருமொழி (6-2)

அணிந்து கொண்டு, கையும், பவித்ரமுமாய், உடையனாய் ஒதுக்கிக் கொண்டு புனிதனாய், ஒருவரும் தன்மேல் படாதவாறு, ஆசாரத்தில் குறைவு நேராது வந்தடைந்தான். ஆசார சீலராகிய பெரியாழ்வாரின் மகள், ஆசாரத்தில் குறைவு நேர்ந்தால் கிடைக்கப் பெற்றாள் என்று எண்ணி இவ்வாறு வந்தான்.

## இறைவன் சேதனனைக் கைக்கொள்ளும் முறை

இறைவனது உடைமையை உயிர்கள் தன்னது என்று எண்ணும் போது, அவர்களிடம் உள்ள தன்னது, என்ற எண்ணத்தை அழியச் செய்து கைக்கொள்ள வல்லவன்.

மைத்துனன் நம்பி மதுசூதன் வந்தென்னைக்
கைத்தலம் பற்றிக் கனாக் கண்டேன் தோழீ! நான்[11]

அவனன்றோ வந்து என் கைப்பிடிக்கை முறை என்றிருப்பவர் கோதை நாச்சியார்.

## இப்பிறப்பிற்கும் மற்றும் பல பிறப்பிற்கும் துணை

இறைவனது அநுபவம் மாறாதேயிருக்குமானால் பல பிறப்புக்கள் பிறந்தாவது அநுபவிக்கலாம் ‘உன்றன்னோடுற்றோ மேயாவோம்’ என்று திருப்பாவையில் கூறுகிறார்.

யாவருக்கும் இறைவனாக இருந்து தனது கல்யாண குணங்களால் பூர்த்தியடைபவன்.

‘செம்மையுடைய திருக்கையால் தாள் பற்றி’ என்று இறை வன் தன்னை அடைந்தவர்கள் காலைப் பிடிக்க வேண்டுமாயி னும் சிறிதும் தயங்காதவன் என்பது குறிப்பாக உணர்த்தப்படுகிறது.

11. மேலது (6-6)

**சீவான்மாவின் பிறப்பு, வளர்தல், நிலைநிற்றல்**

நான் இறைவனுக்கே உரியவன், எனக்கு உபாயம், அவனுக்கே நான் எல்லா அடிமைகளும் செய்ய வேண்டும் என்பது பிறப்பு நிலை. திருமகளோடு கூடிய இறைவனே உபாயம் என்பதை உறுதியாகப் பற்றி இருத்தல் வளர்தல் நிலை.

திருமகளும் எம்பெருமானும் கூடிய சேர்த்தியிலே எல்லா விதமான அடிமைகளும் செய்ய வேண்டும் நிலையில் நிற்றல்.

இதனைக் குறிப்பாகக் கோதை நாச்சியார்.

கடலிற் பிறந்து கருதாது பஞ்சசனன்
உடலில் வளர்ந்து போய் ஊழியான் கைத்தலத்
திடரில் குடியேறித் தீயவசுரர்
நடலைப் படமுழங்குந் தோற்றத் தாய் நற்சங்கே[12]

என்று சங்கின் பிறப்பு, வளர்ப்பு குடியேற்றம் வாயிலாகக் குறிப்பிடுகிறார்.

**பகவதநுபவம் பெற்றோர் பெருமை**

எம்பெருமானைத் தனித்திருந்து அநுபவிப்பது என்பது பகவதநுபவம் பெற்றோர்களது செயலன்று.

கூடியிருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்[13]

ஆனால் சங்காழ்வான் தனித்திருந்து கொண்டு எம்பெருமானின் வாயமுதத்தைப் பருகிக் கொண்டும் உறங்குவதும் அவன்

12. ஆண்டாள், நாச்சியார் திருமொழி (7-2)
13. ஆண்டாள், திருப்பாவை, பா (27)

கைத்தல்மாகவும் அநுபவிக்கிறான் என்று குறிப்பிடுவதன் மூலம் பகவதநுபவம் பெற்றோர் பெருமையை உறுதிப்படுத்துகிறார்.

### தன்னை யழிய மாறியும் அருள் செய்பவன்

தந்தையே பகைவனாக மாறிய இளஞ்சிறுவன் பிரகலாதனுக்காக மனித வடிவும் சிங்க வடிவுமாகத் தோன்றியருள் செய்தவன். இவ்வாறு தனது மேன்மை, நலம் ஒன்றையும் மதியாமலும், அடைந்தாரைக் காப்பவன் என்பது விளக்கப்படுகிறது.

**ஊன்கொண்ட வள்ளுகிரால் இரணியனை உடலிடந்தான்**[14]

### திருவழகிற்குத் தோற்றல்

எம்பெருமான் சீவான்மாவைத் துன்பப்பட வைத்தானானாலும், சீவான்மாவை கைவிடவொண்ணாதவாறு, சுந்தரத்தோள் அழகினையுடையவன் - இந்தத் தோளழகு இறைவன் உயிர்களாகிய நம்மைத் தப்பாமல் அகப்படுத்திக் கொள்ளப்பார்க்கும் சூழ்ச்சி செய்யவல்லது. அவன் நம்மை அண்டவிடானாகிலும், திருவழகிற்குத் தோற்று ஓடுவது என்பது இயலாத ஒன்றாகும்.

### உயிருள்ளன, உயிரல்லாதன அனைத்தும் அவனடிமை

**பைம்பொழில் வாழ்குயில்காள்! மயில்காள்! ஒண்கருவிளைகாள்**
**வம்பக் களங்கனிகாள்! வண்ணப் பூவை நறுமலர்காள்!**
**ஐம்பெரும் பாதகர்காள்! அணிமாலிருஞ் சோலைநின்ற**
**எம்பெருமானுடைய நிறம் உங்களுக்கென் செய்வதே**[15]

14. ஆண்டாள், நாச்சியார் திருமொழி (8-5)
15. மேலது (9-4)

உயிருள்ளனவாகிய கோதை நாச்சியார், குயில்கள், மயில்கள் மற்றுமுள்ள யாவும் அவனுக்குட்பட்டவை. அப்படியிருக்க, நாம் அனைவரும் ஒருமனப்பட்டுப் பிழைக்க வேண்டியதிருக்க, நீங்களும் பாதகஞ் செய்யலாமா? என்று கோதையார் வினவுகின்றார். இதன் மூலம் உயிருள்ள பொருளாயினும், உயிரற்ற பொருளாயினும் அவையனைத்தும் எம்பெருமானுக்கு உட்பட்டவையே என்ற கருத்தை அறுதியிடுகிறார்.

## அடிமை கொள்வது மிகப் பழமையானது

தனது அடியார்களுக்கு உகந்து, கொடுப்பது அவனது திருவடி களில் அடிமை செய்வதேயாகும். இந்த அடிமையானது மிகப்பழமையானது. இத்தகைய அடிமையினையே எம்பெருமானும் மிகவும் உகந்தவனாகின்றான்.

வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்[16]

என்று நம்மாழ்வார் ஆசைப்பட்டாற் போன்றே கோதை நாச்சியாரும்

**இன்று வந்தித்தனையு மமுது செய்திடப் பெறில் – நான்**
**ஒன்று நூறாயிரமாகக் கொடுத்துப் பின்னும் ஆளுஞ் செய்வன்**[17]

என்று அருளிச் செய்கின்றார். இதன் மூலம் அடிமை செய்வதே பலன் என்பதை சேதனருக்கு உணர்த்துகின்றார்.

## நெஞ்சும் அவனுடைமை

சீவான்மாவிற்கு அவனது உடைமையான உலகம் மட்டும் விரோதமானதல்ல. சீவான்மாவின் உடைமை என்று எண்ணக்

16. நம்மாழ்வார், திருவாய்மொழி (3-3-1)
17. ஆண்டாள், நாச்சியார் திருமெழி (9-7)

கூடிய நெஞ்சமும் பரம்பொருள் அணிந்துள்ள திருத்துழாய் (துளசி) மாலையில் மயங்கி நின்று விரோதியாகிறது. எனவே சீவான்மாவிற்கு உலகம் உடைமையன்று. தான் தனது என்று எண்ணக்கூடிய நெஞ்சும் அதன் உடைமையன்று என்பது கோதை நாச்சியாரது திருமொழி மூலம் புலப்படுத்தப்படுகிறது.

### திருவரங்கத்துப் பாம்பணையில் உறங்குவது எதற்காக?

துக்கமடைந்தாரது துக்கத்தைப் போக்கி அருள் செய்கைக் காகவே பாம்புப் படுக்கையாக அமைந்துள்ள அனந்தாழ்வான் மீது கண்வளருகிறார்.

நல்லார்கள் வாழும் நளிரரங்க நாகணையான்[18]

### நித்யர்க்கும் முக்தர்க்கும் பேறளிப்பவன்

பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும்
அங்காதும் சோராமே ஆள்கின்ற எம்பெருமான்[19]

வைகுண்டத்திலே நித்யவடிமை செய்யும் நித்யர்க்கும், முக்தர்க்கும் தன்னோடு எப்போதும் இருக்கும் இருப்பாகிய, பேறளித்துக் காப்பவன் எம்பெருமான். எனக்குப் பிரானாகியி ருந்து என்னை இங்குள்ளாரோடும், அங்குள்ளாரோடும் தொடர் புபடுத்துபவன்.

### கண்வளர்ந்தருளுவதன் காரணம்

சீவான்மாக்களை 'எனக்காட்பட்டு உய்ந்து போவீர்' என்று தாமே இரந்து சென்று பெறும் பொருட்டே திருவரங்கச் செல்வ

18. நாச்சியார் திருமொழி (11-5)
19. மேலது (11-3)

னாக கண்வளர்ந்தருளுகிறார். "ஆத்மாக்களை தனக்காக்கிக் கொள்ள வேண்டும் என்பதே இங்கு உறங்குவதன் நோக்கம்".

மச்சணி மாட மதிளரங்க வாமனனார்
பச்சைப் பசுந்தேவர் தாம் பண்டு நீரேற்ற
பிச்சைக் குறையாகி யென்னுடைய பெய்வளைமேல்
இச்சை யுடையரே இத்தெருவே போதாரே?[20]

## தன் அன்பர்கள் உடம்பையும் விரும்புபவன்

கைப்பொருள்கள் முன்னமே கைக்கொண்டார் காவிரி நீர்,
செய்ப்புரள வோடும் திருவரங்கச் செல்வனார்
எப்பொருட்கும் நின்றார்க்கு மெய்தாது நான் மறையின்
சொற்பொருளாய் நின்றாரென் மெய்ப்பொருளுங் கொண்டாரே[21]

என் மெய்ப்பொருளுங்கொண்டார். இதனால் வைகுண்டத்தில் நித்யமுக்தர்களால் அநுபவிக்கத் தக்க இறைவன், தன் திரு மேனியைத் தன் அடியார்கள் விரும்புவதற்கேற்பத் தானும் தன தன்பர்களது உடலையும் விரும்பி ஏற்றுக் கொள்பவன்.

## திருவரங்கநாதனின் இயல்பு

'அண்டினாரை விடமாட்டேன்' என்று கண் வளர்ந்தருளு கிறாற்போல, நினைவு, சொல், செயல் இவையனைத்தும் ஒரு படிப்பட்ட மெய்ம்மைப் பெருவார்த்தையுடையவர் திருவரங்கநாதன்.

---

20. நாச்சியார் திருமொழி (11-4)
21. நாச்சியார் திருமொழி (11-6)

## தான் துனது என்ற எண்ணம் மிகும்போது ஏற்படும் இயல்பு

இறைவனை அடைய வேண்டும் என்ற கலக்கத்தினால் அவன் அருளைத் தவிர, தன் முயற்சி தகாது, என்ற நினைவு மறந்துவிடுகிறது.

இதனால் அவனிருக்கும் இடம் சென்று உய்வடையலாம் என்று எண்ணம் மேலோங்கி செயல்படத் தொடங்கும் போது உடல் தளர்ந்து, கால்நடையாடாத அளவற்கு பலமின்மை உண் டாகிறது. பிறரை வேண்டிக் கொண்டுத் தன்னை அவனமர்ந் துள்ள இடத்திற்குக் கொண்டு செலுத்துங்கள் என்று கேட்கும் படியாக அமைந்துவிடுகிறது. சீவான்மாவின் நிலை, என்று 'மற்றிருந்தீர்கட்குத்' திருமொழியால் உணர்த்தப்படுகிறது.

## வைகுண்ட நாதன் இறங்கி வந்தமை

வைகுண்டத்து இருப்பைவிட்டு, பசுக்களை மேய்ப்பதில் உவந்தான். அதிலும் தம்மைத் தாம் காத்துக் கொள்ள இயலாத கன்றுகளை மேய்ப்பதில் மிகவும் ஆர்வம் நிரம்பப் பெற்றான். கன்றுகள் போலே, பிறப்பு, இறப்பு, இன்பம், துன்பம் ஆகியவற் றின் இயல்புகளை உள்ளது உள்ளவாறே அறிந்து கொண்டு தம்மைத் தாம் காத்துக் கொள்ள இயலாத சம்சாரிகளாகிய மக்களை மேய்த்து, அவர்களின் ஆன்ம பசிக்கு உணவிடுவதில் மிகவும் உவந்து கண்ணனாக அவதரித்தான். இறைமைத் தன் மையாலே அனைத்து உயிர்களுக்கும் இறைவனாக நின்று காக்கவேண்டும் என்ற அறத்தை நிலைநிறுத்தி அதனால் வெற்றியும் பெற்றவன்.

கற்றினம் மேய்க்கவும் மேய்க்கப் பெற்றான்
காடுவாழ் சாதியுமாகப் பெற்றான்
பற்றி உரலிடை யாப்பு முண்டான்
பாவிகாள் உங்களுக் கேச்சுக் கொலோ?
கற்றன பேசி வசவுணாதே
காலிகளுய்ய மழை தடுத்து
கொற்றக் குடையாக ஏந்தி நின்ற
கோவர்த்தனத்து என்னையுய்ததிடுமின்[22]

**பக்தர்களுக்கு வாழ்வு எது?**

எம்பெருமான் உகந்து உறையும் திவ்ய தேசங்களாகியத் திருப்பதிகளிலே அவனது கல்யாண குணங்களை நினைத்துப் பாடியும் ஆடியும் போது போக்குவதே பக்தர்களுக்கு வாழ்வாகும்.

**சீவான்மாவின் நிலையும் பரமான்மாவின் நிலையும்**

பிறர் துன்பம் அறியாதவனாகிய கண்ணன் என்னைத் தவிர்ந்து வாழ்வானாகிலும், என்னால் அவனை யொழிந்து வாழ் வது என்பது இயலாது. எனக்குள் அவனுள்ளாயிருக்கும் தன்மையை உணர்ந்து கொள்வதற்கு அவனோடு தொடர் புடைய பொருட்கள் ஏதேனும் கிடைக்கப் பெற்றாலும் போதும் என்பதே சீவான்மாவின் நிலையாகும்.

தன்னடியார்களை உகப்பிப்பதற்காக, தனது மாயை யினால் அதிமானுட கோலச் செயல்களைச் செய்யவல்லவன்

22. ஆண்டாள், நாச்சியார் திருமொழி (12-8)

கண்ணன். இத்தகைய கோலச் செயல்களாலேயே திருவாய்ப் பாடித் திவ்ய தேசத்திற்கே ஒரு மங்கல தீபம் போல் விளங்குபவன்

அல்லல் விளைத்த பெருமானை
ஆயர்பாடிக் கணி விளக்கை[23]

**சீவான்மாவின் உறுதி**

சீவான்மா பராமான்மாவைப் பெறுவது என்பதும் அவனது அருளினாலேயே நிகழ வேண்டிய ஒன்றாகும். சீவான்மா வானது பரமான்மாவை அடைய வேண்டுமாயின் மூன்று நிலைகளை அடைய வேண்டும். அதாவது.

1. பரமான்மாவைப் பிரிந்து இருக்கும்போது வருந்தும் நிலையும், கூடியிருக்கும் போது மகிழும் படியான நிலையும், விளைவிப்பாதான தனிப்பட்ட அன்பு - பரபக்தி.

2. மேற்கூறிய அன்பு முதிர்ந்த நிலையில் ஏற்படும் நேரிடையான தோற்றம் - பரஞானம்.

3. இமைப்பொழுதும் பிரிவைச் சகித்துக் கொள்ள இயலாது அநுபவித்தேயாக வேண்டும் என்ற முதிர்ந்த பேரன்பு பரமபக்தி.

இவ்வாறு சீவான்மாவின் முதிர்ந்த பேரன்பை உணர்த்து வதாக அமைந்துள்ளது கோதை நாச்சியாரது இறுதித் திருமொழி.

23.. ஆண்டாள், நாச்சியார் திருமொழி (13-10) .

எண்ணற்ற கல்யாண குணங்கள் நிறைந்த அவனே அவனை அடைவதற்கு வழி என்றும், அவனது குணங்களே தமக்குப்பேறு என்பதையும், சீவான்மா உணர்ந்து கொண்டு உறுதியடைந்த நிலையையும் இத்திருமொழி பேசுகின்றது.

**மாலாய்ப் பிறந்த நம்பி - எவ்வாறு?**

மால் - அன்பு அன்பே உருவானது போல் அன்புடன் பிறந்து, அதனாலேயே நிறைவினையுடையவன். தன்னுடைய முழுமை யான அழகை வெளிப்படுத்துவதன் மூலம் பெண்களாகிய சீவான்மாக்களிடம் அன்பை விளைவிப்பவன்.

**விலைமதிக்க முடியாமையும் எளிமையும்**

மணியானது விலை மதிக்க முடியாத பொருளாயினும் முந்தானையில் முடிந்து வைக்கத் தக்க தன்மையுடையது. மாதவனாகிய மணியும், எண்ணிறந்த கல்யாண குணங்களால் அளவிட இயலாதவனாகவும் அதே சமயம் பத்துடை அடியவர்க் கெளியவனாக, கட்டவும், அடிக்கவும்படித் தன்னை ஆட்படுத்திக் கொள்ளும் எளியவன் என்பது பகரப்படுகின்றது.

**பிருந்தாவனத்துக் கண்ணனாக வந்தவன் இயல்பு**

கருணையாலேயே உயிர்களைப் படைப்பவன். உலக நாயகன் கருணையுடையவன். தன்னால் படைக்கப்பட்ட அனைத்துயிர்களையும் காக்கும் தன்மை வாய்ந்தவன். படைப் போனாகிய பிரமனுக்கும் உந்தியாகிய வீட்டை அளித்துக் காப்ப வன். தனக்காக ஒன்றை எண்ணி அதற்காக உயிர்களைத் தோற் விக்காமல், உயிர்கள் உய்வதையே கருத்தாகக் கொண்டுத்

தோற்றுவிப்பவன். படைப்பதோடு மட்டுமின்றி அவரவர்களுக்குரிய அதிகாரங்களையும் அளிப்பவன். அத்தகையவனே பிருந்தாவனத்துள் பிறந்துள்ளவன் என்பதைக் கோதை நாச்சியார் தனது திருமொழிகளால் உணர்த்துகிறார்.

இவ்வாறு சித்தும் அசித்தும் பரம்பொருளாகிய ஈசுவரனை உணர்ந்து கொண்டு அவன் காட்டிய வழியினாலேயே அவனையடைய இயலும் என்ற உயர்ந்த தத்துவத்தை தனது உன்னத மொழிகளாகிய, திருப்பாவைப் பாடல்களானும், நாச்சியார் திருமொழி மூலமாகவும் அருள் நங்கை ஆண்டாள் உணர்த்துகிறார்.



( இயல் - 6 )

# நாச்சியாரது பாசுரங்களில் ஐம்பொருள் விளக்க அழகு

## ஐம்பொருள் அறிவோமா?

மிக்க இறைநிலையும் மெய்யாமுயிர் நிலையும்
தக்க நெறியும் தடையாகித் தொக்கியலும்
ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும் குருகையர்கோன்
யாழினிசை வேதத் தியல்[1]

என்னும்படியாக, இறைவனின் நிலை, (ஈசுவரனின் இயல்பு), உயிரின் (ஜீவனின்) நிலை (ஆன்மாவின் இயல்பு), உயிரானது இறைவனைச் சென்றடைவதற்கான நெறிகள் (அப்பயனை அடைவதற்கான வழிகள்) அந்நெறிகளுக்குத் தடையாக இருப்பவை, இறைவனைச் சென்றடைவதால் ஏற்படும் பலன், (ஆன்மா அடையும் பயன்) ஆகிய இவ்வைந்து செய்திகளும், வைணவக் கோட்பாடுகளில் ஐம்பொருள் என்று கூறப்படு கின்றன. மேலும் ஒரு வைணவன் அறிந்து கொள்ள வேண்டிய வற்றில் மிக முக்கியக் கோட்பாடாக சிறப்பிக்கப்படுவதும் இந்த ஐம்பொருள் விளக்கக் கோட்பாடே ஆகும்.

## ஆன்மாக்களின் வகை

நித்யர், முத்தர், பத்தர், கேவலர், முமுட்சுகள் என்ற ஐந்து வகை ஆன்மாக்களைப் பற்றிய ஞானம் ஆகும்.

## நித்யர்

பிறப்பிறப்பு நோய்க்கு ஆட்படாது கடல்நிற வண்ணன் கணப் பொழுதும் நீங்காது உறையும் வானுலகில் இறைவனுக்கு

1. பட்டர் திருவாய்மொழித் - தனியன் (5)

அடிமை செய்பவர்கள், எம்பெருமானது ஆணையினாலே, ஆக்கல், காத்தல், அழித்தல் செயல்களைச் செய்வதற்கானச் சக்தியுடையவர்கள்.

இறைவனது எல்லா நிலைகளிலும் தொடர்ந்து சென்று, அடிமை செய்பவர்கள். நித்யர்களுக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்பவர்கள் அநந்தன், கருடன், சேனை முதல்வர் முதலா னோர்.

**முத்தர்**

ஓர் ஆசாரியரை அடைந்து அவர்தம்மால் இறைவனது அருட்கண் நோக்குப் பெற்று, பிறவிப் பெருங்கடல் தொடர்பால் தொடரக் கூடிய பாவங்களனைத்தும், கழியப் பெற்றவர்களாய், இறைவனது, வடிவழகு, குணம் மற்றும் அதியற்புதமான செயல்களை அனுபவிக்கின்றவர்கள். அவ்வாறு அனுபவிப்ப தோடு மட்டுமின்றி, அவ்வநுபவம் உள்ளடங்காமமையால், வாயாரப் பாடியும், மனதாரச் சிந்தித்தும் வைகுந்தத்திலே களித் திருப்பவர்கள்.

**பத்தர்**

மின்னின் நிலையில மன்னுயிராக்கைகள் என்னும்படி, நிலையில்லா மானுட வாழ்வைப் பெற்று, அதனால் விளையும் இன்ப துன்பங்களுக்கு ஆளாய், அசுத்தப்பட்டதும், உண்மைய றிவை அறிய இயலாததாய், அழியத்தக்க பலன்களில் மிக்க நாட்டமுடையதும் ஆகிய இவ்வுடம்பையே ஆன்மா என்று எண்ணக் கூடியவர்கள்.

'உண்டியே உடையே உகந்தோடும் இவ்வையம்' என்னும் படியாக, உடம்பை வளர்ப்பதற்குத் தேவையான வழிகளிலேயே ஊன்றியிருப்பவர்கள். இப்படி பிறவிப் பெருங்கடலுள் துவண்டு கொண்டு இறைவனைப் பற்றி எண்ணியும் எண்ணாதவர்களு மாய் இருப்பவர்கள் பத்தர்.

**கேவலன்**

தன் ஆன்மாவை மட்டும் சுககரமானது என்று எண்ணி, அதன் அநுபவத்திற்காக, இறைவனையும் பிரிந்து, ஆன்மாவுக்கு வேண்டிய ஞான யோகத்தை மட்டுமே கடைப்பிடித்துக் கொண்டு, அந்த யோக பலத்தினால் கிடைக்கப் பெறும் ஆத்மாவின் அநுபவத்தையே மிகப் பெரிய பேறாக நினைத்திருப்பவர். இவ்வநுபவத்திற்குப் பின்பு இவர் பிறவித் தொடர்பும் இல்லாமல் இறைவனது அடிசேரும் வகையில் இல்லாமல் எப்பொழுதும் அசரீரியாய்த் திரியக் கூடிய கேவல நிலைக்குத் தள்ளப்படுவர்.

**முமுட்சு**

பிறவிப் பெருங்கடல் நீந்தி இறைவனடி பெற வேண்டும். கலங்காப் பெருநகராகிய, கண்ணனடிபடும் வைகுந்த மாநகரில், ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி, வழுவிலா அடிமை செய்ய வேண்டும் என்ற தணியாத ஆர்வம் கொண்டவர்களே முமுட்சுக்கள் ஆவர்.

## இறைவனின் இயல்பு

1. பரத்வம்

அநந்தன், கருடன், சேனை முதல்வர் முதலானோர் புடைசூழ, திருமாமணி மண்டபத்திலே, பிராட்டிமாருடன் அழகுற அமர்ந்து கொண்டு, அகிலவுலகையும் காத்தருளும் நிலை.

2. வியூகம்

ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகியவற்றிர்க்கு உரியோ ராகிய தேவர்கள் புடைசூழ, திருமாமகள் அடிவருடிட, அரவரசப் பெருஞ்சோதி அநந்தனின் மீது அறிதுயில் கொண்டு திருப்பாற் கடலில் எழுந்தருளியிருக்கும் நிலை.

3. விபவம்

அறத்தை வலியுறுத்தவும், மறத்தை வேரொடுகளைதற் காகவும், தன் நிலையிலிருந்து தாழ வந்து, கட்டவும், அடிக்கவும், கொண்டாடும்படியாகவும் விளங்கும் இராம, கிருஷ்ண, வாம னன் போன்ற அவதாரங்கள்.

4. அந்தர்யாமி

இது இரண்டு வகையாக அமைகின்றது.

1. 'அடியேனுள்ளான்' என்றும், 'எனதாவி' என்றும், 'என்னுயிர்' என்றும் சொல்லும்படி ஆத்மாவுக்குள் அமைந்த நிலை.
2. 'போதிற் கமல வன்னெஞ்சம் புகுந்து'[2] 'அரவிந்தப் பாவை யுந் தானுமகம்படி வந்து புகுந்து[3] புந்தியிற் புகுந்து தன்பால் ஆதரம் பெருக வைத்த வழகன்'[4] உள்ளுவாருள்ளிற் றெல்லா முடனிருந் தறிதி[5]

என்றும் கூறுகிறாற் போலே, திருமாமகள் கொழுநனாய், அனைத்துப் பொருட்களிலும் நீக்கமற நிறைந்திருக்கும் நிலை.

2. பெரியாழ்வார், பெரியாழ்வார் திருமொழி (5-2-8)
3. மேலது (5-2-10)
4. திருமாலை - 16
5. திருமாலை - 34.

5. அர்ச்சாவதாரம்

தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவந்தானே தமருகந்தது எப்பேர் மற்றப் பேர்[5]

என்கிறபடியே, தனக்கென ஒருருவமும், ஒரு பெயரும் இல்லாது தன்னடியவர் விருப்பத்திற்கேற்றவாறு அவர்களிட்ட வடிவாகவும், அவர்களிட்ட பெயராகவும் நின்றும், இருந்தும், கிடந்தும் அருள் பாலிக்கும் நிலை அர்ச்சாவதாரம்.

## இறைவனை அடைவதற்கான வழிகள்

கர்மம்

தானம், தவம், தியானம், வேள்வி, புண்ணியத் தலங்களுக்கு யாத்திரை மேற்கொள்ளுதல், புண்ணியத் தலங்களில் வசித்தல், விரதம் போன்ற செயல்களால், பாவங்கள் கழியப் பெறுதல், இதுவே ஞானத்திற்குத் துணையாயும், ஐச்வர்யத்துக்கு மூலகாரணமாகவும் அமைகின்றது.

ஞானம்

யோக அடிப்படையிலான ஞானத்திற்கு உள்ளக்கமலம், சூரிய மண்டலம் முதலான அனைத்து நிலைகளிலும் எழுந்தருளியுள்ள எம்பெருமானைப் பொருளாக்கி, சங்கு சக்கரங்கள், பீதாம்பரம், கிரீடம் சிலம்பு மற்றுமுள்ள அனைத்து அணிகலன்களும் அணியப் பெற்றும், திருமாமகளாகிய உயிரணியை உள்ளக் கமலத்திலே கொண்டிலங்கும் நிலையை, ஆன்மாவின் உள்ளத்திலே அநுபவமாக்கிக் கொண்டு

5. பொய்கையாழ்வார், முதல் திருவந்தாதி, பா. (44)

யோகத்திலே மூழ்கும் நிலை. இது பக்தியோகத்திற்குத் துணையாகவும், கைவல்ய அநுபவம் எனப்படும் ஆத்மாநுபவத் திற்கு மூலகாரண மாகவும் அமைகின்றது.

பக்தி

தைல தாரை போல இறைவன் மீது கொண்ட அன்பானது பொங்கிப் பெருகும் நிலை. இதனால் பாவங்கள் நீங்கப் பெறுகின்றன. அடைய வேண்டிய பொருட்களையும், உபாயங் களையும் அநுபவிக்கச் செய்கிறது.

பிரபத்தி

இதுவே பற்ற எளியதாயும், சுகம் தரத்தக்கதாகவும் அமைகின்றது. பிரபத்தி இரண்டு வகை.

1. ஆர்த்த ரூப பிரபத்தி

2. த்ருப்த ரூப பிரபத்தி

ஆர்த்த ரூப பிரபத்தி

இறைவனது பலனொன்றுமெதிர்பாராத கருணையாலும், தனது ஆசார்யனாலும், ஞானம் பிறப்பிக்கப்பட்டதும், இறைவனது அநுபவத்திற்குத் தடையாக உள்ள பிறவித் தொடர்பும், உயிர் உடலுடன் கூடிய தொடர்பு, நாட்டின் தொடர்பு இவையனைத்தும் விரைவில் நீங்கப் பெற்று, என்று இறைவனடி சேர்வது என்ற ஆர்வம் மட்டுமே மேலோங்கியவராய் இனி நான் போகலொட்டேன் என்று தடுத்தும், வளைத்தும் சரண் அடை வதே ஆர்த்த ரூப பிரபத்தி.

த்ருப்தரூப பிரபத்தி

உடல் சம்பந்தப்பட்ட இன்பப்பற்று, சுவர்க்கம், நரகம் ஆகியவற்றில் விரக்தியும், பயமும் ஏற்பட்டு அதனால் வரக்கூடிய தோஷங்கள் கழிவதற்கு ஆசார்யனால் உபதேசிக்கப்பட்ட வழிமுறைகளைக் கடைப்பிடித்துக் கொண்டு

> **இருக்கும் நாள் உகந்தருளின நிலங்களிலே அமுதுபடி, சாத்துப்படி கைங்கர்யம் ஆராய்ந்து போருகை[6]**

என்னும்படி பகவத் பாகவத அடிமைச் செயல்களில் விருப்பம் கொண்டு மனம், வாக்கு, காயங்களால் கைங்கர்யம் செய்து கொண்டு இருக்கும் நிலை, த்ருப்த ரூப பிரபத்தி.

ஆசார்யாபிமாநம்

குழந்தை நோவுற்றால் தான் மருந்துண்டு குழந்தையின் நோய் நீக்கும் தாயைக் போல், பரமசேதனனுக்காகத் தான் உபாயங்களை அநுட்டித்து, சேதனனைக் காக்கவல்ல பரம கருணைமிக்க, மகாபாகவதன் அபிமானத்திலே ஒதுங்கியிருந்து, அனைத்து சுகம் மற்றும் துக்கங்களையும் அவனிட்ட வழக் காயிருந்து மேற்கொள்ளுதலே, ஆசார்யாபிமாநம் ஆகும்.

தடை

உயிரின் இயல்புக்குத் தடை, பரத்துவத்துக்குத் தடை, பயனுக்க தடை, வழிக்குத் தடை, அனுபவத்துக்குத் தடை எனத் தடைகள் ஐந்து வகைப்படும்.

6. எம்பெருமானார், இறுதிக்காலத்தில் கூறப்பட்ட வாக்கியங்களில் ஒன்று.

உயிரின் இயல்புக்குத் தடை

இறைவன் ஒருவனுக்கே அடிமைப் பணிக்கு உரியது உயிர் என்பதாகும். இதற்கு மாறாகத் தனக்கும் பிறர்க்கும் அடிமைப் பணிக்கு உயிர் உரியது என நினைத்தலும், இறைவனுக்கே உரிமை என்பதற்கு மாறாகத் தனக்கும் உரிமை என நினைத்தலும் உயிரின் இயல்புக்கு எதிரான தடையாகும்.

பரத்துவத்துக்குத் தடை

பிரமன், இந்திரன் முதலிய பிற உயிர்களைத் தெய்வமாக எண்ணுவது, நாராயணன் உட்புகுந்து, இருப்பதால் பெற்ற ஆற்றலை மட்டும் உடைய பிரமன், இந்திரன், ருத்ரன் ஆகிய இவர்களுக்கும், இயல்பான ஆற்றல் உண்டு என எண்ணுவது, அடியார் உகந்த உருவிலே திருக்கோயில்களிலும், இல்லங்களிலும், முழுமையான ஆற்றலுடன் எழுந்தருளியுள்ள அர்ச்சாவதார மூர்த்திக்கு ஆற்றல் இல்லை என எண்ணுவது, ஆகிய இவை பரம்பொருள் நாராயணனே எனத் தெளிவதற்கு (பரத்துவத்துக்குத்) தடையாகும்.

"பயனில்" தடை

நிலையில்லாத வெறுக்கத்தக்க செல்வங்களில் ஆசை கொள்வதும், இறைவன் உகப்புக்காக மட்டுமே என்று மேற்கொள்ளாமல், தன்னுடைய உகப்புக்கும் உரியது என்று தொண்டுகளைச் செய்வதும், பயனுக்குத் தடைகளாகும். பயன் என்பது உயிர் அடையும் முக்திப் பயனாகும். தொண்டே பயன் என்பது வைணவ.சமயக் கொள்கையாகும்.

வழிக்கு (நெறிக்குத்) தடை

உயிரின் இயல்புக்கு மாறாக, கர்மம், ஞானம், பக்தி ஆகிய வழிகள் இறைவனை அடைய உதவும், பிரபத்தியால் அடைய முடியுமா? என்று ஐயங்கொள்வதும் வழிக்குத் தடைகளாகும்.

எந்த வழியும் இறைவனை அடைய வழியாகாது. இறைவனே வழியாக இருந்து, அவனே பயனும் ஆகிறான் உயிர் தானாக மேற்கொள்ளும் வழிகள் யாவும் சாத்திய வழிகள். இறைவனே சித்தோபாயம்.

சித்தோபாயம்—பயன் தருவதற்கு ஏற்கெனவே ஆயத்தமாக இருக்கும் வழி

ஏரி ஆம் வண்ணம் இயற்றும் அது அல்லால் மாரியார்
பெய்கிற்பார் மற்று.[7]

மூவகை ஐயம்

தனித்தன்மை வாய்ந்த கர்மம், ஞானம், பக்தி ஆகிய உபாயங்களாலன்றோ பலன் கிட்டும். மனத்தால் செய்யும் ஞானமாத்திரமான பிரபத்தியினால் மட்டும் பலன் கிட்டுமா? என்று இறைவனே சித்தோபாயமாகும் தன்மையைச் சிறுமை யாக எண்ணுகின்ற ஐயம்.

பிரமன் முதலிய தேவர்க்கும், சனகர் முதலான கர்மயோகி கட்கும், பெறுவதற்கரியதான இறையனுபவமாகிய பலன், மனத் தால் மட்டுமே பிரபத்தி செய்யக் கூடிய நமக்குக் கைகூடுமா? என்று பலனின் பெருமையை நோக்கி எழும் எண்ணமாகிய ஐயம்.

7. பூதத்தாழ்வார், இரண்டாம் திருவந்தாதி பா (16)

பற்பல பிறவிகளில் செய்யப்படும் கழுவாயான கர்மங்களால் பாவங்கள் நீங்குகின்றன. அதன் பின்னர் பக்தி பிறக்கிறது. அப்போது தான் எப்போதும் மாறாத பாவனையும் இறுதி நினைவும் உண்டாகும். அதனால் மட்டுமே வீட்டின்ப மானது எய்தும். அவ்வாறன்றி மனத்தால் செய்த பிரபத்தியால் மட்டும் வீட்டின்பம் கிடைக்குமோ? என்று தன் பாவத்தின் கனத்தை நோக்கி எழும் எண்ணமாகிய ஐயம். இந்த மூவகை ஐயங்களும், இறையனுபவத்தைப் பெறுவதற்கான வழிக்குத் தடைகளாகின்றன.

இறையனுபவத்திற்குத் தடை

வினைப் பயனால் இப்போது பெற்றுள்ள உடல் தொடர்பு நோக்கி அனுதாபம் கொள்வதைத் தவிர்த்தல். பெரியனவாக வும், நிலையாகவும் இடம் பெற்ற தீய குணங்கள், இறைவனிடத் தும், இறையடியாரிடத்தும், செய்யும் குற்றங்கள். மேலும் அவர்மேல் கொள்ளும் பொறாமையும் இறைவனை அடையாமல் தடுக்கும் தடைகளாகும்.

**இறையனுபவத்திற்குத் தடையாக அமையும் தீய குணங்கள்**

1.காமம்

உலகின் கண் தாம் விரும்பிய உயிரையும் பொருளையும் அடைந்து அனுபவித்தாலன்றி, ஆற்றாத மனமாற்றம்.

2. குரோதம்

விரும்பிய பொருள் கிடைக்காத போது ஏற்படும் கோபம்.

3. பற்றுள்ளம்

தன் உயிர்க்கு இறுதியே நேரினும் தனக்குரிய பொருளை ஒரு சிறிதும் கொடாமை.

4. மயக்கம்

ஆசை அறிவைக் கெடுப்பதால், தக்கது இது, தகாதது இது எனப் பிரித்தறியும் விவேகத்தை இழத்தல்.

5. செருக்கு

செல்வம், கல்வி, வீரம், அதிகாரம், அழகு முதலியவற்றால் செருக் கடைந்து ஒருவரையும் மதியாமல் இருப்பது.

6. பொறாமை

பிறர் உயர்வு கண்டால் பொறாமல் புழுங்கி அவரைக் கெடுக்க முயல்வது.

7. விருப்பு

பிறரால் தனக்கு வரும் புகழ், பயன், முகமன் முதலிய வற்றுக்காக, அவர்கள் மேல் வைக்கும் அன்பு

8. வெறுப்பு

தான் விரும்பிய ஒன்றைக் கொடாததாலும் தன் குற்றங் களை எடுத்துக் கூறிப் பழிப்பதாலும், தன்னை வணங்கி முகமன் கூறாமல் இருப்பதாலும் பிறரைக் கெடுக்க நினைப்பது.

9. பேராசை

பிறர் இன்பத்தைப் பொறுக்காது, நமக்கு வந்த துன்பம் இவர்க்கும் வாராதா? இவர்கள் மட்டும் இன்புற்றிருக்கலாமா? என்று எண்ணி வருந்துவது.

10. ஆடம்பரம்

அனைவரும் தன்னைப் போற்ற வேண்டும் என்று சொல்லாலும், ஒப்பனையாலும், நடை உடைகளாலும், தன் நிலைமைக்கு மேற்பட்ட பெருமிதத்தைக் காட்டிக் கொண்டு திரிவது.

11. அசூயை

பிறர் செல்வம், கல்வி, ஒழுக்கம் முதலிய உயர்வைக் கண்டு மனம் புழுங்கி, வருந்தி மனம் எரிவது.

12. கர்வம்

தனக்குள்ள செல்வம் கண்டு மகிழ்ச்சியடைந்து இதற்குக் கேடு வாராதபடி, எளியவரை மட்டும் வைத்து, மற்றவரையெல்லாம் அழித்துவிட்டால், நாம் மட்டும் நன்றாய் வாழலாம் என்று வெதும்பி வருந்துவது.

13. அகங்காரம்

உலகத்தில் சிறப்புடையோம் நாமேயொழிய,நமக்கு மேற்பட்டோர் ஒருவரும் இலர் என்ற அணை கடந்து நிமிர்கின்ற செருக்கு

மனம், வாக்கு, காயங்களால் நேரும் குற்றங்கள்

14. சொல்லால் வரும் தடை

பொய்ச் சான்று கூறுதல், கோள் சொல்லுதல், கடுஞ்சொல் கூறல், பயனிலாதவற்றைப் பேசுதல் இவை சொல்லால் வரும் தடையாகும்.

உடலால் வரும் தடை

பிறர் பொருளை அவர் அறிந்தும் அறியாதும் களவால் கவர்தல். உயிர்களைத் துன்புறுத்தல், பிறன்மனை நோக்கல் ஆகிய இவை உடலால் வரும் தடைகள்.

மனத்தால் வரும் தடை

உள்ளதால் உள்ளலும் தீதே பிறன் பொருளைக்
கள்ளத்தால் கள்வேம் எனல்[8]

என்ற குறளுக்கேற்ப பிறர் பொருளைக் கவர நினைத்தல் பிறருக்குத் தீங்கு செய்ய நினைத்தல், வீணாக ஆசைப்படுதல் ஆகிய இம்மூன்றும் மனத்தால் வரும் தடைகளாகும்.

## இறைவனிடத்துக் குற்றப்படுதல்

1. இறைவனுக்குரியதான நிவேதனப் பொருள்களைத் தெரிந்தோ, தெரியாமலோ தனதாக்கிக் கொள்ளுதல்.
2. இறைவன் திருமுன் தண்டனிட்டு வணங்காமலிருத்தல் ஒருகையால் வணங்குதல்.
3. இறைவன் திருக்கோயிலுக்குள் ஊர்தியில் ஏறி செல்லு தல், பாதுகை அணிந்தும் நுழைதல்.

8. திருவள்ளுவர், திருக்குறள் (282)

4. திருக்கோவிலினுள் எச்சில் உமிழ்வது, மூக்குச் சிந்துவது அசுத்தம் செய்வது போன்றவை.

5. திருக்கோவிலில் கால் நீட்டிக் கொண்டிருப்பது, படுப்பது, இருகையாலும் முழங்காலைக் கட்டிக்கொண்டிருப்பது. திருக்கோவிலினுள் பொய் பேசுவது, உரத்த குரலில் சிரிப்பது, வீண்பேச்சுப் பேசுதல், பக்திப் பரவசத்தால் அன்றி வேறு காரணங்களுக்காக அழுதல், மகளிருடன் பரிகாச வார்த்தை பேசுதல், பிறரைப் பழித்தல், புகழ்தல், ஆசனத்தில் அமர்தல் போன்றவை இறைவன்பால் குற்றப்படுதல் ஆகிய தடைகளாகும்.

**வாழ்வு - பயன் - செல்வம் - புருஷார்த்தம்**

உயிர் அடைய வேண்டிய பயன் இறைவன் கைங்கரியம், இந்தப் பயன் தர்மம் (அறம்) அர்த்தம் (பொருள்) காமம் (இன்பம்) ஆத்மாநுபவம் (உயிரனுபவம்) பகவதநுபவம் (இறை யனுபவம்) என ஐந்து வகைப்படும்.

தர்மம் என்று கூறப்படும் அறம் பொது அறம், சிறப்பு அறம் என இரு வகைப்படும்.

பொது அறம்

வறுமையில் வாடுவோர்க்கும், வேதம் கற்போர்க்கும், அறு சமயத்தார்க்கும், சிறைப்பட்டார்க்கும், பசுவிற்கும் பசி நீக்குதல், ஐயமிடுதல் எனப் பல வகைப்படும்.

சிறப்பு அறம்

ஸ்ரீ வைஷ்ணவ ஆசார்யர்களுள் நடுநாயமாகத் திகழ்ந்தவராகிய இராமாநுசர் எண்பத்திரண்டு சொற்றொடர்களால் சிறப்பு அறத்தை விளக்கியுள்ளார்.

உடல் வினைவயமானது, உடலுக்கு இன்பம், துன்பம் இரண்டும் வருவது இயல்பு. வைணவன் அதனைப் பொருட்படுத்தக் கூடாது. பொருட்படுத்தினால் நாத்திகன் ஆவான்.

உயிர் வாழ்க்கையானது இறைவன் வயப்பட்டது. அந்த உயிரின் பொருட்டுக் கவலையுறலாகாது. கவலையுற்றால் இறைவனிடம் செய்த சரணாகதி பொய்யாக முடியும். கர்மம், ஞானம், பக்தி முதலிய வழிகளில் ஈடுபடாது இறைவனுக்கும், இறையடியார்க்கும் அடிமை செய்யும் பணிகளில் ஈடுபட வேண்டும்.

இராமாநுசரால் பிரம்ம சூத்திரத்துக்குச் செய்யப்பட்ட ஸ்ரீபாஷ்யம் என்னும் உரையைக் கற்றல் வேண்டும். அது முடியாதாயின் ஆழ்வார்களின் அருளிச் செயல்களாகிய திவ்வியப் பிரபந்த பாசுரங்களைக் கற்று வல்லவர் ஆதல் வேண்டும்.

மேற்கூறிய செயலையும் செய்ய முடியவில்லையாயின் இறைவன் உகந்தருளின திருக்கோயில்களில், திருவிமானம், கோபுரம், திருமதிள் திருமண்டபங்கள், ஆபரணங்கள், திருப்பரிவட்டங்கள், திருக்குளம், திருத்தேர் முதலிய ஊர்திகள், திருநந்தவனம், திருவிளக்கு முதலியன அமைத்தல்.

திருவிழாக்கள் நடத்துதல், திரு அலகிடுதல் திருகோலமிடுதல் முதலிய தொண்டுகளில் இயன்ற அளவு ஈடுபடுதல் வேண்டும். இதுவும் முடியாதாயின் திருநாராயணபுரத்தில் ஒரு குடில் அமைத்துக் கொண்டு வசித்தல். அதுவும் இயலாதாயின் இருந்த இடத்தில் இருந்து கொண்டு, துவய மந்திரத்தை நினைத்துக் கொண்டிருத்தல். அதுவும் மாட்டாதாயின் 'நம்முடையவன்' இவன் என்று அன்பு காட்டும் ஞான அதிகாரியான ஆசாரியன் அபிமானத்தில் ஒதுங்க வேண்டும் இவையே இறைபணி எனப்படும்.

## இறையடியார் பணி

உறவினர், பகைவர், 'நொதுமலர்' மூவகையினரிடத்தும் விழிப்புடன் நடந்து கொள்ளுதல் வேண்டும்.

உறவினர் - இறையடியார், பகைவர் - இறைவனை வெறுப்பவர், நொதுமலர் - உலகியலே பயன் எனக் கருதுவோர்.

பொருள் மற்றும் இன்பங்களில் ஏற்பட்ட ஆசையின் காரணமாக அடியார்களை மதியாதிருத்தல் கூடாது.

இறையன்பில்லாத பகைவர்களைப் பொருள், இன்பம் கருதிப் பின் தொடர்தல் கூடாது.

இறைவன் பணி, அடியார் பணி, ஆசார்யர் பணி இவற்றில் முழுமையாக ஈடுபடல் வேண்டும்.

எந்நாளும் பொறிகளுக்கு ஆட்படக்கூடாது.

மேற்கூறிய இவை சிறப்பு அறம் என்பதன் பாற்படும்.

பொருள்

தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை[9]

ஐம்புலத்து ஆறு ஓம்புவதற்கும், அனைத்துயிர்க்கும் நலம் செய்வதற்கும், தக்கார்க்கு உதவுவதற்கும் செவ்வனே செலவிடும் பொருட்டுத் தத்தம் நிலைகளுக்கு ஏற்ப, நல்வழியில் தேடும், பொன், வெள்ளி முதலிய செல்வங்களும், நெல் முதலான தானியங்களும் பொருள் என்பதன்பாற்படும்.

இன்பம்

மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்பொறிகளான சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகியவற்றைத் துய்த்தலால் ஏற்படுவது இன்பம் எனப்படும்.

இம்மை இன்பம்

பெற்றோர் மற்றும் உற்றார், தனம், தானியங்கள், வீடு, நிலம் போன்ற உடைமைகள், ஆடை, அணிகலன்கள், உணவுப் பொருட்கள், சந்தனம், மலர் போன்ற நறுமணப் பொருட்கள் ஆகிய இவற்றால் உண்டாகும் இன்பம் இம்மை இன்பம் எனப்படும்.

மறுமை இன்பம்

வேள்வி போன்ற கருமங்களைச் செய்து அதன் பயனாகப் பருவுடல் நீங்கி, இன்பத்துக்கு இடமான சொர்க்கம் முதல் சத்திய

9 திருவள்ளுவர். திருக்குறள் (43)

உலகம் வரையிலான மேலுலகங்களிற் போய்த் தேவ உடல் பெற்றுத் தாம் செய்த நல்வினைக்கு ஏற்ப ஆமுதம் உண்ணுதல், நரை, திரை, மூப்பு எதும் இன்றி கற்பகத்தருவின் நிழலில் தெய்வமகளிரோடு கூடி ஐம்புலனால் இன்பம் அநுபவித்தல் இவை மறுமை இன்பம் ஆகும்.

உயிரனுபவம்

> பிறவித் துயர்அற ஞானத்துள் நின்று
> துறவிச் சுடர் விளக்கம் தலைப் பெய்வார்[10]

என்பதற்கேற்ப ஞான யோகத்தில் நிலைபெற்று, வாழ்வின் முடிவில் பருவுடல் நீங்கி நுண்ணுடலுடன் வைகுந்த நாட்டின் எல்லையாகிய விரசை நதி, வரை சென்று நுண்ணுடலும் துறந்து, ஆங்கு ஓர் இடத்திலே உயிர் தன்னைத் தானே அநுபவித்துக் கொண்டு என்றென்றும் இருப்பது உயிர் அநுபவம் எனப்படும்.

## இறையனுபவம்

உயிர் அடைய வேண்டிய உண்மையான பயன், இறைவனுடன் கூடிக் குளிர்ந்து அவனருகிருந்து அணுக்கத் தொண்டுகளைச் செய்து கொண்டு அவனை அனுபவிப்பதே ஆகும். அதுவே வைணவத்தில் முடிவாகக் கூறும் இன்பப் பயனாகிய இறையனுபவம் ஆகும். இதற்கு மேம்பட்ட பலன் வேறு எதுவும் இல்லை எனலாம்.

10. நம்மாழ்வார், நம்மாழ்வரா் திருவாய்மொழி, (1-7-1)

## திருப்பாவையில் ஐம்பொருள் விளக்கம்

### இறைவன் இயல்பு

முதல் பாசுரம் முதல் ஐந்தாம் பாசுரம் வரையில் இறைவனது இயல்பு பேசப்படுகிறது.

கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல் முகத்தான்[11]
நாராயணனே நமக்கே பறை தருவான்[12]

என்பதால் பரத்துவ நிலையும்

பாற்கடலில் பையத் துயின்ற பரமன்[13]

என்பதால் வியூக நிலையும்.

'ஓங்கி உலகளந்த உத்தமன்' என்பதால் விபவ நிலையும் ஆழிமழைக் கண்ணன், ஊழிமுதல்வன், பாழியந் தேளுடைப் பற்பநாபன் என்பதால் மீண்டும் பரத்துவ நிலையும், வையத்து வாழ்வீர்காள் பாசுரத்தால் பகவானை மனதில் பாவித்துக் கொண்டிருக்கும் (அந்தர்யாமி) நிலையும்.

'மாயனை மன்னு வடமதுரை மைந்தனை' என்பதால் அர்ச்சாவதார நிலையும் புலனாகின்றது. எனவே இப்பகுதியில் இறைவனின் பர, வியூக, விபவ, அந்தர்யாமி, அர்ச்சை என்ற ஐந்து இயல்புகளையும் கோதை நாச்சியார் உலகோருக்கு உணர வைக்கிறார்.

11. ஆண்டாள், திருப்பாவை (1)
12. மேலது
13. மேலது (2)

உயிரின் இயல்பு

இறைவனை மறந்து, அவனையடைவதற்குச் செய்ய வேண்டிய முயற்சிகளையும் மறந்து கிடப்பதும், ஜீவர்கள் மாயையினால் பிரகிருதி நிஷ்டையில் உறங்கிக் கிடப்பதும், உயிரின் இயல்பாகும். இந்நிலை திருப்பாவையில் ஆறுமுதல் பதினைந்து பாடல்கள் வரை பேசப்படுகிறது.

இறையனுபவத்திற்கு புதியவளாகையாலே இறையனுபவத்தின் எல்லை நிலமான இறையடியார் அனுபவத்தின் இனிமையை அறியாமல் கிடந்துறங்குகிறாள்.

பகவானை அனுபவிப்பதைக் காட்டிலும், பாகவதர்களை அனுபவித்து நன்றென்று அறியும் அறிவிழந்து உறங்குகின்றவள்.

கண்ணனுக்கு இனியவளாயிருப்பவள் (முக்தர் நிலை) உடைமையைக் கொண்டு போவது உடையவனுக்கே உரிமை என்று கிடப்பாளொருத்தியை எழுப்பும் பாடல் (நித்யர் நிலை)

தான் சிறையிட்டு வைத்திருந்த எமன் வாயிலே தானே விழுந்தான் கும்பகர்ணன். உறங்குபவர்களுக்குத் தலைவனான அவனும், 'உன்னுடன் உறக்கத்திலே போட்டி போட்டு உன்னை ஐயிக்க மாட்டாமல், தன் தோல்வியை ஒப்புக் கொண்டு தன் உறக்கத்தையும் உனக்குத்தந்து போனானோ? அவனுடைய துயிலென்றால் உன்னுடையது பெருந்துயில் ஆகும். அவனுக்கு ஆறுமாதம் உறக்கமும் பிறகு விழிப்பும் ஏற்படும். உனக்கு அதுவுமில்லையோ? ஸாதந பக்தியைப் பற்றாதே ஸாத்ய பக்தியை அடைந்தவள் நாங்கள் கூப்பிடும்

கூக்குரலைக் கேட்ட பின்பும் உறங்குவதற்கு என்ன காரணம்? அடியார் குழாங்களை உடன் கூடுவதென்று கொலோ? தொண்டரெல்லீரும் வாரீர் என்று நீ முன்பு அநுட்டித்துப் போந்த வற்றை அழகாக அநுட்டித்துக் காட்டுகிறாய்! தன் ஆத்மாவை தனித்து அனுபவிக்கும் கைவல்ய மோட்சமோ உனக்குப் பிரயோசனம்? உன்னுடைய பேற்றையும் பாராது, எங்களுடைய ஆற்றாமையையும் நோக்காது பகவானுடைய மேன்மையையும் பாராமல் நீ உறங்குவதற்கு என்ன பிரயோசனம்? என்று இவளை எழுப்புகின்றனர்.

எங்கள் ஆர்வத்திற்காக உணராவிட்டாலும் உன் பேற்றுக் காகவழ உணர வேண்டாவோ? நாங்கள் நோன்பிற்குச் செல்லா மையை அறிந்த பின்பும், எழுந்திரா தொழிவதேன்! எம்பிரான் பிறருக்காக உணர்ந்தருளுபவன். ஸம்ஸாரிகள் தங்களுக்காக உணர்வார்கள். உனது உறக்கம் இரண்டிலும் சேராததாயிருக் கிறது. உனது பெருமையினால் ஊரரெல்லாரும், பகவானின் அநுபவத்தைப் பெற்றுப் போந்தார்கள். ஆகையால் நீ துயில் நீங்கி எழுந்திருப்பாயாக!.

கிருஷ்ணனும் கூடக் கொண்டாடும்படி பெண்களுக்குரிய அனைத்து குணங்களும் பொருந்தி விளங்குபவள். அவன் கிடந்த படுக்கையென்று அதனை அணைத்துக் கொண்டு கிடக்கிறாயே இதென்ன அறிவுக்கேடு. கண்ட இடத்திலெல்லாம் நெல் விளைந்து கிடக்க, உதிரி நெல் பொறுக்குவதைப் போன்ற செயலைச் செய்கிறாயே உணர்ந்து எழு என்று எழுப்புகின்றனர்.

'துராத்மாக்களுக்கு மனத்தில் ஒன்று வாக்கில் மற்றொன்று காரியத்தில் வேறொன்றாயிருக்கும்; மகாத்மாக்களுக்கு

மனத்திலொன்று வாக்கிலும் ஒன்று, காரியத்திலும் ஒன்றேயா யிருக்கும்'.

மேற்கூறிய ஒழுக்கத்தினை மறந்தவளே! நான் முதன் முதலில் எழுந்து எல்லாரையும் எழுப்புகிறேன் என்று சொல்லி வைத்த நீ நாங்கள் எழுந்து வந்து எழுப்பும் போதும் மறுத்துப் பேசுவது வெகு அழகாயிருக்கிறது! எங்களை உஜ்ஜீவிப் பிக்கைக்காக எழுந்திருக்க வேண்டும் உன்னைப் போல நாங் களும் கிருஷ்ணனும் விரும்பத்தக்க அனைத்து நலன்களும் பெற்று பூர்ணைகளாவதற்காக எழுந்திருக்க வேண்டும் என்று எழுப்புகிறார்கள். எல்லாப் பெண்களின் கூட்டத்தையும் காண ஆசைப்பட்டிருப்பவள். வைணவக் குழாத்தைக் காண்பதே கண்படைத்த பிரயோசனம் என்றிருப்பவள். எழுப்ப வந்தவர் களையும், எழுப்பவொண்ணாதபடி செய்யும் குரலினிமை வாய்ந்தவள். கிருஷ்ணனைப் பிரிந்ததாலும், உன்னைக் கண்ணுறாமையாலும் துவண்டுள்ள நாங்கள் கூறும் ஆர்வச் சொல் கேட்டும் கண்ணுறங்குகிறாயே! உத்தேச்யமானது கைவரப் பெற்றால் உறங்கு வாருண்டோ? எழுந்திருப்பாயாக! என்கிறார்கள் பெண்கள் என்று கோதை நாச்சியார் உயிரின் இயல்புகளாக பெண்களின் நிலையில் அமைத்து, ஆறாம் பாடல் முதலாக பதினைந்தாம் பாடல் ஈறாக விளங்குகிறார்.

## திருப்பாவையில் தடை

'செய்யாதன செய்யோம்' என்று கூறினாற் போல முன்னோர் செய்தவற்றினின்று மாறுபட்டு நடப்பது இறைவனை அடைவதற்குத்

தடையாகும். எனவே இறைவனை அடைவதற்கு இறைவன் அடியார்களை முன்னிட்டுக் கொண்டு அடைய வேண்டும் என்று முன்னோர் மொழிந்த முறையைத் தவறாது கடைப்பிடிக்கின்றனர் (திருப். 16)

இறைவனைத் தவிர மற்ற அழியக் கூடிய செல்வங்களில் ஆசை கொள்வதும் இறையனுபவத்திற்குத் த்டை ஆகும். இத்தடை நீங்க, தாரக, போஷக, போக்யங்கள் அனைத்தும் கண்ணனையுடையவராகிய நந்தகோபாரால் அளிக்கப்பெறு பவை என்பது திருப்பாவை பதினேழாம் பாடலில் பேசப்படுகிறது.

பிராட்டியாகிய தாயாரின் அடிபற்றாது இறைவனைப் பற்றுவதும் பேற்றுக்குத் தடையாகும்.

இராமாயணத்தில் பிராட்டியிடம் தஞ்சம் புகுந்த காகாசுரன் உய்வடைந்து போனான். ஆனால் பிராட்டியின் அருட்கண் பார்வை பெறாத இராவணன் முடிந்து போயினான்.

> இவள் ஸன்னிதியாலே காகம் தலைபெற்றது அது
> இல்லாமையாலே இராவணன் முடிந்தான்[14]

இக்கருத்தைப் பின்பற்றியே ராமாநுசரும் தமது கத்யத்தில் முதலில் பிராட்டியைச் சரணம் புகுருகிறார்

> பகவந் நாராயண அபிமத அநுரூப ஸ்வரூப, ரூப குண
> விபவ ஐசவர்ய சீலாத்யநவதிக அஸங்க்யேய

14. . பிள்ளைலோகச்சார்யர், முமுட்சுப்படி, சூ.எண். 135

கல்யாண குணகணாம் பத்மவநாலயாம் பகவதீம்
ச்ரியம் தேவீம் நித்யாந பாயிநீம் நிரவத்யாம்
தேவதேவதிவ்ய மஹிஷீம் அகில ஜகந்மாதரம்
அஸ்மிந் மாதரம், அசரண்ய சரண்யாம் அநந்ய
சரணச் சரணமஹம் ப்ரபத்யே[15]

இம்முறைப்படியே கோபியரும் நப்பின்னைப் பிராட்டியை முன்னிட்டுக் கொண்டு கண்ணனைத் துயிலெழுப்புகின்றனர். தன் அறியாமையால் சேதனன் செய்யும் குற்றங்களும் இறையனுபவத்திற்குத் தடையாகும். ஆனால் அத்தகைய குற்றங்களையும் குணமாகக் கொண்டு பகவத் அனுபவத்தைக் காட்டச் செய்யவல்லவள் பிராட்டி.

குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தாலே சீற்றம்
பிறந்தால் பொறுப்பது இவளுக்காக[16]

என்னும்படி நப்பின்னைப் பிராட்டியின் துணை கொள்கின்றனர் கோபியர்கள்.

இறைவனைத் தவிர பிற உயிர்களைத் தெய்வமாக எண்ணிச் சரண் புகுவது இறையனுபவத்திற்கு முக்கியத் தடையாகும். இருகையும் விட்டு, உன்னையே கதியாகப் பிடித்தோம் என்று நப்பின்னைப் பிராட்டியிடம் சரணாகதி செய்து கண்ணனை அருள் செய்ய வைக்க வேண்டுமென வேண்டுகின்றனர்.

---

15. எம்பெருமானார், சரணாகதி கத்யம், சூ.எண். 1
16. பிள்ளை லோகாசார்யர், முமுட்சுப்படி, சூ.எண். 127

## திருப்பாவையில் நெறி

### கையற்ற நிலை

> மாற்றார் உனக்கு வலி தொலைந்துன் வாசற்கண்
> ஆற்றாது வந்துன் அடிபணியுமா போலே
> போற்றியாம் வந்தோம்[17]

எதிரிகளும் உன்பலத்துக்குத் தோற்றவர்களாய் பலமிழந்து எதிர்வருகின்றனர். ஆயின் கோதை நாச்சியாரோ நாங்கள் உன் குணங்களுக்குத் தோற்றவர்களாய் உன்முன்னே வந்து நிற்கிறோம். உன்னை அடைய வேண்டும் என்பதால் ஏற்பட்ட ஆற்றாமை இருந்த இடத்தில் இருக்கவொட்டாது உன்னிடத்திலே எங்களை வரவிட்டது என்கிறார்.

> அங்கண்மா ஞாலத் தரச ரபிமான
> பங்கமாய் வந்து நின் பள்ளிக் கட்டிற் கீழே
> சங்கமிருப்பார் போல் வந்து தலைப் பெய்தோம்[18]

அழகானதாய், விசாலமானதாக, பெரியதாயுள்ள பூமியை ஆண்டுவரும் அரசர்கள், தான், தனது என்ற அஹங்காரம் குலைந்தவர்களாய், கண்ணனின் சிங்காசனத்தின் கீழே திரளாகக் கூடியிருப்பதைப் போல், கோபிகைகளாகிய நாங்களும், எங்களது நலங்களையெல்லாம் கைவிட்டு உன்னையே சரணாக வந்தடைந்தோம் என்று இறையனுபவத்தைப் பெறுவதற்கு முதல்தகுதியான கையற்ற நிலையைக் குறிப்பிடுகிறார்.

17. ஆண்டாள், திருப்பாவை பா. 21
18. மேலது பா. 22

பிரபத்தி நெறி

"அடி போற்றி, திறல் போற்றி, புகழ் போற்றி, கழல் போற்றி,
குணம் போற்றி, வேல் போற்றி"

என்று எம்பெருமானைப் போற்றி செய்து பல்லாண்டு பாடுகின்றார். அதுமட்டுமின்றி

என்றென்றுன் சேவகமே யேத்திப் பறை கொள்வான்
இன்றுயாம் வந்தோம்[19]

என்று உன்னுடைய வீர குணங்களையே ஏத்திக் கொண்டு எங்களுக்குப் பலனாகும். பறை கொள்வது ஊராருக்கான பலன் என்கிறார்.

'அருத்தித்து வந்தோம்' என்று உன்னிடத்தில் உன்னையே வேண்டி வந்தோம். எங்களுக்காக நீ பிறந்து காட்டவோ, ஒளித்து வளர்ந்து காட்டவோ, கொன்று காட்டவோ வேண்டாம். இருந்தபடியே உன்னைக் காட்டினால் போதும். உன்னிடத்தில் வேறொன்றை வேண்டி நாங்கள் வரவில்லை. உன்னையே நாடி வந்தோம் என்று கண்ணனையே வேண்டி நோன்பு நோற்று வந்தமையைக் கூறுவதால் பிரபத்தி நெறி பேசப்படுகிறது.

**திருப்பாவையில் வாழ்வு (பயன்)**

ஞால முழுதும் நடுங்கும்படி ஒலிக்கக் கூடிய பால் போன்ற வெண்சங்கங்கள், மிகப் பெரிய பறைகள், மற்றும் பல்லாண்டு பாடுவோர், கோல விளக்கு, கொடி, மேற்கட்டி இவை போன்ற

19. ஆண்டாள், திருப்பாவை பா. 24

நோன்புக்குத் தேவையான பொருள்களை நீயாக மனமுவந்து அருளவேணும் என்று கண்ணனிடம் வேண்டுகின்றனர்.

கண்ணனைக் காண்பதே தாங்கள் அடையும் பேறு என்பதோடு நோன்பிற்குப் பரிசாகத் தாம் பெறவேண்டிய சூடகம், தோள்வளை, தோடு, செவிப் பூ, பாடகம் என்பன வற்றைப் பட்டியலிட்டுக் காட்டுகின்றனர்.

கூடியிருந்து குளிர்ந்தே லோரெம்பாவாய்[20]

என்று கண்ணனுடன் கூடியிருப்பதே வாழ்வாகின்றது.

அறிவொன்றும் இல்லாத ஆய்க்குலத் துன்றன்னைப் பிறவி
பெறுந்தனைப் புண்ணியம் யாமுடையோம் குறைவொன்றும்
இல்லாத கோவிந்தா! உன்தன்னோடு உறவேல் நமக்கு
இங்கு ஒழிக்க ஒழியாது[21]

உன்னை அடைவதற்கான ஞான யோகமும், பக்தி யோகமும் செய்ய இயலாத நாங்கள், இந்த ஆய்க்குலத்தில் பிறந்து உன்னைத் தவிர வேறொரு கதியைக் கருதாதவர்கள், எல்லாருக்கும் புண்ணியமாகின்ற புண்ணியனைப் பற்றியிருக்கிறோம் என்கின்றனர்.

உனக்கும் எங்களுக்குமுள்ள உறவு எங்களாலும் ஒழிக்க முடியாது, உன்னாலும் ஒழிக்க முடியாது. நீயும், நாங்களும் சேர்ந்தும் ஒழிக்க முடியாது என்று கோபியர்கள் கூறுவதாக அமைக்கின்றார் கோதை நாச்சியார்.

20. ஆண்டாள், திருப்பாவை பா. 27
21. மேலது பா. 28

எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றன்னோடு
உற்றோமேயாவோம் உனக்கே நாமாட் செய்வோம்[22]

இப்பிறப்பில் மட்டுமின்றி, இப்பிறவிபோல எம்பெருமான் எவ்வளவு பிறப்பெடுத்தாலும், அங்கெல்லாம் அவனைத் தொடர்ந்து அடிமை செய்வதே கோபிகைகளாகிய நாங்கள் விரும்புவதாகும். எல்லாப் பிறப்பிலும் நீயே எங்களுக்கு உற்ற உறவாக வேண்டும். எங்களுடைய மகிழ்ச்சிக்காக அன்றி உன் விருப்பத்திற்காகவே உனக்கு அடிமை செய்ய விழைகின்றோம்.

தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே
எனக்கே கண்ணனை யான் கொள் சிறப்பே[23]

என்பதற்கேற்ப கோதை நாச்சியார் உரைப்பனவே எம்பெருமானை அடைவதன் வாழ்வாக அமைகின்றது.

**நாச்சியார் திருமொழியில் ஐம்பொருள் விளக்கம்.**

இறைநிலை

நம்மையுடையவன் நாராயணன் நம்பி[24]
பழுதின்றிப் பார்க்கடல் வண்ணன்[25]

திருவேங்கடம், திருமாலிருஞ்சோலை, திருவரங்கம், திருவில்லிப்புத்தூர் ஆகிய திவ்யதேசங்கள் பற்றிய பாடல்களில் இறைநிலை பேசப்படுகிறது.

23. நம்மாழ்வார், நம்மாழ்வார் திருவாய்மொழி (2-9-4)
24. ஆண்டாள், நாச்சியார் திருமொழி (6-8)
25. மேலது, (1-9)

உயிர்நிலை

காமனை வேண்டுதல், குயிலினை வினவுதல் மேகத்தைத் தூது விடுத்தல், முதலான ஆற்றாமை வெளிப்படும் திருமொழி களில் உரைக்கப்படுகிறது.

நெறி

நல்லவென் தோழி நாகணை மிசை[26]

என்ற பாசுரத்தின் மூலமாக இறைவனை அடைய வேண்டும் என்பதற்கு, ஓர் ஆசாரியனை அடைந்து அவர் மூலமாக மந்திர உபதேசம் பெற்றுவிடுவது ஒன்றே எளிய வழியாகும் என்ற தக்க நெறி உணர்த்தப்படுகிறது.

தடை

எம்பெருமானது உடைமையாகிய ஜீவான்மா, தானே எண்ணியவாறு தன் முயற்சியால் இறைவனை அடைய இயலும் என்று அதற்கான முயற்சிகளில் ஈடுபடுவது தடையாக அமைகின்றது. இக்கருத்து 'மற்றருந்தீட் கட்கறியலாகா' மற்றும் கண்ணனென்னுங் கருந்தெய்வம் திருமொழிகளில் கூறப்படுகிறது.

வாழ்வு

கோதை நாச்சியார்

பருந்தாட்களிற்றுக் கருள்செய்த
பரமன்றன்னை பாரின்மேல்
விருந்தாவனத்தே கண்டமை
விட்டுசித்தன் கோதை சொல்[27]

என்று உரைத்தன் மூலம் இப்பாருலகில் பரமனைக் கண்டு, அவனடி பற்றி, இறை மற்றும் இறையடியாருக்கான பணிகளில் ஈடுபடுவதே சீவான்மா இவ்வுலகில் பெறும்வாழ்வு (பயன்) என்பது தெளிவாகின்றது.

26. மேலது (10-10)
27. மேலது (14-10)

# துணை நூற் பட்டியல்


1. அண்ணங்கராசாரியார் ஸ்வாமி — நாச்சியார் திருமொழி திவ்யார்த்த தீபிகை, கிரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம். முதற்பதிப்பு - 1977.

2. அப்பன் ஸ்ரீநிவாஸ ராமாநுஜதாசர் — திருப்பாவை உள்பொருள் விளக்கவுரை, ஸ்ரீமான் கே.ராமச்சந்திரன் (பதிப்பு ஆசிரியர்), புதுப்பேட்டை (வழி), நாட்டிரம்பள்ளி. முதற்பதிப்பு - 1965.

3. அரங்க சீனிவாசன் — அறிய வேண்டிய ஐம்பொருள் அன்னை நாகம்மை பதிப்பகம், 2/141 கந்தசாமி நகர், பாலவாக்கம், சென்னை - 600 041. முதற்பதிப்பு - 1993.

4. அருளாளப்பெருமாள் எம்பெருமானார். — ஞானஸாரம் (நித்யானுஸந்தானப் பாசுரங்கள் தொகுப்பு) பாலாஜி அண்டு கம்பெனி, சென்னை. முதற்பதிப்பு - 1980.

5. இறையனார் — இறையனார் அகப்பொருள் திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை - 1. முதற்பதிப்பு - 1953.

6. எஸ்.கிருஷ்ணவேணியம்மையார் — வில்லிபுத்தூர் விளக்கு ஸ்ரீவில்லிபுத்தூர் தேவஸ்தான வெளியீடு, முதற்பதிப்பு - 1959.

7. எஸ். கிருஷ்ணவேணியம்மையார் — பெரியாழ்வார் பெண்கொடி,
ஸ்ரீவைஷ்ணவ மகா சங்கம்,
நாகப்பையர் தெரு,
திருவட்டீஸ்வரன் பேட்டை,
திருவல்லிக்கேணி, சென்னை.
முதற்பதிப்பு - 1944.

8. ந. சுப்பு ரெட்டியார் — ஆழ்வார்களின் ஆராஅமுது
வேங்கடம் பப்ளிகேஷன்ஸ்,
அண்ணா நகர், சென்னை.
முதற்பதிப்பு - 1987.

9. திருவள்ளுவர் — திருக்குறள்
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் லிமிடெட்
சென்னை. முதற்பதிப்பு - 1987.

10. பன்னிரு ஆழ்வார்கள் — நாலாயிரத் திவ்வியப்பிரபந்தம்,
திருவேங்கடத்தான் திருமன்றம்,
வெளியீடு
32, பெருமாள் முதலி தெரு,
இராயப்பேட்டை, சென்னை.
முதற்பதிப்பு - 1973.

11. சி. பாலசுப்பிரமணியன் — ஆண்டாள்
சொர்ணம்மாள் நினைவுச்சொற்
பொழிவுகள்,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலை நகர்.
முதற்பதிப்பு - 1984.

12. பாவலர் மணி சித்தன் — மேதை கம்பனும் கோதைப் பிரா[illegible]
புதுவைக் கம்பன் விழா
வெளியீடு, புதுவை.
முதற்பதிப்பு - 1994.

13. பிள்ளை லோகாசார்யர் — தத்வத்ரயம்
ஸ்ரீவைஷ்ணவ நூற்பதிப்புக் கழகம்
நெ 3-4, நல்லண்ணமுதலி தெரு
சௌகார் பேட்டை, சென்னை.
முதற்பதிப்பு - 1932.

14. பிள்ளை லோகாசார்யர் — அர்த்த பஞ்சகம்
ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாய
க்ரந்த நிலையம்,
நெ.3. பைராகி மடம்கோவில்தெரு
சௌகார் பேட்டை, சென்னை.
முதற்பதிப்பு - 1932.

15. பிள்ளை லோகாசார்யர் — முமுட்சுப்படி
பூமகள் விலாச அச்சுக் கூடம்,
சென்னை. முதற்பதிப்பு - 1939.

16. பெரியவாச்சான்பிள்ளை — நாச்சியார் திருமொழி
வ்யாக்யானம்
ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்
வெளியீடு,
3B, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி,
முதற்பதிப்பு ஜய சித்திரை மாதம்.

17. மணவாளமாமுனிகள் — உபதேசரத்தினமாலை
(நித்ய அனுசந்தான பாசுரங்கள்
தொகுப்பு) பாலாஜி அண்டு
கம்பெனி, சென்னை.
முதற்பதிப்பு - 1980.

18. டி.எஸ். ராஜகோபாலன். — நாச்சியார் திருமொழி உரை
பைலட் பப்ளிகேஷன்ஸ் வெளியீடு
சென்னை. முதற்பதிப்பு - 1985.

19. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் — திருப்பாவை வ்யாக்யானம்
ஸ்ரீவைஷ்ணவஸுதர்சனம்வெளியீடு
3B, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.
முதற்பதிப்பு - பிலவ - மார்கழி.

20. புலவர் செந்துரை முத்து — தஞ்சை வாணன் கோவை
மீனாட்சி பதிப்பகம்,
புதுக்கோட்டை. பதிப்பு - 1969.

# இந்நூலாசிரியரைப் பற்றி



இந்நூலாசிரியர் சிறந்த வைணவக் குடும்பத்தில் 6.10.1971-ல் பிறந்த்வர். தமது இளமைக் காலம் முதலே வைணவத்தின் பால் மிகவும் ஈடுபாடு கொண்டவர். 1992ஆம் ஆண்டு முதல் கோவை. தியாகி. என். ஜி.ஆர் நினைவு உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றிவருபவர். "ஆண்டாள் நாச்சியார் பாடல்கள் குறித்து கோதை வாய்த் தமிழில் வைணவக்கோட் பாடுகள்" என்ற தலைப்பில் ஆய்வு செய்து M.Phil., பட்டம் பெற்றவர். ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ அஞ்சலகல்வி இயக்ககம் மூலம் மூன்றாண்டு வைணவக் கல்விப் பாடத்திட்டத்தில் பயின்று பிரபன்னா- ஸ்ரீ வைஷணவ ஸ்ரீ பட்டத்தைப் பெற்றவர். "திருவாய் மொழி, திருவிருத்தம் - ஓர் ஒப்பீடு," என்ற த்லைப்பில் முனைவர் பட்டத்திற்கான ஆய்வு மேற்கொண்டிருப்பவர். இவர்தம் முதல் முயற்சியாக இந்நூல் வெளிவருகின்றது.